# இராமாநுசக் கவிராயர் ஆய்வுக் கோவை



மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகக் கருத்தரங்கம்

2013 பெப்ருவரி 7,8


**மாநிலத் தமிழ்ச் சங்கம்**

150, திருவனந்தபுரம் சாலை,

பாளையங்கோட்டை - 627 002.

468

# இராமாநுசக் கவிராயர் ஆய்வுக் கோவை

920

பதிப்பாசிரியர் :
பேராசிரியர் முனைவர் பா.வளன் அரசு
தலைவர், உலகத் திருக்குறள் தகவல் மையம்,
பாளையங்கோட்டை - 627 002.
பேசி : 75983 99967

கதிரவன் பதிப்பகம்
3, நெல்லை நயினார் தெரு
பாளையங்கோட்டை - 627002.
பேசி : 75983 99967

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | இராமாநுசக் கவிராயர் ஆய்வுக்கோவை |
| பதிப்பாசிரியர் | : | பேராசிரியர் முனைவர் பா.வளன் அரசு |
| எழுத்து | : | 12 புள்ளி |
| தாள் 1/8 | : | தமிழ்நாடு அச்சுப் படித் தாள் 13.7 |
| பக்கங்கள் | : | 148 |
| சுவடிகள் | : | 500 |
| அச்சும் அமைப்பும் | : | விமல் அச்சகம்<br>திருச்செந்தூர்ச் சாலை,<br>பாளையங்கோட்டை - 627 002.<br>கைப்பேசி : 94861 90814 |
| வெளியீடு | : | மாநிலத் தமிழ்ச் சங்கம்<br>150, திருவனந்தபுரம் சாலை,<br>பாளையங்கோட்டை - 627 002. |
| வெளியீட்டு நாள் | : | 7.2.2013 |
| அன்பளிப்பு | : | ரூ. 100/- |



# பொருளடக்கம்

# பதிப்புரை

திருநெல்வேலிச் சீமையில் தோன்றிய பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர் (1905-1985) பெருமிதம் தரும் தமிழ் ஏந்தலாகத் திகழ்கிறார். உலகு புகழ் பெருங்காப்பியமாக விளங்கும் காந்தி காவியத்தை ஒன்பது காண்டங்களாகவும் பன்னீராயிரத்து இருநூற்று எண்பத்தைந்து பாக்களாகவும் நல்கியுள்ளார். அண்ணல் காந்தியடிகளின் அடிச்சுவட்டில் வாழ்ந்த பெருந்தகையாகிய இராமாநுசக் கவிராயர், முப்பத்தோர் ஆண்டுகள் பேருழைப்பால் ஈந்துவந்த எழிற்பனுவல் அண்ணல் காந்தியின் எழுபத்தொன்பது ஆண்டு வாழ்வியலை விரித்துரைக்கிறது.

பூகந்த வெண்பா முதலாய சிற்றிலக்கியங்கள் தந்த கவித்தென்றல், கோவிந்த பசனையும் துளவன் துதித் பாத்தொகுப்பும் தந்த சான்றோனாகத் துலங்குகிறார். பாரதியார் கூறியதுபோன்று தீஞ்சொற் கவிதையஞ் சோலை தனில் தெய்வீக நன்மணம் கமழ்கிறது.

நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கும் ஆண்டாளின் திருப் பாவைக்கும் விளக்கம் வழங்கிய உரையாசிரியராகவும் கவிராயர் ஒளியுடன் மிளிர்கிறார். தீந்தமிழுடன் ஓங்குபுகழ் ஆங்கிலத்திலும் புலமைநலம் பொருந்திய கவிராயர், காந்தியாரின் வாழ்வியலைப் பாவடிவிலும் நாடகப் பாங்கிலும் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். கம்பரது இராமகாதையில் ஐயாயிரம் பாக்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வைத்துள்ளார்.

ஏழை எளியோரின் நல்வாழ்வுக்காகப் பொருளுதவி புரிந்தும் நூறு ஏக்கர் நிலம் வழங்கியும் நம்மாழ்வார் அவை நிறுவியும் பல கல்வி தந்து உலகை உயர்த்திட விழைந்து உழைத்துள்ளார். அன்னாரின் எழுத்தோவியங்கள் பலவற்றை ஆராயும் நோக்குடன் இந்த ஆய்வுக்கோவை வெளிவருகிறது; ஒளி தருகிறது.

பா.வளன் அரசு
பதிப்பாசிரியர்

**மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்**

**திருநெல்வேலி - 627012.**





**துணைவேந்தர்**

**முனைவர் ஆ.கு.குமரகுரு அவர்களின்**

# அணிந்துரை

நெல்லை மாவட்டம் தமிழுக்குச் செய்த அரும் பணிகள் பல. இலக்கிய இலக்கண உலகில் நெல்லை மாவட்டத்தில் தடம் பதித்தோர் குறிக்கத்தகுந்தோர் ஆவர். மாறோக்கத்து நப்பசலையார், நம்மாழ்வார், திரிகூட இராசப்பக் கவிராயர், முக்கூடற்பள்ளு ஆசிரியர், குமரகுருபரர் போன்ற கவிஞர்கள்- சேனாவரையர், அடியார்க்கு நல்லார், சிவஞான முனிவர் போன்ற உரையாசிரியர்- பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, அமரகவி பாரதியார், வ.உ.சி. போன்ற கவிஞர்கள்- புதுமைப்பித்தன், சி.சு.செல்லப்பா, பூமணி, வண்ணநிலவன், சோ.தருமன் போன்ற படைப்பாளிகள் - வையாபுரிப்பிள்ளை, சேதுப்பிள்ளை, கா.சு.பிள்ளை, தொ.மு.சி.இரகுநாதன், சி.சு.செல்லப்பா போன்ற திறனாய்வாளர்கள்- வீரமானிவர், கால்டுவெல், போப்பையர் போன்ற வெளிநாட்டறிஞர் பெருமக்கள் ஆகியோரின் தமிழ்ப்பணி நினைக்கத்தகுந்தது.

இந்த அடிச்சுவட்டில் நெல்லையில் தொடர்ந்து தமிழ்ப்பணியில் தடம் பதித்தவர் ‘கவித்தென்றல்’ இராமாநுசக் கவிராயர். காப்பிய வரிசையில் தனிச்சிறப்பு மிக்க- உலகளாவிய புகழ் உடைய ‘காந்தி காவியம்’ என்ற ஒப்பரிய நூலைப் படைத்தவர். மேலும் பூகந்த வெண்பா, கட்டபொம்மன் காதை, கோவிந்த பசனை, திருப்பாவை வியாக்கியானம், திருவாய்மொழி வியாக்கியானம் மற்றும் Lyrics of life, Mudin, Bharath Reborn ஆகிய ஆங்கில நூல்களும் எழுதி நெல்லை மாவட்டத்திற்குப் புகழ் சேர்த்தவர் இப்பெரும்புலவர்.

இத்தகைய சொல்லேர் உழவரின் அரும்பணியைப் பாராட்டும் வகையில் சுந்தரனார் பல்கலைக்கழகமும, மாநிலத் தமிழ்ச் சங்கமும் இணைந்து நடத்துகிற தேசியக் கருத்தரங்கத்தின் கட்டுரைகளைத் தொகுத்து ஆய்வு நூலாக வெளியிடுவது அறிந்து மகிழ்கிறேன்.

இக்கருத்தரங்கில் கவிஞரின் மகன் கள்ளப்பிரான் முதலான வழித்தோன்றல்களும் கலந்து கொள்வதோடு கட்டுரைகளும் வழங்குவது இன்னும் மகிழ்வினைத் தருகிறது.

இக்கருத்தரங்கில் தமிழ் அறிஞர்கள் கலந்து கொண்டு கவிஞரின் பல்வேறு பரிமாணங்களை அலசி ஆய்ந்து ஆய்வுரைகளாக வழங்குவது பெருமிதம் தருகிறது.

கருத்தரங்க ஆய்வுரைகள் உடனடியாக நூலாக வருவது பெரும் பயனுடையது. கருத்தரங்க அமைப்பாளர்கள் அனைவரையும் வாழ்த்துவதோடு கருத்தரங்கம் சிறப்புறவும் என் வாழ்த்துக்கள்!
தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு இந்த ஆய்வுக் கோவை பெரிதும் பயன்தரும் என நம்புகிறேன்.

வாழ்த்துக்களுடன்

ஆ. கு. குமரகுரு

# வாழ்த்துரை

**சீர்மிகு அரங்கநாயகி அம்மையார்**

சிறந்த கவிஞரும், ஆன்மிகச் செம்மலும், காந்தியவாதியுமான பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர் நூல்களை இரண்டு நாள் கருத்தரங்காகத் திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகமும் மாநிலத் தமிழ்ச் சங்கமும் இணைந்து நடத்துவது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

காட்சிக்கு எளியனாய், கவிதையிலே பெருங்கடலாய், ஆழிமுதல்வன் அருங்கழலே நினைவாக, ஏழை எளியவரின் இன்னல் நீக்கும் இனியவராய், வள்ளுவராக வாழ்ந்து காட்டிய இராமாநுசக் கவிராயரின் மூத்த புதல்வியாய் அவருடன் பழகும் பேறுபெற்றேன் நான். அவர்தம் அருமை உலகம் அறியவில்லையே என்ற ஆதங்கம் எனக்கு உண்டு. நம்மாழ்வார் போலவும், கம்பனைப் போலவும், புகழேந்தி போலவும், ஆண்டாள் நாச்சியார் போலவும், தமிழிலும், மில்டன், சேக்குவீயர் போன்று ஆங்கிலத்திலும் அவர் யாத்துள்ள நூல்கள், கலை வாழ்க்கைக்காக என்பதை அழகாகப் பறைசாற்றுவனவாக அமைந்துள்ளன.

காந்திகாவியம் எழுதியது மட்டுமல்லாமல் அந்த அறவழியிலே, வள்ளுவரின் வழிகாட்டலிலே வாழ்ந்து காட்டிய பெரும்புலவரை இன்றைய இளைய தலைமுறையினருக்கு எடுத்துச் செல்லும் ஒரு மகத்தான சேவையாக இந்தக் கருத்தரங்கு அமைகிறது. அது வெற்றிகரமாக, அரங்கம் நிறைந்த அறிஞர்களும், ஆய்வு மிளிரும் பொழிவுகளும், இலக்கியத்தேன் சொட்டும் நிகழ்வுகளுமாகத் துணைவேந்தர், தமிழ்ப் பேராசிரியர்கள், தமிழ் அறிஞர்கள், தமிழ் ஆர்வலர்கள் எல்லோரும் பங்கு பெற்றுச் சிறப்பாக விளங்க என் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# இராமாநுசக் கவிராயர் நாமம் வாழ்க

பாவலர் இளமுனைவர் த.மு.சா.காசாமைதீன்
நெல்லை மாவட்டச் செயலாளர், உலகத்திருக்குறள் பேரவை.

ஆயிரம் காவியம் கற்றார் வைணவப்
பாயிரம் எனமுன் நின்றார் உண்மை
தோயுறும் மனத்தில் மாசற மீண்டார்
வாயுறும் சொற்களில் தீதுகள் அண்டார்!
கால்வழி பரவும் திசைகள் தோறும்
நூல்வழி நுகரும் நினைவுகள் தோறும்
நால்வழி கண்ட முயற்சிகள் தோறும்
மால்வழி ஒன்றே மென்மேல் தேறும்!
புனிதர் காந்தியின் பொற்புறு வாழ்வும்
இனிதுறு கம்பன் இலக்கியப் புனைவும்
தனியொரு தனிமையில் சட்ட நுணுக்கமும்
மனித நேயமும் மறவா துற்றார்!
காந்தி வாழ்க்கை காவியம் தந்தார்
சாந்தி வாழ்வை அதனுள் கற்றார்
ஈந்திட எனவே இருகை பெற்றார்
மாந்திட உறவெனும் கிளைபல படர்ந்தார்!
துளவன் துதிகோ விந்தன் பஜனை
விளங்கும் திருப்பா வைதிரு வாய்மொழி
விளக்கம் மனப்பூ கந்த வெண்பா
அளக்க ஒண்ணா அருந்தமிழ்ப் பாக்கள்!
தமிழால் வைணவம் தழைத்திட வைணவத்
தமிழே எங்கும் ஒலித்திட வாழ்வின்
அமிழ்தாம் பாப்பல் லாயிரம் ஒவ்வோர்
துமியும் உயிரில் துளிர்த்திட அளித்தார்!
வான மளந்திடும் அவர்பெரும் புகழே
ஞான மளந்திடும் அவர்அறி வாற்றல்
தான மளந்திடும் அவர்கண் ணோட்டம்
ஊன மிலாத்தமிழ் மாக்கவி ராயர்!
தாமாய்ப் புலமை தழுவிடப் பெற்றார்
இராமா யணக்கடல் மூழ்கித் திளைத்தார்
தேமா தோற்கும் நூற்பல நுவன்றார்
இராமா நுசக்கவி நாமம் வாழ்க!

# 1. இராமாநுசக் கவிராயர் ஓர் இலக்கியக் களஞ்சியம்

முனைவர் பா.வளன் அரசு,
இணைச் செயலாளர், மாநிலத் தமிழ்ச் சங்கம்,
பாளையங்கோட்டை – 627002.

## 1. முன்னுரை :

இந்தியத் துணைக் கண்டத்தில் தமிழ்நாட்டுச் சான்றோர் ஒருவருக்கு 1985ஆம் ஆண்டு இலக்கியத்திற்கான நோபல் பரிசு கிடைக்க இருந்தது. அன்னார் காலமானதால் அவ்வாய்ப்பு தவறி விட்டது என்பர்! திருநெல்வேலியைச் சார்ந்த பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர் எண்பது ஆண்டுகள் மாண்புற வாழ்ந்து, பத்து நூல்களைத் தமிழிலும் ஏழு நூல்களை ஆங்கிலத்திலும் வழங்கியுள்ளார். பழமைக்கும் புதுமைக்கும் உறவுப்பாலம் உருவாக்குவது போன்று அவருடைய எழுத்தோவியங்கள் அமைந்துள்ள. பனுவல் ஆசிரியர், காப்பிய ஆசிரியர், இசை ஆசிரியர், உரை ஆசிரியர், பதிப்பாசிரியர், மொழி பெயர்ப்பு ஆசிரியர், நாடக ஆசிரியர், கணித ஆசிரியர், ஆன்மிகமாம் பெருந்தமிழ் ஆசிரியர் என்று பன்முகத் தமிழ்த் தொண்டாற்றியவர். கவிராயர் வழக்கறிஞராக வாழ்வைத் தொடங்கினாலும் விழுமிய எழுத்தாளராகவே எப்போதும் ஈடுபாட்டுடன் செயலாற்றியவர், திருமங்கை ஆழ்வார் தெரிவித்தவாறே, தான் கண்டு கொண்ட நாராயணா என்னும் திருப்பெயரை நெஞ்சத்தாலும் நாவாலும் ஓயாது உச்சரித்து வந்த உயர் பண்பாளர். திருமால் தொண்டராக அமைந்தாலும், ஒன்று பரம்பொருள், நாம் அதன் மக்கள், உலகு இன்பக்கேணி என்னும் பாரதியாரின் குறிக்கோளுடன், பிற சமயங்களையும் தேர்ந்து தெளிந்து சமய நல்லிணக்கச் சான்றோனாக வாழ்ந்த அருளாளர், பாவலராகவும் பண்பாட்டுக் காவலராகவும் ஏழை எளியோரிடம் அன்பு பாராட்டும் ஆர்வலராகவும் விளங்கிய இராமாநுசக் கவிராயரின் எண்பது ஆண்டு (1905 – 1985) வாழ்வும் பணியும் பெருமிதம் தருபவை ஆகும்.

**உ. பனுவல் ஆசிரியர் :-**

வழக்கறிஞர் கள்ளப்பிரான் - அரசாழ்வார் மைந்தனாக 25.12.1905 அன்று தோன்றிய இராமாநுசர், திருப்பாற்கடல் நாதக் கவிராயரிடம் நாலாயிரத் தெய்வப் பனுவல்களைக் கற்று வைணவத் தமிழ்ப் புலமை பெற்றார். திண்ணைப் பள்ளிப் படிப்பை ஆசிரியர் சிவக்கொழுந்து வாயிலாகப் பயின்றார்; தொடர்ந்து நெல்லை மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளியில் படித்தார். அகவை மூன்றிலே திருஞானசம்பந்தர் பாடத் தொடங்கியதாகவும் அகவை ஐந்திலே குமரகுருபரர் பாடியதாகவும் அகவை ஏழிலே பாரதியார் பாடல் எழுதியதாகவும் வரலாற்று ஏடுகள் விளம்புகின்றன. இராமாநுசர் பள்ளிக் கூடத்தில் ஒன்பதாவது வகுப்பில் பயிலும் போதே எழுதிய பாடல் விருத்தமாக விளங்குகிறது :

விண்ணிடை மதியம் தோன்ற வீங்கிளந் தென்றல் வீச
எண்ணரும் இன்பம் எல்லாம் இசையுடன் இயைந்து இந்த
மண்ணிடைப் பரந்த சோலை மலர்களின் மணமும் வீசப்
பண்ணொடும் புணர்ந்த கீதம் மெல்லெனப் பரந்த தம்மா!

மாலைப் பொழுதின் இயற்கை எழிலையே ஓவியமாகத் தீட்டியுள்ளார். விளையும் பயிர் முளையிலே தெரியும் என்னும் முதுமொழிக்கு ஏற்ப வருங்காலத்தில் ஒரு பெரும்புலவராக உருவாவதை உறுதி செய்தார். செல்லம்மாளை வாழ்க்கைத் துணையாகப் பெற்று மக்கள் ஐவரைப் பெற்றார். முதல் மனைவியின் மறைவுக்குப் பின் விசாலாட்சியை மணந்தார். நாற்பது அகவையிலே இரண்டாம் மனைவியை இழந்தார். வேதனையின் விளிம்பில் வாழ்ந்த இராமாநுசர், தெய்வ வழிபாடு மிக்கவராகவும் இதிகாசங்களையும் இலக்கியங்களையும் பயிலும் நாட்டம் நிறைந்தவராகவும் விளங்கினார். அண்ணல் காந்தியடிகளைத் தன் ஞான குருவாக ஏற்றுப் போற்றினார். இராமாநுசக் கவிராயர் தமிழிலும் ஆங்கிலத்திலும் தனிப்பாடல்கள் பலவற்றை எழுதி இருநூல்களாக நல்கியுள்ளார். வாழ்வியல் பாக்களாக விளங்கும் அவற்றில் கவிராயரின் இறைப்பற்று, இயற்கை ஈடுபாடு, வாழ்வியல் நுட்பம், கலையுணர்வு ஆகியவை புலனாகின்றன.

நெல்லை மாவட்டத்தில் பொதிகை மலையிலிருந்து புறப்பட்டு அறுபது கல் தொலைவில் புன்னைக் காயலில் சென்று சேருவது பொருநை ஆறு. அருமறைத் தமிழ் செய்த சடகோபராம் நம்மாழ்வார் பொருநை ஆறு என்று அதனைக் குறிப்பிட்டார்; இராமகாதை எழுதிய சான்றோன் தாமிரபரணி என்றார்; சீரிளந் தமிழின் செவ்வி முன் தோன்றல் என்று கவிராயர் புகழ்ந்து மகிழ்ந்துள்ளார். தாமிரச்சத்தும் சுவையும் பொருந்திய பொருநை ஆற்று நீர் மருத்துவ ஆற்றல் வாய்ந்தது.

தாமிரம் கலந்து தகைதணிந் தோர்க்கு
ஏமமெய்ப் பிணிகள் எழும்இடர் தீர்ப்பாய்
பூமலர் பொதிந்த பொற்பினால் போதம்
காமம் உட்கொள்ளும் கலவியும் மிகுப்பாய்

என்று விளக்கம் வழங்குவது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.

பூகந்த வெண்பாவினைப் பத்து படலங்களாகவும் ஓராயிரத்து பத்தொன்பது பாடல்களாகவும் நல்கியுள்ளார் இராமாநுசக் கவிராயர். விழுமிய ஒழுக்கம் கொண்ட பாவியத் தலைவன் பூகந்தன், குன்றம்படு தோளான் (5:11) என்று பாராட்டப்படுகிறான்; அவன் செம்பாணி – விம்பாணி ஆகிய இருபெண்மணிகளை மணந்திடும் வாழ்வியலைத் தந்துள்ளார்; உடல் அழகு, உயிர் அழகு ஆகியவற்றை மெய்யியல் நோக்கில் எழுதியுள்ளார்.

நீதி நெறியழகே நீளுயிரின் நல்லழகு
தீதிற் கலையழகோ தேருளத்தின் பேரழகாம்
பூத வடிவழகோ பொய்யழகாம் பொல்லழகின்
ஏதம் புல்வழிக்காண் நீ

துளவன் துதித் தொகுப்பு என்னும் பெயரால் கவிராயர் வழங்கியுள்ள தெய்வப் பனுவல், திருமாலின் மொழி கேட்டு, ஒளி பெற்று, அவ்வழி நடந்தால் வாழ்வு எழிலாகவும் இன்பப் பொழிலாகவும் திகழும் என்று நிறுவுகிறது. நாலாயிரத் தெய்வப் பனுவல் என்னும் பன்னீராழ்வார் பாக்களில் தோய்ந்த கவிராயரின் உள்ளம் அருள் வெள்ளமாகப் பரவுகிறது. மாந்தர் அனைவரும் இறைவனின் உறுப்புகளாக அமைந்துள்ளனர் என்னும் மாலியம் மானுடத்தை ஒருமைப்படுத்திப்

பெருமை செய்வது, தத்துவத்தின் ஒருமை முதலாய ஐம்பத்தேழு பாடல்களுடன் விளங்கும் **திருமால் வழி** என்னும் ஒரு பகுதிக்கு இராமாநுசக் கவிராயரின் மக்கள் கோதைநாயகியும் கள்ளப்பிரானும் சிறப்பாக உரை வரைந்துள்ளனர்; இறைவன் அடியார்க்குச் சூதிழைக்கில் சுணங்கான் (47), விரைந்து வந்து உதவுவான் என்பார் கவிராயர். ஊடல் நிலைபற்றிய பாடலுக்கு (25) விளக்கம் வழங்கும்போது, இறைநாட்டம் கொள்வது அரும்பாகவும், அவன் நெறி நடப்பது மலராகவும், உயிர் தூய்மையடைவது காயாகவும், முத்தியடைவது கனியாகவும் கொள்ளலாம் (ப.109) என்பது ஏற்றுப் போற்றத்தக்க செய்தி ஆகும்.

### 3. காப்பிய ஆசிரியர் :

அண்ணல் காந்தியின் மறைவுச் செய்தி கேட்டுக் கண் கலங்கிய இராமாநுசர், தம் குருவாகிய அண்ணல் காந்தியின் எழுபத்தொன்பது ஆண்டு வாழ்வியலை மகாத்மா காந்தி காவியம் என்னும் பெயரால் ஒன்பது காண்டங்களாகவும் பன்னீராயிரத்து இருநூற்று எண்பத்தைந்து பாடல்களாகவும் வெளியிட்டுள்ளார். முப்பத்தோராண்டுகள் (1948-1979) உழைப்பில் உருவாகிய இக்காப்பியம், தெண்டுல்கர் எழுதிய மோகன்தாசு கரம்சந்து காந்தி என்னும் ஆங்கில நூலை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. அருள், அஞ்சாமை, தியாகம், பொறுமை, நோன்பு, பயன் கருதாமை, மன்னிப்பு ஆகிய ஏழு கதிர் பரப்பி ஒளிநல்கும் காந்தியாரால் இருள் விலகியது; பேரொளி துலங்கியது. காந்தியாரிடத்திலும் வாய்மை, கொல்லாமை, நேர்மை ஆகிய விழுமியங்களிடத்தும் கவிராயர் கொண்டிருந்த பற்றினைக் காந்தி காவியம் புலப்படுத்துகிறது. நாட்டுவளம் பாடும் பெரும்புலவரின் இயற்கை ஈடுபாடு கருதத்தக்கது. வண்டும் தென்றலும் கீழைக்காற்றும் மின்னலும் கெண்டைமீனும் நண்டும் ஓடிவிளையாடுகின்றனவாம்;

தண்டண்டலை வண்டினுடன் தென்றல் விளையாடும்
கொண்டலொடு மின்னலது கூடி விளையாடும்
தொண்டுமதி யோடுந்தொடை மாலை விளையாடும்
கெண்டையொடு ஓடிவிளை யாடுமிள நண்டு (1:2:1)

ஒன்பது காண்டங்கள் உள்ள காந்தி காவியத்தில் இதயம் போன்று

தோன்றும் மீட்சிக் காண்டம் மூவாயிரத்து முந்நூற்றுப் பதினைந்து பாக்கள் உடையது; மங்களக் காண்டம் பதினான்கு பாடல்கள் கொண்டது. சத்தியோதயக் காண்டம் பதினான்கு படலங்களுடன் தென்னாப்பிரிக்காவில் காந்தியாரின் இருபத்தோராண்டு (1893-1914) வாழ்வை விளம்புவது. தனிமனிதராகச் சென்ற இளைஞர் காந்தி, தாம் மேற்கொண்ட சோதனைகளாலும் பட்ட வேதனைகளாலும் பெற்ற போதனைகளாலும் ஈட்டிய சாதனைகளாலும் மகாத்மா காந்தியாக உயர்ந்தார். தென்னாப்பிரிக்காவில் அண்ணல் காந்தி நிறுவிய தால்சுதாய் பண்ணையின் மாண்பு குறிப்பிடத்தக்கது.

ஆயிரம் பரப்பில் ஆங்கவிழ் நறவம் அருங்கனி மந்திகள் சுவைப்ப
தாயினும் மலரும் ஆவியும் ஓராமாய துண்மையினுமேல் நுண்மைத்
தூயதன் எழிலால் தொடர்புணர்வு அரிய தொல்லுருச் சொல்லினும்
அமையா
நேயநல் லிதமே நெஞ்சிடை நிகழ்த்து நிறைநலச்
சாந்தமெய்வனமே (3:10:3)

மேலைநாட்டு உடையுடன் இங்கிலாந்தில் வழக்கறிஞர் பட்டம் பெற்றவர் இளைஞர் காந்தி; குசராத்தி உடையோடு இந்திய அரசியலில் வலம் வந்தார்; தமிழகத்தின் மாமதுரைக்கு வந்தபோது தமக்கென ஓர் எளிய ஆடையினைத் தெளிந்து தேர்ந்து கொண்டார் என்று பெரும்புலவர் எடுத்தியம்புகிறார் (5:1:199-201)

உப்புக்கு ஆங்கில அரசு வரிவிதித்தபோது அதை எதிர்த்துப் போராடியவர் காந்தி. உப்புப் போராட்டம் மேற்கொண்ட காந்தியாரின் தண்டிச் செலவு பற்றி விரித்துரைக்கும் போது உணர்ச்சியும் சந்த வளமும் பொங்கிப் பொலிந்திடும் வண்ணம் கவிராயர் தம் உள்ளக் கிளர்ச்சியுடன் பாடுகிறார்;

தண்டிக்கடல் மண்டிக்கரை யண்டுமலை சிந்தும்
உண்டிக்குறும் பண்டிக்குவர் உதவுமுருக் கொண்டு
எண்டிக்கையும் அண்டிப்படை வென்றாவரவர் தன்பால்
கண்டிப்பற அண்டித்தவன் கழற்காலது கழுவ

மேலும் தண்டியில் உப்புக் காய்ச்சிய காந்தியாரை, எந்தை எம் இறைவன் ஏற்றும் எந்தல் (6:1:155) என்று பாடிப் பரவுகிறார்.

920



காந்தி காவியம் வெளியீட்டு விழா சென்னையில் நீதிபதி மகாராசன் தலைமையில் நடைபெற்றது. ஆந்திரப் பல்கலைக்கழகத் துணைவேந்தரும் சாகித்திய அகாதெமியின் துணைத்தலைவருமான அறிஞர் வே.இரா.சீனிவாசன் காந்தி காவிய நூலை வெளியீட்டுச் சிறப்புரை ஆற்றினார். நீதிபதி இசுமாயில் அவர்களும் சிலம்புச் செல்வர் ம.பொ.சிவஞானம் அவர்களும் பாராட்டிப் பேசினர். தொடர்ந்து இராமாநுசக் கவிராயருக்கு நாமக்கல் கவிஞர் மன்றம் சார்பில் கவித் தென்றல் பட்டம் வழங்கப்பட்டது. தினமணி (1.8.1976) இந்தியன் எக்சுபிரசு (21.8.1976), இந்து (3.8.1976) ஆகிய நாளிதழ்கள் எழுதிய மதிப்புரைகள் காப்பியச் சிறப்பைப் பாராட்டிப் போற்றியுள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் க.த. திருநாவுக்கரசு எழுதிய இருபது பக்க ஆய்வுரையினை அடிப்படையாகக் கொண்டு, சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலப் பேராசிரியர் முனைவர் பிரபாகர், காந்தி காவியம் எழுதிய இராமாநுசக் கவிராயருக்கு இலக்கியத்திற்கான நோபல் பரிசு வழங்குமாறு 1982 ஆம் ஆண்டு வேண்டுகை மடல் ஒன்றினைச் சுவீடன் நாட்டுக்கு அனுப்பியுள்ளார். 1982ஆம் ஆண்டு காந்தி காவியம் (Bharath Reborn) ஆங்கிலத்தில் எழுதப்பட்டுக் கவிராயரால் வெளியிடப்பட்டது. மேலும் மகாத்மா காந்தி என்னும் ஆங்கில நாடகத்தை ஐந்து களங்களாகவும் இருபத்தைந்து காட்சிகளாகவும் அமைத்து எழுதிய கவிராயரின் காந்தியக் கொள்கைப் பிடிப்பு வியந்து பாராட்டத்தக்கது.

கட்டபொம்மன் காதையினை ஓராயிரத்து நூற்று இருபத்தேழு பாக்கள் கொண்டதாகச் சீரார்ந்த வகையில் சித்திரித்துள்ளார். நெல்லை நகரின் மாண்பினை நவிலும் பாங்கு நினைந்து மகிழத்தக்கது.

நாண மாதர் நடையாடும் நளினம் விழியில் நவனாடும்
காணும் விழியும் கவிழ்ந்தாடும் காதற் கணவன் உளனாடும்
வீணில் காமம் விளையாடும் விழைவார் உள்ளத்து எழிலாடும்
பேணும் கற்பும் பீடாடும் பிழையில் நெல்லைப் பெருவீதி

விருத்தப்பாக்களால் அராகவன் கதையினை மூன்று காண்டங்களாகவும் பன்னிரு படலங்களாகவும் நூற்றுத் தொண்ணூற்றிரண்டு பக்கங்களில் அராவகனதளம் என்னும் பாவியத்தை ஈந்துள்ளார்; பூண்டிநாட்டு மன்னன் பூந்துழான் - ஊஞ்சனாதேவி ஆகியோரின் மைந்தன் அராகவன் கதையினைத் தத்துவ நோக்கில் வித்தகமாக வழங்கியுள்ளார்.

**4. இசை ஆசிரியர் :**

இராமாநுசக் கவிராயர் தம் பவளவிழா ஆண்டில் (1980) வெளியிட்ட கோவிந்தபசனை கீர்த்தனாமிர்தம் அவரது இசை ஈடுபாட்டையும் ஆர்வ மேம்பாட்டினையும் புலப்படுத்துகிறது. மனிதன் இறைவனைத் தொழும் முறையில் இங்கிதமும் எளிதானதும் ஆவது அவன் நாம சங்கீதர்த்தனமே என்பார். கவிராயர் நாற்பத்தைந்து கீர்த்தனைகளை எழுதி வெியிட்டுள்ளார். கண்ணனைச் சிந்தனை செய் மனமே எனப் பாடும் கவிராயர், கவிதை பெய்திடலாம், உயர் கணிதம் செய்திடலாம், கடலும் மலையும் அவனி மதிப்பும் பவனி வந்திடலாம்! என்று தாள இராக நுட்பங்களுடன் எடுத்து மொழிந்துள்ளார்.

**5.உரையாசிரியர் :**

ஆண்டாள் அருளிய திருப்பாவைக்கு விரிவுரை (1982) எழுதிய இராமாநுசக் கவிராயர், நம்மாழ்வார் எழுதிய திருவாய்மொழிக்கும் விளக்கம் (1983) நல்கியுள்ளார். திருமாலிடம் பேரன்பும் ஆழ்வார்களிடம் ஈடுபாடும் மிக்கவராக அவர் ஒளியுடன் மிளிர்வதை அவரது விரிவுரை புலப்படுத்துகிறது.

**6. பதிப்பாசிரியர் :**

கவிராயர் தாம் எழுதிய ஏடுகள் அனைத்தையும் தாமே தம் அச்சகத்தில் அச்சிட்டு வழங்கிய மதிப்புமிகு பதிப்பாசிரியர் ஆவார். அவரது அச்சகத்தில் திருக்குர்ஆன் அச்சிட்டு, தமிழ்ப் பதிப்பு ஒன்றையும் வழங்கியுள்ளார்.

**7. மொழிபெயர்ப்பு ஆசிரியர் :**

கவிராயர் தாம் எழுதிய காந்தி காவியத்தை ஆங்கிலத்திலும் ஆக்கியுள்ளார் (1982). கம்பராமாயணப் பாடல்கள் நாலாயிரம் கவிராயரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**8. நாடக ஆசிரியர் :**

தத்துவ தரிசனம் என்னும் பெயரால் 12.5.1984 அன்று கவிராயர் எழுதிய கையெழுத்துச் சுவடியில் இறைவன் துதி முதலாக அருத்த பஞ்சகம் முடிய பதினாறு இயல்கள் எழுபத்து மூன்று பக்க அளவில்

உள்ளன. உரை வரைந்திடும் திறம் வாய்ந்த கவிராயர், மூதின் என்னும் ஆங்கில நாடகம் எழுதியுள்ளார். அண்ணல் காந்தியடிகளின் வாழ்வியலையும் நாடக வடிவில் நல்கியுள்ளார்.

### 9. கணித ஆசிரியர் :

எண்ணும் எழுத்தும் கண்கள் போன்று விளங்குபவை. கணிதம் பற்றிய ஆய்வுரையாகப் பாவலர் வழங்கிய ஏடு கணிதவியலும் மனிதனும் என்னும் பெயரால் துலங்குகிறது. வானியல் பற்றிய தெளிந்த அறிவு நிறைந்தவராக விளங்கிய இராமாநுசர், சூரியக் கதிர்கள் மாந்தரைப் பாதிப்பது போன்று கோள்களின் அமைப்பு, தொலைவு, கோணம் ஆகியவற்றுக்கு ஏற்பத் தாக்கம் நிகழ்வதைத் தொகுத்து வழங்கத் திட்டமிட்டுள்ளார்.

### 10. பெருந்தமிழ் ஆசிரியர் :

உலகியல் துன்பங்களைத் துடைத்திடும் மாமருந்தாக இறைவன் துலங்குகிறான்; அம்மாதவன் திருவடியைச் சிந்திக்கத் தூண்டுகிறார்;

மலமறு மாண்பினன் மகிமைமன் மாதவன்
நலங்கழல் நயந்துநீர் நந்துநன் மனமே!

இலங்கையில் நடந்த இந்து சமய மாநாட்டுக்கு அமைச்சர் இராசதுரையின் வேண்டுதலுக்கு இசைந்து எழுதி அனுப்பிய இந்து தத்துவம் பற்றிய செய்தி ஆங்கிலத்தில் ஒரு சிறு நூலாக அமைந்துள்ளது.

### 11. கவிராயரின் வழித்தோன்றல்கள் :

பெரும்புலவரின் தலைமகள் அரங்கநாயகி கள்ளப்பிரான் அவர்கள் பல அரிய வைணவ நூல்களை எழுதித் தமிழக அரசின் பரிசு பெற்ற பெருமிதம் உடையவர் ஆவார். மைந்தன் கள்ளப்பிரான் அவர்கள் வெற்றிக்கு வழிகாட்டும் மேலாண்மை முதலாய பல நூல்களை எழுதித் தமிழக அரசின் பரிசு பெற்ற பெருமைக்கு உரியவர் ஆவார். இளையமகள் காசினி வேந்தினி இராமாநுசம் அவர்கள் திருப்பதி தேவத்தானம் அங்கீகாரம் பெற்ற ஆயர்பாடி அமுதம் முதலாய பல நூல்கள் இயற்றியுள்ளார். பேரன் இராமாநுசன் (புதுயுகன்) புனைகதை

இலக்கியங்கள் பலவற்றை நல்கி வருவது குறிப்பிடத்தக்கது. சமுத்திர சங்கீதம் என்னும் புதினத்தை எழுதிக் கவிராயரின் நூற்றாண்டு நினைவாக விழா எடுத்து வெளியிட்டுள்ள புதுயுகன் அவர்கள் அந்த வருவாய் அனைத்தையும் நூற்றாண்டு விழா அறக்கட்டளைக்காக நல்கியுள்ளார். கவிராயரின் இளவல் இராமாநுசம் அவர்கள் அற்புதர் இராமாநுசம் நாடகம் எழுதியவர் ஆவார்; அவர் ஞான சவுந்தரி நாடகத்திற்காகத் தமிழக அரசின் பரிசு பெற்றார். வருவான் வடிவேலன், தாய் மூகாம்பிகை, தேவி தரிசனம், நம்பினோர் கெடுவதில்லை ஆகிய திரைப்படங்களுக்கு உரிய கதை உரையாடலும் எழுதியுள்ளார்.

## 12. நிறைவுரை :

பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர், நெல்லை நகராட்சியின் துணைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். பூதான இயக்கத்துக்காகப் பெருவாரியான நிலத்தை வாரி வழங்கிய வள்ளலாக விளங்கியவர்; அச்செயலுக்காக மேடையில் பாராட்டிப் போற்ற அழைத்த போது அதை ஏற்காமல் எளிமையாக மறுத்து விட்டார் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். பேரன் சாயி இயேசு, புத்தர், காந்தி ஆகியோர் திருவுருவப் படங்களைக் கண்டு ஒரு சிறு கேள்வி கேட்டராம்; அப்போது கவிராயர் தந்த மறுமொழி சிந்திக்கத் தக்கது; இயேசு இறைமகன், புத்தர் முயன்று ஞானி ஆனவர். அவர்கள் இருவரும் உலக மக்களை நன்னெறியில் வாழத் தூண்டி வழிநடத்திய அருள் வள்ளல்கள் : ஆனால், எளிய மனிதனான காந்தி ஒடுக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான மக்கள் நல்வாழ்வுக்காகத் தம் வாழ்வையே தியாகம் செய்த பெருமைக்கு உரியவர். கனிவுக்கோர் கலங்கரை விளக்காகவும் புலமைக்கு ஓர் வளமனையாகவும் பண்புக்கு ஒரு பெட்டகமாகவும் விளங்கிய இராமாநுசக் கவிராயர் திருநெல்வேலித் தமிழ்ச் சான்றோருள் தனிச்சிறப்பு வாய்ந்த பெரும்புலவராகத் திகழ்கிறார்.

# உ. இராமாநுசக் கவிராயர் ஓர் முத்தமிழ்ச் சித்தர்

சீர்மிகு காசினி வேந்தினி
415, மலர் குடியிருப்பு,
19ஆவது முதன்மைச்சாலை,
அண்ணாநகர் மேற்கு, சென்னை- 600 040.

இறைவன் பால் கொண்ட அசைக்க முடியாத நம்பிக்கையாலும், ஆழ்ந்த பக்தியாலும் பண்பட்டுப் பரமானந்த நிலையில் திளைக்கும் பேறு பெற்றவர் ஆவர். இவர்களே தாம் அடைந்த உயரிய நிலையிலிருந்து வழுவாத தவநெறியால் சாதனை படைக்கும் பாங்குடையவர்கள்; தம் சுயபலத்தின் வலிமையை உணர்ந்தும், அதைப் பறைசாற்றாத பரிபக்குவமடைந்தவர்கள். அத்தகைய சித்தரின் நிலையை அடைந்த பின்னரும், தம்மை முழுமையாக இறைவனுக்குக் கையளித்து அடக்கமாக வாழும் பக்குவம் உடையவர்கள். இவர்களின் செயல் அனைத்தும் கண்ணியத்துடன் பலனை எதிர்பாராத பண்பும், பக்தியில் தோய்ந்த அன்பும், எளிமையும் மனநிறைவும் கொண்டு அமைதியாக இருக்கும்.

இத்தகைய அருங்குணங்கள் அனைத்தும் பொருந்தியவராய் ஆங்கிலத்திலும் தமிழிலும் பற்பல நூல்கள் படைத்துச் சாதனை செய்து, தன் திறமையைப் புவி போற்றிப் புகழ்ந்தும், தான் பெற்ற ஏற்றத்தால், மாற்றமின்றி, எளிமை, அன்பு, வாய்மை, நேர்மை காத்து ஞானியாகி வாழ்ந்து வைணவ மதத்திற்கும், அன்னைத் தமிழுக்கும் அணிமணியாகப் பல நூற்கள் புனைந்த நெல்லைப் பெரும்புலவர், இராமனும் காந்தியும் கண்கள் எனப் போற்றி வாழ்ந்தவர்; நெல்லைக் கம்பர் எனப் புகழாரம் சூட்டப் பெற்ற பெருமகனார், கவித்தென்றல் தி.கா. இராமாநுசக் கவிராயர் அவர்கள் சித்தர் நிலைக்குத் தான் உயர்ந்தபோதும், எளிமையான வாழ்வையே இசைவுடன் வாழ்ந்து காட்டிய வள்ளல் பெருமானாவார் திருமால் வழி என்ற நூல் இன்று புகழ்ந்து பேசப்படுகின்றது. இதில் ஆண்டாள் நாச்சியார் எழுதிய திருப்பாவைப் பாசுரங்கள் போல ஐம்பத்து ஏழு எம்பாவாய் பாசுரங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் சுவைத்தவர் மனம் உணர்ந்த தனி

இயல்பின்படி தேன் எனவும், அமுதம் எனவும், விலைமதிப்பற்ற இரத்தின, வைர, வைடூரியங்களெனவும், தத்துவ சாரம் நிறைந்த கனிச்சாறெனவும் இன்னும் பல சுவைகளாகவும் விளங்குவதாக, நூலைப்படித்த பலரும் பலவிதமாக வியந்து பாராட்டுகின்றனர்.

இந்நூலிலிருந்து, ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறுபதம் எனும் பழமொழிக்கிணங்க, நான் சுவைத்த ஒரு பருக்கைதான் திருமால் வழியின் நாற்பத்து ஐந்தாவது பாசுரமான ஆய்ச்சியர் அன்பினில் கட்டுப்பட்டவன் என்ற பாசுரம். அதன் சுவையோ அளப்பரியது. முத்தமிழ்க் கனிப்பாகெனவே நான் சொல்வேன்.

முத்தமிழாவது இயல், இசை, நாடகமாகும். இவற்றுள் நாடகத்தமிழில் ஓர் அங்கம் நாட்டியம் எனவும், கூத்து எனவும் வழங்கப்படும் ஆடற்கலையாகும் இதனை முறையாகக் கற்று இலக்கியச் சுவை நலம் தளும்ப, பேரவைகளில் அங்கேற்றும் போது நாட்டியம் நாட்டிய நாடகம் எனவும், பாமரரும் கண்டு மகிழத் தெருக்களில் நடித்துக் காட்டும்போது தெருக்கூத்து எனவும் திகழும் அந்தி நாட்டியத்தை இனிக் காண்போம்.

தாளத்தோடு இசைந்த பண் அமைத்துப் பாடலின் பொருளை உணர்த்தும் முகபாவமும், முக பாவனைகளை, நெறிப்படுத்தும் முத்திரைகளும் இணைந்த, கலை நேர்த்தியே நாட்டியம் எனப்படும். ஆக, தாளத்துடன் கூடிய பண் அமைத்துப் பாடப்பெறும் பாசுரத்தை இசைத்தமிழ் எனக் கொள்ளலாம். இசைத்தமிழின் பொருள் உணர்ந்தால் மட்டுமே அதை நாட்டியமாக முத்திரையுடன் கூடிய பாவமுடன் ஒருவரோ அன்றிப் பலர் சேர்ந்த குழுவோ நாடகத்தமிழின் அங்கமாகும். நாட்டியமாக ஆடிக்காட்ட இயலும்.அவ்வாறு பாடலின் பொருளை விளக்கிக் கூறும் உரையே இயற்றமிழாகிறது. இதனைச் சுருக்கமாக இயற்றமிழைத் தாளத்துடன் பண்சேர்த்து இசைத்தமிழாக்கி, அதனை முத்திரைகளுடன் கூடிய பாவமுடன் ஆடி அல்லது நடித்துக் காட்டும்போது நாடகத் தமிழாக விளங்குவது புரியும் கவிராயர் பெருமகனாரின் பாடல்கள் இவ்விதம் முத்தமிழ்ச் சுவையும் தரவல்லதாக விளங்குவது தமிழ்த்தாய்க்கு அவர் அணிவித்து மகிழ்ந்த மணி மகுடமாகும்.

கவித்தென்றல் இராமநுசக் கவிராயரின் திருமால் வழி என்ற நூலை யாவரும் படித்து அனுபவித்துப் பயனடையவும், மகிழ்வுறவும், பதம் பிரித்துப் பொருள் விரித்துக் காட்டியுள்ள நூலாசிரியர்கள் கவித்தென்றலின் வழித்தோன்றல்களான திருமதி க.கோதை நாயகி அம்மையாரும், அவரின் இளவல் திரு.இரா.கள்ளப்பிரான் அவர்களும் இந்நூலாசிரியர்கள், கவிராயரின் ஆழ்கடலில் மூழ்கித் திளைத்து அழகும், பொலிவும் நிறைந்த நல்முத்துக் குவியலையே நமக்கு இந்நூல் வழியே வழங்கி இருக்கிறார்கள். அவர்களின் அறிவார்ந்த ஆர்வமும், உழைப்பும், திறமையும், இந்நூலை அவர்கள் அளித்துள்ள பாங்கும், நமக்கு மகிழ்ச்சியையும் நன்மையையும் அளிக்கும்.

இந்நூல் உரையாசிரியர் கவிராயரின் இயற்றமிழ் வளத்தை எடுத்து இதனை இசைத்தமிழாக்கித் தந்த பெருமைக்குரியவர் மதிப்பிற்குரியவர் தமிழிசைப் புலமை மிகுந்தவர்; தம்குரு திரு தண்டபாணி தேசிகருக்கு ஆண்டுதோறும் சிறப்பாகத் தமிழிசை விழா எடுத்து குரு சேவை செய்வது அடக்கமாய் வாழும் கலைத்தேனி, சங்கீத பூசணம் உயர்திரு முத்துக்குமார சுவாமி அவர்கள். நான் சுவைத்த நாற்பத்தி ஐந்தாவது பாசுரமான ஆய்ச்சியர் அன்புக்குக் கடடுப்பட்டவன். பாசுரத்திற்கு ஆதிதாளத்தில் சிம்மேந்திர மத்திமம் இராகத்தில் பண் அமைத்ததுடன், கம்பீரமாகச் சிட்டை சுரமும் சேர்த்து ஒலி நாடாவில் பதிவு செய்து உடனே தந்துதவிய பாங்கு அன்னாரின் தமிழ்ப் பற்றையும், இசைப் புலமையையும் காட்டுவ்தாக உள்ளது. இப்பாடலுக்கு இப்பொழுதுதான் நாட்டியம் கற்றுக் கொண்டிருக்கும் இளம் சிறார்கள், அரங்கேற்ற மாகாத சிறுமியர்களுக்கும் மனம் மகிழ்வுடன் இசை பாடியது வெகுவாகப் பாராட்டத்தக்கது, நாமும் பின்பற்ற வேண்டிய அரிய பண்பாகும். திரு.முத்துக்குமார சுவாமியின் தமிழ்ப்பற்றும், பக்தியும் வியக்கத்தக்கவை.

இப்பாசுரத்தை நாட்டியமாக்கும் வழிமுறைகளையும், பாடலின் பொருள் நயத்தையும் காண்போம். ஆய்ச்சியர் அன்பில் கட்டுப்பட்டவன் என்ற தலைப்பே கண்ணன் கோபியருடன் கோகுலத்திலும், பிருந்தாவனத்திலும் கழித்த சுவையான நிகழ்ச்சிகளைக் கூறும், கதையைத் தழுவிய செய்திகளை நாட்டியமாக்கிக் காட்டிய ஏதுவாயிற்று.

ஆயர்பாடி அமுதம் – பாகவதக் கதைகளை நினைவுகூரத் தூண்டியதுடன் உதவியாக இருந்தது.

கவிராயரின் திருமால் வழி யின் நாற்பத்து ஐந்தாவது பாடலும் பொருள் நயமும்.

ஆய்ச்சியர் பால்வெண்ணெய் அறிவில்லா அன்பதனால்
நாச்சியர் செய் நளினம் நல்லன்பின் மேலாகத்
தாய் சயனம் தான் கொள்ளத்தான் தனியே போய் உண்டான்
பேய்ச்சியின் பொய்முலையும் பெரிதுவந்து தான் உணடான்
காய்சினம் கொண்டெல்லே கடுமதில் சூழ் இலங்கை தன்னை
வேய்சினவெந்தழலில் வெஞ்சிலையால் தான் அவித்தான்
தாய் சினந்து ஓர் உரலில் தனைப் பிணைப்பத்தான் அவிழா
மாய்சின மென்குரலில் மகிழ்ந்து அழுவான் எம்பாவாய்

**ஆய்ச்சியர் பால் வெண்ணெய் அறிவில்லா அன்பதனால்**

ஆய்ச்சியர் தம் அறிவுக் கூர்மையால் திட்டமிட்டோ, அன்றிப் பலனை எதிர்பார்த்தோ, எதையும் செய்வதில்லை. அவர்கள் தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் கண்ணனுக்கே கையளித்து அனைத்திலும் கண்ணனையே கண்டார்கள். எங்கும் கண்ணன், எதிலும் கண்ணன் என்பதே அவர்கள் இயல்பான இயக்கமாக இருந்தது. அதனால்தான் கண்ணனும் தானும் அவர்களில் ஒருவனாகவே ஆகி, ஆய்க்குடியில் பிறந்து, தவழ்ந்து, நடந்து, உலவி, அவர்களுடனே வளர்ந்து, ஆய்ச்சியர் தன்னை ஐம்புலன்களாலும் (கண்டு, கேட்டு, பேசி, உச்சி முகர்ந்து, மெய்தீண்டி) உவகை பூண்டு தூய அன்பினால் அனுபவிக்கும் பெரும் பேற்றினை அவர்களுக்குக் காரண காரியம் இருக்கக் கூடும். அறிவில்லா ஆயச்சியர் அன்போ மிகப் புனிதமானது. எதையும் பதிலுக்கு எதிர்பாராத தூய அன்பு.

**நாச்சியார் செய் நளினம் நல்லன் பின் மேலாக**

நாச்சியர் செய் நளினம் என மிக இயல்பாக ஆய்ச்சியர் கண்ணன் பால் கொண்ட தூய அன்பின் மிகுதியால் ஒவ்வொரு கணமும் கண்ணனுடன் கழிக்க வேண்டும் என்ற ஆவல் மிகுதியால் செய்யும் செயல்களைப் பலவகைகளாக்கிக் காட்டுகிறார். பிற கோபியரிருக்கையில்

வெண்ணெய் தர மறுக்கும் அதே கோபிகை கண்ணனைத் தனியே அழைத்து வெண்ணெய் தருவது, அழகிய ஆடை அணி மணி புனைந்து கண்ணனைக் காண வேண்டி (கண்ணன் குறும்பு செய்ய வருவான் என எதிர்பார்த்து) வீதியில் நடப்பது போன்று பல இனிய கற்பனைகள் உள்ளன.

**தாய் சயனம் தான் கொள்ளத்தான் தனியே போய் உண்டான்**

யசோததை சிறிது ஓய்வு கொள்ளச் செல்லும் வேளையில், கண்ணன் ஆய்ச்சியர் இல்லங்களுக்குச் சென்று வெண்ணெய் திருடி உண்ணுதல், தயிர் குடித்தல், நண்பர்களுக்கும் வெண்ணெய் அளித்தல் என்பது வாடிக்கையான கண்ணனின் குறும்புகள். ஆனால், கவிராயர் தான் தனியே போய் உண்டான் எனப் புதியதாக ஒரு செய்தி சொல்லுகிறாரே! அப்படி என்றால், அதில் ஏதோ ஒரு சிறப்பான பொருள் இருக்க வேண்டுமல்லவா?

கண்ணனோ பரந்தாமன் எல்லா உயிரின் உள்ளும், புறமுமாக இயங்கி இயக்குபவன். தனியே அவன் சென்றான் என்றால் தான் செய்யும் செயலைப் பிறர் காண்பதை அவன் விரும்பவில்லை என்றுதானே பொருள் கொள்ள வேண்டும்? அப்படி அவன் தனியே என்ன செய்தான் என்றால், குறிப்பிட்ட ஆய்ச்சியின் தூய அன்பினால் உளம் நெகிழ்ந்து, மகிழ்ந்து அவளுக்குத் தனிப்பட்ட முறையில் வெகுமதி அளிப்பதாகவோ, மாறாக குறிப்பிட்ட ஆய்ச்சியின் மனத்தின் மாசினை அகற்றி அவனைத் திருத்தி ஆட்கொண்டு அருளுவதாகவோ இருக்க வேண்டும். பலர் முன்னிலையில் ஒருவருக்கு மட்டும் நன்மை செய்வதோ அல்லது பிறர்முன்பு குற்றங்களைச் சுட்டிக் காட்டித் திருத்துவதுவோ உயர்ந்த பண்பாளர்களுக்கு உகந்த செயல் அல்ல என்பதனாலேயே தான் தனியே சென்று உண்டான். விரும்பி அளிக்கும் ஆய்ச்சிவெண்ணெய் உண்டு அவன் மனக் குளிரச் செய்தலும் வெண்ணெய் தர மறுக்கும் ஆய்ச்சியின் வீட்டிலும் வெண்ணெய் திருடி உண்டு அவன் அகங்காரத்தை நீக்கியருளாய் எனப் பொருள் கொள்ளத் தோன்றியது.

இதில் இன்னொரு செய்தி என்னவென்றால், யசோதை உறங்காவிட்டால், கண்ணன் பிற இல்லங்களுக்குச் செல்ல இசைய

மாட்டான். ஆதலால் யசோதை, கண்ணனின் தாயாகித் தான் அனுபவிக்கும் ஆனந்தத்தின் ஒரு துளியைப் பிற ஆய்ச்சியரும் அனுபவிக்கட்டுமே என்ற பரந்த நோக்கோடு துயில் கொள்வதாக எண்ணிப் பார்க்கையில், ஆய்ச்சியர் எவ்வளவு எளியவர்களாக, இயல்பாகவே அரிய கருத்துக்களை நடைமுறைப்படுத்தி வாழ்ந்து காட்டினர்.

**பேய்ச்சியன் பொய்முலையும் லெிதுவந்து தான் உண்டான்**

சம்சனால் ஏவப்பட்டு, நச்சுப்பாலைக் கண்ணனுக்கு ஊட்டிக் கொல்ல வந்த பூதனை அரக்கியை, அவள் வஞ்சக எண்ணத்தை ஏற்பதுபோன்று கண்ணன் அவன் உயிரையே உறிஞ்சிக் கொன்ற செயல் பேசப்படுகின்றது. பாதகியானாலும், பரிவுடன் பூதனைக்கு நற்கதியளித்த கண்ணனின் மாண்பினை எடுத்துக் கூறியுள்ளார்.

**காய்சினம் கொண்டெல்லே கடுமதில் சூழ் இலங்கை தன்னை**

கருணை கண் நிறைந்து வெள்ளமாய்ப் பெருகல் தன்னைக் கடிந்து சினந்து குற்றம் கூறிச் சீறியவர்களையும் பொறுத்து அருளும் பகவான் காய்சின வேந்தன் தன் முந்திய அவதாரத்தில் தன் மனைவியான சீதாப் பிராட்டியை அதர்மமாகக் கவர்ந்து சென்ற இராவணனை வதைக்கும் பொருட்டு, தன் இயல்பான கருணையை மாற்றி, கடும் சினத்தைத் தீயென வளர்த்துக் கொண்டு பகைவர்கள் புகுவதற்கு அரிதான நெடுமதில் சூழ் இலங்கை வேந்தனை, இராகவன் சினத்தீயை மென்மேலும் பெருக்கி வெந்தழல் போன்று இராமபாணடமெய்திக் கொன்ற நிகழ்ச்சியைக் கூறுகிறார்.

இறுதி ஈரடிகளோ இன்னும் சுவைமிக்கவை. ஒவ்வொரு வார்த்தையும் அமிழ்தாய் இனிப்பது. முரண்படும் சொற்றொடர் தான். ஆனால் அதுவே தனிக் காவியமாகத் திகழ்கிறது.

**தாய்சினந்து தான் உரலில் தனைப் பிணைப்பத்தான் அவிழா**
**மாய்சினமென் குரலில் மகிழ்ந்து அழுவான் எம்பாவாய்**

தாய் யசோதைக்குக் கண்ணனிடம் கோபமே வராது. ஆய்ச்சியர் பலர்வந்து பலவிதமாய்க் கண்ணன் குறும்புகளைக் குற்றமாகச் சொன்னாலும் எளிதில் ஒப்புக் கொள்ள மாட்டாள். கண்ணனைத் தன்னுடன் அணைத்து, அவன் சொல்வதே உண்மை என நினைப்பவள்.

நம்புபவள். ஆனால் அவளே கண்ணன் மேல் கோபம் கொள்ளும்படியான சூழ்நிலைகளைக் கண்ணனே உருவாக்குகிறான்.

ஆடையின்றி நீர் நிலையில் குளித்த குற்றத்திற்காகவும், மாமுனிவர் நாரதர் வந்ததைக் கவனியாமல் அவரை அவமரியாதை செய்த குற்றத்திற்காகவும் குபேரனின் மைந்தரான நளகூபன், மணிக்கிரீவன் இருவரும் நாரதர் சாபத்தால் மருதமரமாகி நிற்க, கண்ணன் அவர்களைக் கண்டு, அவர்களுக்குச் சாபவிமோசனம் அளிக்கத் திருவுளம் கொண்டான். ஆனால், அவன் பரந்தாமன் என்றாலும் இப்பொழுது யசோதையின் இளம் பாலன்! ஆகவே அவன் நன்கு யோசித்து, ஆராய்ந்து, பிறர் ஐயம் கொள்ளாவண்ணம் தான் செயல்பட வேண்டிய வழிமுறைகளைத் தீர்மானித்துக் கொள்கிறான். அதன்படி ஏவலர் வராத ஓர் நாளில் யசோதை முலைப் பாலருந்திய தன் மகனை, மடியிறக்கி விட்டு, அடுப்பைக் கவனிக்கச் செல்ல, அத்தருணத்தில், கண்ணன், கோபம் கொண்டவன் போல் எழுந்து, தயிர்ப்பானையை உடைத்து விட்டு, வெண்ணெயை எடுத்துக் கொண்டு பழக்கடை போய், அங்கு ஓர் உரலில் உட்கார்ந்து கொண்டு, வெண்ணெயைத் தான் உண்டதோடு, குரங்குகளுக்கும் அளித்தான்.

கண்ணனின் குறும்பு கண்டு உள் மகிழ்ந்தாலும், யசோதை, பிற ஆய்ச்சியரின் புகார்களைக் கேட்டவளாதலால், அவர்களால் கண்ணனுக்குத் துன்பம் வந்துவிடக் கூடாது என நினைத்து, தானே கண்ணனைத் தண்டிக்கும் முகமாகக் கண்ணன் அமர்ந்திருந்த உரலிலேயே அவனைக் கட்டிப்போட எண்ணுகிறாள்! கண்ணன் சொல்வதே உண்மை என உறுதியாக, இறை இயல்பை அறிந்தவளாக நாம் எண்ணிய அதே யசோதை கண்ணன் இறையவன் என்பதை அறியாத எளியவளாகி, இறைவனையே உரலில் பிணைக்க எண்ணுவது முதல் முரண்பாடு.

இறைவனைக் கட்டிப்போட முடியாது என்பதை அவளுக்கு உணர்த்தவே எத்தனை கயிறுகளை இணைத்தபோதும் அவை இரண்டு விரற்கடை நீளம் குறையக் கண்டு களைத்துப் போய்விடுகிறாள். தாயின் தவிப்பைக் கண்டு தாளாமல் தாமோதரன் தானே கட்டுப்பட இசைந்து செய்த மாயத்தால் கண்ணனை உரலுடன் பிணைத்து விடுகிறாள்.

ஆனால் அவளுக்குத் தெரியும், கண்ணன் ஒரு நொடியில் முடிச்சை அவிழ்த்து விடுவான் என்று! ஆனால் கவிராயரோ, உரலில் தனைப்பிணைப்பத் தான் அவிழா என்றல்லவா சொல்கிறார். அது ஏன் என்று ஆராயந்தால், தாய் யசோதைக்கு, கண்ணனை உரலுடன் கட்டி விட்டாலும் கண்ணன் அவிழ்த்து விட்டு ஓடி விட மாட்டானா என்ற ஏக்கம். ஆனால் கண்ணனோ, முடிச்சை அவிழ்க்காததோடு மட்டுமின்றி, மாய்சின மென்குரலில் மகிழ்ந்து அழுதான் எம்பாவாய்! என்கிறார்.

சினமாகிய கோபம் வந்தால் குரல் உரத்து பேரொலி வரும். அப்போது அது எல்லோருக்கும் கேட்கும். கேட்டால் பலர் அங்கு குழுமி விடுவர். கண்ணனை உரலிலிருந்து அவிழ்த்தும் விடுவர். அச் செயல் கண்ணன் எண்ணத்தைச் செயற்படுத்த தடையாகிவிடும். ஆகையால் மாமாயனாகிய கண்ணன், தான் பெருங்குரலெடுத்து அழுதால் தாய் தன் இயல்பின்படி தன்னை வாரி அணைத்து உரலிலிருந்த பிணைப்பை நீக்கிவிடுவாள், நம் திட்டம் நிறைவேறாது எனச் சிந்தித்து,மிக மெல்லிய குரலில் சிணுங்கி அழ ஆரம்பித்தாலே, மனம் தாளாமல் அன்னை உள்ளே சென்று விடுவாள். பின் பிறர் அறியாமல் தன் எண்ணததைச் சாதித்துக் கொள்ளலாம் என்றெண்ணி, மாய்சினமென் குரலால் அழுகிறான் என்கிறார் கவிராயர். மாய்சினமென்குரல் இரண்டாவது முரண்பாடு.

மூன்றாவது முரண்பாடாகச் கவிராயரின் மகிழ்ந்து அழுவான் எம்பாவாய் என்ற சொற்றொடர் அமைகிறது. மகிழ்ந்தால், உரத்துச் சிரித்தல், குதித்துக் கும்மாளமிடல், ஆடிப்பாடிக் கொண்டாடுதல் மரபு. ஆனால் பாடலில் மகிழ்ந்து அழுவான் என்கிறாரே. ஏன்? மகிழ்ந்தது – தான் எண்ணியபடி நளகூபன், மணிக்கிரீவனுக்குச் சாபவிமோசனம் அளித்ததைக் குறித்து, அவர்கள் தம் பிழையுணர்ந்து, திருந்திப் பணிந்த பாங்கினைக் கண்டதால் கண்ணன் மகிழ்ந்தான். பின் ஏன் அழுதான் என்ற கேள்வி பிறக்கிறதல்லவா? குபேர மைந்தர்களுக்குச் சாபவிமோசனமருளி அவர்களுக்கு விடுதலையளித்த பரந்தாமன் தானே நந்தர் பாலனாக சிறுமதலையாகிச் செயலற்றவனாய்க் கட்டுண்டு கிடக்கிறானே, இப்போது உரத்து அழுதால்தானே தன்னை விடுவிக்க யாராவது வருவார்கள்? இளம் குழந்தைகள் பசியோ பிற

காரணங்களுக்காகவோ அழுது பிறர் கவனத்தைக் கவரும் இயற்கை நியதியை மறவாது இறையவனும் அனுசரித்தே அழுதான்.

யாவருக்கும் எதற்கும் கட்டுப்படாத முழு முதல்வன், அரக்கர், அரக்கியருக்கும் குற்றமிழைத்தவர்களுக்கும் நற்கதி அளித்த பரந்தாமன், தன்னை உரலிலிருந்து விடுவித்துக் கொள்ளப் பிறர் உதவியை நாடி அழுகிறானாம்! என்ன முரண்பாடான, அழகான கற்பனை! இதைஇப்படியெல்லாம் கற்பனை பண்ணிப்பாடி கண்ணனை எப்படி எல்லாம் அனுபவித்திருக்கிறார் கவிராயர் என்பதை எண்ணினால் வியப்பின் விளிம்புக்கே செல்வோம்!

இந்தப் பாசுரத்தில் யசோதை கண்ணனை உரலில் கட்ட எடுத்த கயிறுகள் எத்தனை சேர்த்தாலும் இருவிரற்கடை நீளம் குறைவது கண்டு வியந்தோமல்லவா? அதற்கும் ஒரு சிறு விளக்கமாக இந்தவிதமாகப் பார்ப்போமா? கண்ணன் நளகூபன், மணிக்கிரீவன் ஆகிய இரு மருத மரங்களின் நடுவில் உரல் மாட்டிக் கொள்ளும்படி உரலை இழுத்துச் செல்ல வேண்டும். அவன் உரலை வெகு தூரம் இழுத்துச் செல்வதற்குப் பதிலாக, கயிற்றின் நீளத்தை அதிகரித்து, கயிற்றுடன் தான் நகர்ந்து செல்லத் தானாகவே உரல் எளிதாக மரங்களின் நடுவில் மாட்டிக் கொள்ளும். தானும் மரங்கள் தன்மேல் விழாமல் காயம்படாமல் தப்பித்துக் கொள்ளலாமல்லவா?

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் எனும் நியதிப்படி கவிராயர் அவர்கள் எட்டு அடிகளில் ஆய்ச்சியருடன் கண்ணன், பூதனைவதம், இராவணவதம், நளகூபன், மணிக்கிரீவன் சாபவிமோசனம் என இரண்டு யுக நிகழ்ச்சிகளை வெகு அழகாக விவரித்துள்ள அருமை போற்றத்தக்கது.

இப்படி ஒவ்வொரு அடியின் ஒவ்வொரு சொல்லும் கருத்தாழம் மிக்கதாக, அழகான பொருள் நயம் பொதிந்ததாக அமைந்துள்ளது. திருமால் வழியின் ஒரு பாசுரமே. இப்படி அமுதமாகத் தித்திக்குமென்றால் இந்நூலின் ஐம்பத்து ஏழு பாசுரங்களும் பெருவிருந்தாக, அடைதற்கரிய பெருநிதிக் குவியலாகத் திகழ்வது உள்ளங்கை நெல்லிக்கனியாகும். இத்தகைய நிதியை நாம் அனுபவதித்துப் பயன்பெற உதவிய நூலாசிரியர்கள் இருவரும் இருகண்களாக இயங்கி அரிதான காட்சியை நாம் கண்டின்புறச் செய்துள்ளார்கள். அவர்களுக்கு மீண்டும் நம்

அன்பான நன்றியைத் தெரிவித்து மேலும் கவிராயர் விட்டுச் சென்ற தமிழ்ச் சுரங்கத்தைத் தோண்டி இன்னும் பல உரை எழுதி உலகுக்கு அளிக்க வேண்டுமென்ற என் விண்ணபத்தையும் பணிவன்புடன் வைக்கிறேன்.

என்னதவம் செய்தனை யசோதா என்ற பாடல் யாவராலும் விரும்பிப் பாடி அனுபவிக்கப்படுவதை நினைவிற்கொண்டு

என்ன தவம் செய்தேனோ
எந்தை இராமாநுசரின்
இந்தத் தமிழ்த்தேன் பருக
உதவிய உரையாசிரியர் உடன் பிறக்க

எனப்பாடி என் மனமகிழ்ச்சியை பணிவன்புடனும் நன்றியுடனும் தெரிவித்துக் கொள்கிறேன்.

எந்தை கவிராயர், இளவல் சிறிய தந்தையோடு
விந்தை மதிநுட்பம் மிகவாய்ந்த அத்தையவள்
சிந்தை செய் சீர்கலையைக் கற்பித்தகுரு இருவர் – சிறிய
தந்தையின் நண்பர்க்கும் என் நாட்டிய அஞ்சலி இதுவே!
இன்று இவ்வினம் சிட்டுக்கள் இயக்கமாம் நடனமாகக்
கன்றுதுள்ளி ஓடும் பாங்கைக் கண்டு ரசித்துக் களிப்பதுபோல்
நன்று என்று நீர் ஏற்று நல்லாசி வழங்கிடுவீர்
என்று நம்பும் எளியேன் சொல் ஏற்று மகிழ்வாய் வாழ்த்துவீரே!

# 3. காந்தி காவியத்தில் சில மொழிக்கூறுகள்

பேராசிரியர் முனைவர் சு.அழகேசன்
தமிழியல் துறைத்தலைவர்,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

இருபதாம் நூற்றாண்டிலும் கம்பராமாயணம் போன்று கவித்துவமிக்க கற்பனைமிக்க ; பிரமிக்கத்தக்க பெரிய காப்பியம் இயற்ற இயலும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கி அடையாளப்படுத்தப்பட வேண்டிய அரிய காப்பியமாய் மிளிர்வது இராமாநுசக் கவிராயரின் மகாத்மா காந்தி காவியம் ஆகும். காந்திய நெறியில் தமது பெருவாழ்வை வாழ்ந்து காட்டிய கவிராயர், 12285 பாடல்களில் உணர்ச்சிப் பிரவாகமாய் காந்தியின் வாழ்வையும் இந்தியச் சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்றினையும் காவியமாகப் புனைந்திருப்பதே இந்தப் புகழ்க் காப்பிய நூலாகும். பாடலாசிரியர், பனுவலாசிரியர், காப்பியப் படைப்பாளர், உரைகாரர், பதிப்பாசிரியர், மொழிபெயர்ப்பாளர், தத்துவ மேதையர், அறிவியல் சிந்தனையாளர் எனப் பல பரிமாணங்களில் வலம் வந்தவர். பல தமிழ், ஆங்கில நூல்களின் படைப்பாளரான இவரது காந்தி காவியத்தின் மொழிநிலை இருபதாம் நூற்றாண்டின் சில மொழிக் கூறுகளை அம்பலப்படுத்துவதாக அமைகிறது.

### தொடர் அமைப்புகள் :

இவரது காந்தி காவியக் கவிதைகள் எளிய இனிய தொடர்களில் அமைந்து எதுகை நயமும் கற்பனை வளமும் ஓசைநயமும் கொண்டு விளங்குகின்றன. கவிதைகளில் தொடர்க்கத்தில் மட்டுமின்றி இறுதியிலும் பல பாடல்களில் ஒழுங்கு பேணப்படுதல் காணப்படுகிறது. இப்பாடல்கள் கவிதைக்கு அழகும், ஓசை நயமும் நல்கி வாசகரை ஈர்க்கின்றன.

கேடில் உளந்தேடும் வழிகூடும் பதியோகம்
ஊடல் நலங்கூடும் வழிச்சூடும் திறன்போகம்
ஆடல்பரி யோடுந்திக ழாடம்பர தாகம்
நாடில் நலங்கூடும் நயவீட லறவேகம்

(காண்டம் 1 : பொதுவியற்படலம்,பா.16)

செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களை இறுதியில் அமைக்கும் பாங்கினைக் காணலாம்.

எண்ணம்பல வண்ண முழியின்னல் மயற்பின்னும்
பண்ணும்பல கண்ணி னெழில் பின்னுங்குழல் உன்னும்
மண்ணிற்பல விண்ணுமற மென்னில் நலந்துன்னும்
திண்ணம்வழி பண்ணுந் தாங்கற்பின் நயம்நண்ணும்

(காண்டம்1 : பொதுவியற்படலம்,பா.16)

ஏகாரம் இறுதியில் அமைத்தல் : மற்றும் ஒரே சொல்லையே எழுவாயாக அமைத்தல் போன்ற பண்புகள் தொடரிடயல் கூறுகளாகக் காணப்படுகின்றன.

நாணளந் தெழுந்தது நங்கையின் மேன்மையே
நாணளந் தெழுந்தது நளினமெய் போகமே
நாணளந் தெழுந்தது நெறிதல் வாய்மையே
நாணளந் தெழுந்தது நலிதலு மின்மையே

(காண்டம் 1 : பொதுவியற்படலம், பா.23)

ஆட, போன்ற வினையெச்சங்களை இறுதியில் அமைத்துப் பாடலில் ஒழுங்கு பேணுவதோடு தொடர்களை நீட்டிக் கொண்டே செல்லுதலையும் காணலாம்.

காதலின் மொழியாடக் காந்தவ ருளமாட
வேதனை விளையாடு விரைமலர்க் கணையாடப்
போதவிழ் முலையாட பொலிமதி களியாடச்
சீதள மணத்தென்றல் செறிமலர்க் குழலாட

(காண்டம் 1 : நாட்டுப்படலம், பா.9)

சிறு சிறு தொடர்களில் பாடல்களை அமைத்துச் செல்லும் பாங்கு காணப்படுகின்றது. இதுபோன்ற அமைப்புக்களில் பல பாடல்கள் காணப்படுகின்றன.

ஆராத காதலது அவியாத வேதையது
தீராத வாழ்வெல்லாம் தெரியாத நீதியது
நீராடு மருதமது நீறாடும் பாலையதே
சீராளு மிறையன்பால் செயலதுவே அஃதின்றேல்

(காண்டம் 1 : பொதுவியற்படலம், பா.74)

மேலும் சிறிய தொடர்களில் அமைத்தலையும் காணலாம்.

அரசியல் பேச்சு
கரமொலி வீச்சு
நரகதினீச்சு
வரலிலதாச்சு (காண்டம் 4: சம்பரப்படலம், பா.147)

வினைமுற்றுக்களை எழுவாயாக அமைக்கும் புதுமைப்போக்கும் உடைய பாடல்கள் பலவற்றைக் காணமுடிகிறது.

நடந்தது படையும்
படர்ந்தது சாலை
கடந்தது காதம்
தொடர்ந்தது விந்தை (காண்டம் 3: பெரும்போர்ப்படலம், பா.1)

இதுபோன்ற அமைப்பு சங்கப்பாடலிலும் காணமுடிகின்றது.

எழுந்தது துகள்
ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்பு
கலங்கினர் பலர் (கலி.102)

வினைமுற்றுக்களைத் தொடர்ந்து அமைப்பதோடு சிறு தொடர்களாகவும் அமைத்துப் பாடல்களை உருவாக்கும் போக்கு காணப்படுகிறது. இவ்வகையில் தெரிநிலை வினைமுற்றுக்கள் மற்றும் குறிப்பு வினைமுற்றுக்கள் தொடர்ந்து அமையும் பாடல்கள் இடம் பெறுகின்றன.

கடிப்பனென் றெழுந்தனன் கடிதிற் காற்கரம்
ஒடிப்பனென் றுளறினன் ஒடுங்குறு நுண்ணுடல்
தடிப்புறுமு; அடிப்பனென் தடங்கையா லென்றனன்
நடிப்பதவ் வறமலி நலிய வருதுமோ
(காண்டம்3: பெரும்போர்ப்படலம், பா.72)

இதேபோன்று குறிப்பு வினைமுற்றுக்கள் அடுக்கி வருதலும் காணப்படுகின்றது.

கடைசியர் கணிச்சியர் கடிநகை மலரும்
இடைச்சியர் இவர்விழி யிதமன னவிழும்
மடைச்சிறைப் புனற்கயல் மருள்வலை தவிர்வான்
புடைத்தலை மிடைத்திடும் புனல்நிழற் கழனி
(காண்டம் 1 : நாட்டுப்படலம், பா.65)

ஆலமுண்ட கண்ணினர் அஞ்சிநோக்கும் வஞ்சியர்
காலமுண்ட நெஞ்சினர் கண்டவா திரிதரா
சீலமுண்ட சிந்தையர் செஞ்சசொலாடு பந்தியர்
கோமுண்ட கொந்தலர்க் கொஞ்சிநோக்கும் விந்தையர்
(காண்டம் 1 : நகரச்சிறப்புப்படலம், பா.39)

**சொல்லியற் கூறுகள் :**

குறிக்கத்தகுந்த சில சொல்லியல் மொழிக் கூறுகளைக் காந்தி காவியம் கொண்டு திகழ்கின்றது. இவ்வகையில் சில பண்புகளைக் காணலாம்.

1. தன்மைப் பன்மை விகுதியான 'ஆம்' பயன்படுத்துதல்

செய்துவாம், போற்றுவாம் போன்ற சொல்லமைப்புகள் பயன்படுத்தப் பெற்றுத் தன்மைப் பன்மை பயன்படுத்துதலைக் காணலாம்.

கஞ்சநன் மலர்க்கழல் கனிந்து போற்றுவாம்
(காண்டம் 1 : கடவுள் வாழ்த்து, பா.22)

அற்றிரு மருங்கழ லமைந்து போற்றுவாம்
(காண்டம் 1 : கடவுள் வாழ்த்து, பா.22)

2. தன்மைப் பன்மை விகுதியாகத் தும் பயன்படுத்துதல்

தும் விகுதி தற்காலத் தமிழில் அதிகம் பயன்படுதல் இல்லை. ஆயின், கவிராயர் தமது காந்தி காவியத்தில் தும் விகுதியைப் பயன்படுத்துதல் குறிக்கத்தகுந்தது.

பாரத நாடவளன்னையள் பாதமே சயகோடி
தாரக வெற்றிகொள் தாயவள் வெற்றியே வாழ்த்துதுமே
(காண்டம் 1 : கடவுள் வாழ்த்து, பா.36)

3. மின் னென் ஏவல் பயன்பாடு

மின் ஏவல் பயன்பாடு தற்கால வழக்கில் அதிகம் பயன்படுதலில்லை. ஆயின், காந்தி காவியத்தில் இப்பயன்பாடு காணப்படுதல் கவனிக்கத்தக்கது.

ஏகங்காட்டுமின் மன்னோடு மேந்திழை
(காண்டம் 1 : ஆற்றுப்படலம், பா.14)

4. என், உன், தன் போன்ற மூவிடப் பெயர்கள் வழக்கில் வழங்குதலை இக்காப்பியம் வெளிச்சப்படுத்துகிறது.

உன் மகன் எனும் உறவினுக்குரிய நல்லுரிமை
(காண்டம் 1 : மலினந்தீர் படலம், பா.32)

நான் உனை மறைந்தாலும் நீ எனை மறக்க வழக்குண்டோ
தான் மறந்தாலும் தன்சேய் தாய்மறக்க வழக்குண்டோ
ஊன் பறந்தாட வறுவினை யுள் உழன்று நானொழிய
ஏன் மறந்தாய் என் ஈசனே எழிற்கரு மாணிக்கமே
(காண்டம் 7 : அந்திமப்படலம், பா.248)

கொன்றுநான் பெரும்பழி கொண்டு இவ்வுடல்
நின்றுநா னேகிடில் நீயுன் வாழ்வதில்
நன்றுகாண் பதிநலம் நசுங்க லின்றதேல்
கன்றிடேன் உன்மனக் கருத்தை யோம்புவேன்
(காண்டம் 7 : அந்தரங்கப்படலம், பா.157)

எந்தனைச் சிறையி லிடரிடா ரென்னச்
சிந்தனை மொழிந்த செறிமொழி தவறி
(காண்டம் 6 : தனிமுறைப்படலம், பா.282)

## அன் விகுதி வழங்கப்பெறுதல்

தொல்காப்பியரால் ஆண்பாற் படர்க்கை விகுதியாகக் குறிக்கப்பெற்ற (தொல்.205) அன்விகுதி, நன்னூலில் தன்மையொருமைக்கும் (நன்.331) வருவதாகக் குறிக்கப்படுதல் சுட்டத்தக்கது. கவிராயர் மகாத்மா காந்தி காவியத்தில் அன் விகுதியைத் தன்மையொருமைக்குப் பயன்படுத்துதல் கவனிக்கத்தக்கது.

இதயம் நொந்தனன் யானுமக் கெவ்விதம் விதிசெய்
பதவி காணுறு முலகியற் பாங்கதற் கேதாய்
உதவி காணலா ஒண்மதி யாகினு மேலா
அதம னாகுவன் அடியேனன் ஆள்வுறக் கருதில்
(காண்டம் 6 : பம்பையுறு படலம், பா.68)

## அருகிய வழக்குகள் பயன்படுத்துதல்:

கில் இடைநிலையைப் பயன்படுத்துதல் காணப்படுகிறது. தற்கால வழக்குகளில் இல்லாத இத்தகைய சொற்களைப் பயன்படுத்துதல் சுட்டத்தக்கது.

உண்ணறக்கிலர் (காண்டம் 3 : மறுபோர்ப்படலம், பா.38)

காண்கிலர் (காண்டம் 1 : திருமணப் படலம், பா.52)

## இல் எதிர்மறையாகப் பயன்படுதல்

இல் உருபினை எதிர்மறை உருபாகப் பயன்படுத்தும், புதுமைப்போக்கு காணப்படுகிறது.

மெய்யினியல் செய்யும் புறம் கொய்யும். (காண்டம் 1 : பொதுவியற்படலம், பா.7)

## இரக்கச் சொற்கள் பயன்படுத்துதல்

கழிவிரக்கச் சொற்களான சில இடைச் சொற்களைப் பயன்படுத்தும் போக்கும் காணப்படுகிறது.

ஐயோ, அம்மா போன்ற சொற்கள் இவ்வகையில் அமைகின்றன.

ஐயோவென விரங்கும்அவர் ஏழை யறிவல்லார்

(காண்டம் 3: மறுபோர்படலம், பா.34)

புயல்நதி நுரையின் பாங்குப் புன்சிரிப்பொப்ப தம்மா

(காண்டம் 1 : நாட்டுப்படலம், பா.70)

உற்றவன் சரிதமொன்றே யுகப்பவர்க் கெளிமை அம்மா

(காண்டம் 1 : பனிநாட்டுப்படலம், பா.41)

## அடுக்குத் தொடர்கள் பயன்படுத்துதல்

அடுக்குத்தொடர்கள் பயன்படுதலையும் காணலாம். இவ்வகையில் அமைபவை சில :

நீரிள முலைவாய் நொடி நொடி நிரம்ப

(காண்டம் 1 : நகரப்படலம், பா.104)

எண்ணிலாகிடு மின்னிரு மின்னுருத் தனக்கும்

(காண்டம் 1 : திருமணப்படலம், பா.64)

நன்று நன்று (காண்டம் 3: போயர்ப் போர்ப்படலம், பா.141)

தினம்தினம் நூற்பும் தினசரிப் படிப்பும்
தினம் தினம் எழுத்தும் திரி எழுத்தாளர்
தினம் தினம் செயலில் திகழெழுத்திடவும்
மனமுல கெங்கும் மாய்வில வூருதர்

(காண்டம் 5 : வட்டக்குழுப்படலம், பா.84)

## வழக்குச் சொற்கள் பயன்பாடு :

பல வழக்குச் சொற்களைப் பயன்படுத்திக் காப்பியத்திற்கு ஏற்றம் அளிக்கிறார் கவிராயர். இவ்வகையில் பல சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

எண்ணலம்பலம் பண்ணும்படி கண்ணம்பரம் பண்ணும்
மண்ணம்பத வண்ணமுளந் திண்ணம்பெற வுன்னும்
பெண்ணம்புய மென்னும்படிப் பின்னுமுலை துன்னும்
நண்ணுந்தனி வண்ணமதை யெண்ணும்படிப் பண்ணும்

(காண்டம் 1 : நகரச் சிறப்புப்படலம், பா.57)

மாசில்நலங் கேசம்பொழி வாசமதன் பாச்சல்
ஓசையலை வீசுங்கரம் மூசுங்கயல் நீச்சல்
ஏசில்விழி நேசமுற, வாசையுள மோச்சல்
கூசுமயல் பாசம்தரு வாசியுறக் கூச்சல்

(காண்டம் 1: பனிநாட்டுப் பயணப்படலம், பா.51)

குத்துவெட்டுச் சுட்டுவீழ்த்து குன்றலங்க மாக்கியே
நித்த நித்தம் துன்பமின்றேனல் நீக்கல் நன்மையாகுமால்
சத்தமமத்தமின்றித் தொண்டு சரிந்து செய்த கூலியர்
அத்தமத்த வடலைமுடலை ஆக்கிவைத்த வீணனால்

(காண்டம் 3 : இழிசினப் படலம், பா.84)

(அடலைமுடல்ல = வீண்வார்த்தை)

மேலும் ஊத்தை (காண்டம்3, முரண்காண்படலம், பா.84), களிப்பு (காண்டம் 3, சொற்போர்ப்படலம், பா.48), கோஷம் (காண்டம் 3, முதற்போர்ப்படலம், பா.8) ஊளை (காண்டம்3, ஆரம்பப்படலம், பா.110), இம்மி (காண்டம்5, திக்விஜயப்படலம், பா.50) போன்ற சொற்களையும் எடுத்தாளுகிறார் ஆசிரியர்.

## புதிய சொற்களை உருவாக்குதல் :

கவிராயர் பல புதிய சொல்லாக்கங்களைப் படைத்துக் கவிதைக்குப் பெருமை சேர்த்தலைக் காணலாம். அவர் உருவாக்கிய புதிய சொற்கள் பலவாகும் :

கொள்ளறாத விந்தையர் கோதிலாத விந்தியர்

(காண்டம் 1 : நகரச்சிறப்புப் படலம்,பா.49)

பம்புநுண் கணிதம் பகர்வுறுங் குறுவை

(காண்டம் 1 : நகரச்சிறப்புப் படலம், பா.133)

கலப்பதி – கப்பல் தளபதியைக் கலப்பதி எனப் புதுச் சொல் வழங்கல்

(காண்டம் 1 : தன்னாடு மீட்சிப்படலம், பா.101)

ஆங்கில வினயன் (காண்டம் 3 : வெகுபோர்ப் படலம், பா.76)

ஆங்கிலச் சொற்களை பயன்படுத்துதலையும் காணலாம்.

கிச்சனும் போலாகும் கிளரும் வெஞ்சிறை
எச்சினில் டோகனும் இதழின் போதகர்
நீச்சலும் புதுமுறை நீச்ச லின்மையர்
விச்சினம் விளம்புமால் வீங்குமெண்ணதில்

(காண்டம் 3 : முதற்போர்ப் படலம், பா.29)

தமிழ்மொழியைச் சுட்டப் பல அடைகளைப் பயன்படுத்துதல் குறிக்கத்தக்கது. இதனை மெய்ப்பிக்கும் பாடல்:

கங்கை விஞ்சிடும் காவிரித் தீந்தமிழ்ப்
பொங்கும் பூரணப் பொருநையின் பூந்தமிழ்த்
தங்கு மாரணத் தண்டமிழ் முத்தமிழ்
வங்க வாரண வஞ்சியின் வண்டமிழ்

(காண்டம் 1 : ஆற்றுப்படலம், பா.44)

நதிகளும் சிறந்த ஆடைகளைக் கொடுத்துச் சுட்டுதல் குறிக்கத் தகுந்தது. முதல் காண்டம் ஆற்றுப்படலத்தில் பல அடைகளுடன் நதியைக் குறிப்பிடுகிறார். இவ்வகையில் நன்னதி (பா.52) இன்னதி (பா.54) பாய்நதி (பா.55) நீர்நதி (பா.56) வெண்ணதி (பா.63) கொண்ணதி (பா.65) போன்ற தொடர்கள் காணப்படுகின்றன.

### சில சொல் விளையாட்டுக்கள் அமைத்தல் :

சில சொற்களை அமைத்துப் புதுமைத் தொடர்களையும், பாடலையும் அமைத்தல் கண்டு மகிழலாம். சில பாடல்கள் சொற்பின் வருநிலை அணியையும் நினைவுபடுத்துகின்றன.

கற்பினாலுறுங் காதலில் காதலால் உறுங்கற்பினர்

(காண்டம் 1 : பனிநாட்டுப்படலம், பா.15)

இலருளர் ஊர்இலர் (காண்டம் 2 : மந்திரப்படலம், பா.25)

உழைப்பதற்கு அழைத்தவர்
உழைப்பினில் மிகுந்துபின்
உழைத்தவர் உழல்துயர்
பிழைபல பெருமையோ (காண்டம் 2 : மந்திரப்படலம், பா.72)

சரீரதரி சமமாகம சரிதாமத மதரீப்
பரீசாரிமப் பரிசாதகப் பரிமானித நிதம
தரீமா தம் ரிதமாமத பதமாரிக நிதநீ
கரீசாரிதப் பரிமாணிதப் பணிநீரிதப் பதனீ
(சரீரி = ஆத்மா ; தரி = தரிக்கின்ற)

(காண்டம் 1: பனிநாட்டுப்பயணப்படலம், பா.65)

இலமல்லது உளமல்லது இளையா இளம்பருவம்
புலனல்லது உளிமில்லது புகழும் பலமாற்றம்

(காண்டம் 3; சாந்திப்படலம், பா.47)

இல்லது மல்ல உள்ளது மல்ல

(காண்டம் 5 : முரண்காண்படலம், பா.140)

எனவே, இருபதாம் நூற்றாண்டின் மொழிநிலையை வெளிச்சப்படுத்தும் பல மொழிக்கூறுகளை இலாவகமாகப் பயன்படுத்தி, மகாத்மா காந்தி காவியம் சிறப்புறுதலைக் கண்டு மகிழலாம். கற்பனை, வருணனை, அணிநயம், அழகியல், இசைநயம் போன்ற இலக்கிய உணர்வுகள் மட்டுமின்றி இலக்கணச் சிந்தனைகளுக்கும் இதுபோன்ற கவிதைகள் பயன்படுதல் சுட்டத்தக்கது; போற்றத்தக்கது. இதுபோன்ற காவிய நாயகர்களை ஏற்றுவதும் போற்றுவதும்தானே நம்மனோர் கடமையாகும்.

# 4. இராமாநுசக் கவிராயரின் கலை மரபினர்

**சீர்மிகு இராமாநுசக் கள்ளப்பிரான்**
பாண்டியன் கிராம வங்கி மேனாள் பெருந்தலைவர்.

**நாற்றங்கால் :**

இராமாநுசக் கவிராயர் தமது இளம் வயதிலேயே தாயாரை இழந்து விட்டதால் தனது தாய்வழிப் பாட்டனாரான திருப்பாற்கடல் நாதக் கவிராயரால் அரவணைக்கப்பட்டு வழிநடத்தப்பட்டு வளர்ந்தார். திருப்பாற்கடல்நாதக் கவிராயர் வைணவ அடியார்களால் இளையாழ்வார் என்று போற்றப்பட்ட புகழ்மிக்கவர். பல ஊர்களுக்கும் சென்று பிரபந்தப் பாடல்களைப் பரப்பியவர். அவர் வீட்டில் எப்போதும் கூட்டம் நிரம்பியிருக்கும். மறந்தும் புறந்தொழாதவர். இராமாநுசக் கவிராயர் எல்லா மதங்களையும் மதித்தவர். விநாயகர், முருகன், சிவன், அங்கயற்கண்ணி, இயேசு, அல்லா, நபிகள் நாயகம் போன்ற எல்லாரையும் போற்றிக் கவி எழுதியுள்ளார். இந்துக்கள் மட்டுமின்றி எல்லா மதத்தவரும் பயன்பெற வேண்டும் என்ற நோக்கில் நம்மாழ்வார் சபை நிறுவி, நற்குணங்களும் சீலமும் எல்லா மக்களிடமும் வளர வேண்டும் என்பதை முதன்மையாக வைத்து கல்வி, மருத்துவம், ஆன்மிகக் கல்வி வளர்க்க ஆவன செய்தார்.

இந்த இளையாழ்வார் தம் பிள்ளைகள், பேரன்;, பேத்தியருக்குப் பிரபந்தப் பாடல்களை விளக்கிப் பாராயணம் செய்யவைத்தார். நாள்தோறும் வீட்டில் பிரபந்தச் சேவை உண்டு. எல்லாப் பிள்ளைகளுக்கும் பிரபந்தப் பாடல்கள் மனப்பாடம் ஆகிய செய்தி குறிப்பிடத்தக்கது. கவிராயரே இந்தப் பாட்டனாரைப் பற்றி எழுதியிருக்கிறார்.

ஆரமுதன் அருங்கழலே அடைக்கலமாய் அவனருளின்
சீர்நலங்கள் எடுத்துரைத்துச் செகமெல்லாம் உய்வித்த
பேரருளின் இளையாழ்வார் பேர்பிறங்கும் பெருந்தகையன்
வார்கழலே வணங்குகின்றேன் வல்வினையேன் துணையாக.

இவர் மகன் காசினிவேந்தன் கவிராயர்,பிரபந்தப் பாடல்கள், கம்பராமாயணம் மற்றும் சங்கத்தமிழ்ப் பாடல்களை இசை சேர்த்து பாடும் திறமை மிக்கவர். இவரது வீட்டில் எப்போதும் கவிவாணர்களும், கலைஞர்களும் கூடி இருந்து பாடி மகிழ்வார்கள். இவர்கள் குடும்பத்தார் திருப்புளிங்குடிக் கோவிலில், (நெல்லை நவதிருப்பதிகளில் ஒன்று) பெருமாள் புறப்பாடு ஆகுமுன் வாகனக் கவிபாடும் உரிமை பெற்ற கவிராயர்கள் ஆவர். தாய்மாமனான இவர், இராமாநுசக் கவிராயரைத் தத்து எடுத்து எடுத்துக் கொண்டதால், இராமாநுசம் பிள்ளை, இராமாநுசக் கவிராயர் ஆனார். ஆனால் தன் வாழ்வில் ஆயிரக்கணக்கான பாடல்கள் எழுதி, காவியம் படைத்துக் கவிராயர் என்ற அடைமொழியாலேயே அறியப்பட்ட இராமாநுசக் கவிராயர் முடிசூட்டிக் கொண்டது திருப்புளிங்குடிப் பெருமாள் காலடியில்தான். நம்மாழ்வாரால் பாடப் பெற்ற இந்துக் கோவிலில் உள்ள பெருமாளைக் கவிராயரும் பாடியிருக்கிறார்.

பொருளொடு பொருளின் போகமும் பொய்யா
அருள்வழி யளிக்கும் அமலன தடியே
கருதிடும் மதியே கடையனேற் கருள்வாய்
திருவினிற் றிருவென் புளிங்குடி யானே (திருமால்மொழி9:3:2)

இராமாநுசக் கவிராயரைப் பெற்ற தந்தையான கள்ளப்பிரான் பிள்ளையும் ஒரு பாரம்பரியமான பக்திப் பரம்பரையில் வந்த திருநெல்வேலி சைவர் ஆவார். அவர்களும் பக்தியில் திளைத்ததால், வைதீகம் பிள்ளை வகையார் என்று அழைக்கப்பட்டனர். தனது இறுதிக் காலத்தில், தரையில் மகன் மடியில் தலைவைத்துப் படுத்த நிலையில், பச்சை, பச்சை என்று அவர் முனக, அவனைவரும் பச்சை மாமலைபோல் மேனி என்ற பாசுரத்தைப் பாடியது இன்றும் என் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்திருக்கிறது. சிறந்த சட்ட வல்லுநரும், வழக்கறிஞரும், எல்லோர்க்கும் உதவி மகிழ்பவருமான தன் தந்தை கள்ளப் பிரானைப் போற்றிக் கவிராயர் எழுதியுள்ளார்.

அற்றவர்க் கென்றும் ஆதர மளிப்பவன்
சட்டநூல் வலன் சங்கடந் தவிர்ப்பவன்
கற்றவன் உயர் கள்ளப்பிரா னெனைப்
பெற்றவன் பெருங்கழற் பணி நெஞ்சமே

அதுபோன்று, தாய்மாமனான தன் சுவிகாரப் பிதா காசினிவேந்தன் கவிராயரையும் போற்றிக் கவிராயர் பாடியிருக்கிறார்.

தாயின்பின் தனக்கில் லதோர் மகவென
நேயமா யெனை மகவெனக் கொண்டவன்
மாயன் மாக்கழல் மகிழ்இளை யாழ்வார்
வாயுங் காசினி வேந்தடி பணிநெஞ்சே

யானை மாலை போட்டு மன்னனாக்கியது போல், ஒரே நாளில் தன்னைப் சீமைச் சம்பிரிதிப் பண்ணை வீட்டில் (பெரிய வீட்டில்) சேர்த்த இறையருளை எண்ணி, அந்தப் பெருநிழக்கிழாரான அரங்கநாதபிள்ளையையும் போற்றிக் கவிராயர் பாடியிருக்கிறார். அவர் வீட்டில் எப்போதும் விருந்தினர் கூட்டம் மொய்க்குமாம்; நாள்தோறும் நாற்பது பேர் உணவருந்துவார்களாம். கடைசி இலைக்குக் கறிகாய் தட்டிப் போகக் கூடாது என்பதற்காக அவர் கடைசி இலையில் அமர்ந்து உணவருந்துவார் என்று பெரியவர் திரு.நம்பிராசபிள்ளை அவர்கள் சொல்வார்கள். அந்த அரங்கநாதபிள்ளையைப் பற்றிய கவிராயரின் பாடல் பெருமை பொருந்தியது;

அரங்க நாமம்கொண் டனைத்துந் தொடங்கிடும்
அரங்க நாதனென் சுவீகார அன்னைபிதா
தரணியாற் றழைத் தனகவி ராயனேன்
சிரங் கனிந்தவன் செங்கழற் பணிநெஞ்சே

கவிராயரின் சிறிய தந்தை பெரிய நம்பியாபிள்ளை அப்போதே வைணவன் என்ற பத்திரிக்கை நடத்தி வந்தார். இதில் பெரியார் அவர்களின் சகோதரர் ஈ.வே.கிருட்டினசாமி நாயக்கர் அவர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளார். அவ்வப்போது குடும்பத்தோடு ஆழ்வார்திருநகரி கோவிலுக்கு வரும்போது இவர் இல்லத்தில் வந்து தங்குவதும் உண்டு. இந்தச் சித்தப்பா, கவிராயரின் ஆலோசகரும் வழிகாட்டியுமாகத் திகழ்ந்தார். இவரது மகன் டி.பி.இராமாநுசன் சிறுபிள்ளையாயிருக்கும் போது இவர் மறைந்து விட, அவரைத் தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டு கல்வி, கேள்விகளில் சிறக்க வைத்தது கவிராயரும் அவர் சகோதரரும் ஆவர். இப்படித் தோட்டத்தில் வளர்ந்த மாமரமாகப் பல நூல்களை இந்தப் பிள்ளை யாத்துச் சென்றது.

கவிராயரின் சகோதரர் திருப்பாற்கடல்நாதன், சகோதரிகள் இராம நாச்சியார் கோதைநாச்சியார் எல்லோருமே பிரபந்தப் பாடல்களில் திளைத்தவர்தாம். பாட்டனார் இளையாழ்வார் பயிற்றுவித்தபடி, தினமும் உணவருந்துமுன் பாசுரம் பாராயணம் பண்ணும் வழக்கமுடையவர்கள். கோதை நாச்சியார் அம்மாள் தனது 93ஆம் வயதிலும் திருப்பாவை, நாச்சியார் திருமொழி திருவிருத்தம் போன்ற பல பிரபந்தப் பாடல்களைப் பாடுவதைக் கேட்டு வியந்திருக்கிறேன்.

ஊரெல்லாம் போற்றி நின்ற இளையாழ்வாரின் குருவான, தன்னை ஈன்ற தகப்பனார் கள்ளப்பிரான் தாத்தாவான வைதீகம் பிள்ளை என்று போற்றப்பட்ட தன் பூட்டனார் கள்ளப்பிரான் அவர்களை நினைத்து, பணிந்து போற்றிக் கவிராயர் பாடல் எழுதியுள்ளார்.

பாற்கடல் திருநாதன் பெயரினன்
ஏற்கும் வைதீகப் பூட்டன்என் கள்ளப்பிரான்
போற்றும் மேற்சீடன் பொங்குபற் சீடரால்
ஏற்றநாம மிளையாழ் வார்என் பாட்டனே.

திருப்பாற்கடல் நாதன் கவிராயர் என்ற பெயர் கொண்ட என் பாட்டன் (இளையாழ்வார் சுவாமிகள் - தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாத ஐயர் இவரைச் சந்தித்ததாக எழுதியுள்ளார்) தன் குருவான என் பூட்டனார் வைதீகம் பிள்ளையான கள்ளப்பிரான் பிள்ளையால், (சடகோப கோத்திரம் - சுவாமி நம்மாழ்வார் வழிவந்தவர்கள்) ஏற்றுக் கொள்ளப்பட்ட மேன்மையான சீடர், பெரிய அளவிலான தன் சீடர்களால் இளையாழ்வார் என்று அழைத்துப் போற்றப் பட்டவர் என்கிறார் கவிராயர்.

தனது ஆலோசகரும் சிறிய தந்தையுமான வைணவன் பத்திரிக்கை ஆசிரியர் பெரிய நம்பி அவர்களையும் கவிராயர் போற்றியுள்ளார்.

வைணவ னெனும் வாசக மிதழது
பெய்நயம் தரும் பெரியதோர் நம்பியாம்
செய்நயம் தருஞ்செழி சிறுபிதாக் கழல்
உய்யப் போற்றி யுகந்தடி பணிநெஞ்சே.

**வேரும் விழுதும் :**

கவிராயரின் குடும்பச் சூழலில் எல்லோருக்கும் பிரபந்தப்பாடல்கள் பாடமாயிருந்த நிலையில், ஏற்கனவே வேறு எதிலும் ஈடுபாடுகள் இல்லாது, கல்வியிலும், பக்தியிலும், ஞானத்திலும் பெரும் ஈடுபாடு கொண்டு, அதிலேயே ஊறி, தனக்கு இயற்கையிலேயே வாய்க்கப் பெற்ற கவிபுனையும் திறனில் தேர்ச்சி பெற்ற கவிராயர், ஓர் இமயமலையாய் உயருவதற்கு அடிப்படையாய் அமைந்த வேர்கள் பற்றிப் பார்த்தோம். அதில் முழுமையாக, ஈடுபட்டு, காவியம் படைத்து, கொள்கைகளைப் பரப்பி, எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் வாழ்ந்து காட்டி, வழிகாட்டியாய் அமைந்து அவர் உருவாக்கிய படைப்பாளிகள் அநேகம்பேர். அவர்தம் விழுதுகள் அவர் கொள்கைகளைப் பரப்பி அவர் பாரம்பரியத்தைப் பேணி வருவது குறிப்பிடத்தக்கது.

கவிராயரால் தோற்றுவிக்கப்பட்ட நம்மாழ்வார் சபாவில் கவிராயர், செல்வநம்பி சுவாமிகள், இராமநாச்சியார் அம்மாள், கோதை நாச்சியார் அம்மாள், அரங்கநாயகி அம்மையார், கோதைநாயகி, பெரிய திருவடி, காசினி வேந்தினி, மீனாம்பிகை, செல்வா, விசயராகவன், திருவேங்கட இரரமாநுசம், செயலெட்சுமி ஆகியவர்களுடன் நானும் பிரந்த சேவை ஆற்றுவது வழக்கம். விழாக்காலங்களில் குழுக்களாக வந்து பங்கேற்பார்கள். வைணவர்களும் வந்து பங்கேற்பதுண்டு. இப்போதும் விசயராகவன் அவர்கள் குழுக்களோடு பாராயணம் செய்து வருகிறார்.

கவிராயர் என்ற ஆலமரத்தின் பல விழுதுகள் பக்தி இலக்கியத்திலும், கலைகளிலும், தமிழிலும், வேர்விட்டுப் படர்ந்திருக்கின்றன. கலை கலைக்காகவா அல்லது கலை வாழ்க்கைக்காகவா என்ற கேள்வி எழும்போது, கலை வாழ்க்கைக்காகத்தான் என்ற கோட்பாட்டைத் தான் முழுமையாகத் தழுவியதோடு, தன் பாரம்பரியத்திற்கும் கவிராயர் அழுத்தமாகச் சொல்லிச் சென்றிருக்கிறார். சொல்லியது மட்டுமல்ல, வாழ்ந்து காட்டி வழிநடத்தியிருக்கிறார் என்பது அந்த மாமேதையின் மகத்துவம் ஆகும்.

இறை நம்பிக்கை, சத்தியம், தருமம், அன்பு, பண்பு, சேவை, அகிம்சை ஆகிவற்றை வள்ளுவரும் நம் பாரம்பரியமும் வழிகாட்டியுள்ள, புனிதர் காந்திக்குப் பிடித்த கொள்கைகளைப் போற்றியுள்ளனர். அதன்படி

வாழ்ந்து காட்டி ஆரவாரமில்லாமல் அமைதிபெற்ற கோடியில் ஒருவர் கவிராயர். தம் பிள்ளைகள், உறவினர்கள், தாம் வளர்த்த கல்விச் சங்கம், தாம் ஆரம்பித்த பள்ளிகள், தம்மிடம் வரும் எல்லோரிடமும், தற்போது நாட்டிற்கு மிகத்தேவையான நற்குணங்களைப் பற்றி விவரித்து, அவ்வாறு வாழ்ந்து சான்றோன் ஆகவேண்டும் என்று வேண்டுகோள் விடுப்பவர். அதன் தாக்கம் தான் என்று வேண்டுகோள் விடுப்பவர். அதன் தாக்கம் தான் நான் எழுதிய வெற்றிக்கு வழிகாட்டும் மேலாண்மை என்ற புத்தகத்தில் முகிழ்ந்திருக்கிறது; மற்றும் பலர் படைப்புக்களில் மிளிர்கிறது.

### பணநாயகம் படுத்தும் பாடு :

இன்று எல்லாமே பணம்தான் என்ற நிலை நிலவுகிறது. கொள்கைகள், உண்மை, உயர்குணங்கள், உறவுகள், நட்புகள், அன்பு, பண்பு எல்லாம் புறந்தள்ளப்பட்டுவிட்டன! கறுப்புப் பணம், இலஞ்ச லாவண்யம், கூட்டுக் கொள்ளை எல்லாம் அன்றாடம் நடைபெறும் நிகழ்ச்சிகளாகி விட்டன. பிறருக்காக வாழ்வது, சமுதாயச் சிந்தனையோடு வாழ்வது, பிறருக்குத் துன்பமோ தொல்லையோ தராமல் வாழ்வது, கொள்கைக்காக வாழ்வது எல்லாம் போய், சுயநலம் ஒன்றே குறியாக, எல்லாம் நாமே, உடனே அனுபவிக்க வேண்டும் என்பதே குறிக்கோளாக மக்கள் வாழத் தலைப்பட்டுவிட்ட நிலையில், கொடுத்துவக்கும் கோட்பாடு, யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற மனோபாவம், பிறர் நலம் போற்றும் பெற்றி, ஊருக்கு உழைக்கும் உத்வேகம். அறம் பேணும் முனைப்பு எல்லாம் மக்கள் மனத்தில் மறுபடி தழைத்திட எழுத வேண்டும் என்பதே கவிராயரின் கொள்கை அதை அப்படியே ஏற்றுக் கொண்டு, அவர் வழி எழுதுபவர்களை அவர் உருவாக்கியுள்ளதை, அவர் பாரம்பரியம் என்று அழைக்கலாம். இது பத்தாம் பசலித்தனம் என்று கொள்வோரும் உண்டு. அதில் எழுத்தாளர்கள் சிலரும் அடக்கம்.அந்த மாயையில் மயங்குகின்ற மக்களே அதிகம். நல்ல கொள்கைகள் நடக்கும் சமுதாயத்தை உருவாக்குவதே இன்று உலகில் முதல் குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்குக் கவிராயர் பாரம்பரியம் வளர வேண்டும்.

கவிராயரின் மூத்தமகள் அரங்கநாயகி அம்மையார் பல இலக்கிய, பக்தி நூல்கள் எழுதியிருக்கிறார். தமிழக அரசின் பரிசும் பாராட்டும்

பெற்றிருக்கிறார். இலக்கிய இன்பம், ஆழ்வார்கள் அருளமுதம், இலக்கியப் புதையல், ஆச்சாரியப் பிரபாவம், சனாதன தருமம் – ஓர் அறிமுகம் போன்ற புத்தகங்களை எழுதியுள்ளார். உங்களுக்கு எத்தனை பிள்ளைகள் என்று கேட்டால், நடக்கும் பிள்ளைகள் மூன்று; நடவாப் பிள்ளைகள் ஐந்து என்று பதில் சொல்வார். பல பாடல்கள், கட்டுரைகள் எழுதியுள்ளார்.

திருவரங்கம் பெரிய கோவிலைப் பற்றிய இவரது விரிவான கட்டுரை ஆய்வாளர்களுக்குப் பெரிய புதையல் என்றும் அதுதான் ஆவணம் என்றும் அறிஞர்கள் புகழாரம் சூட்டியுள்ளார். பல வைணவ அடியார்கள் போற்றிப் பாராட்டியுள்ளனர். இவரது தமிழன்னை பாடலும் கட்டுரைகளும் தமிழுக்கோர் அணியாகும் என்று தமிழ் அறிஞர்கள் பகர்ந்துள்ளனர். கவிராயருடனே நெடுங்காலம் தங்கியிருந்து பயின்ற பயிற்சி இவருக்குத் தனிச்சிறப்பை நல்கியுள்ளது. இவரது நூல்களுக்குத் திருப்பதி தேவதானத்தின் ஆமோதிப்பும், அரவணைப்பும் கிடைத்திருக்கிறது. கவிராயரின் கொள்கைகளான இறைபக்தி, அறம்பேணல், உண்மை இவரது நூல்களில் மிளிரும்.

கோதை நாயகி அவர்கள், கவிராயரின் திருமால்வழி என்னும் நூலுக்கு இரா.கள்ளப்பிரானோடு இணைந்து நல்ல முறையில் உரைஎழுதியிருக்கிறார். இன்னும் கவிராயரின் திருமால் ஒளி என்ற நூலுக்கும் உரை எழுதுவதோடு, பாடல்களும் எழுதி வருகிறார். இவர் நூலுக்கும் திருப்பதி தேவதானத்தின் அங்கீகாரமும் அரவணைப்பும் கிட்டியுள்ளன. கவிராயரின் சிந்தனைகளை உள்வாங்கி, அவற்றை எளிதாக எல்லோரும் புரிந்துகொள்ளும்படி உரை எழுதியுள்ளார்.

கவிராயரின் இளவல் (சித்தப்பா மகன் – அவர் வளர்ப்பில் உருவான நாடகக்கலை ஏந்தல்) கி.பி.இராமாநுசன் வருவான் வடிவேலன், தாய் மூகாம்பிகை, தேவி தரிசனம், நம்பினார் கொடுவதில்லை ஆகிய பக்தித் திரைப்படங்களுக்கும் வேறு சில படங்களுக்கும் கதை – வசனம் எழுதியுள்ளார். அதற்கு மேலாக, அழியாத கருத்துக் கருவூலங்களாகப் பல நாடகங்கள் பக்திரசம் சொட்டச் சொட்ட எழுதியுள்ளார். அற்புதர் இராமாநுசர் பாண்டுரங்கன் தரிசனம், ஆழ்வாரும் ஆண்டாறும், ஞான சுந்தரி, அரே கிருஷ்ணா, ராம் ராம், பக்திச் சரிதங்கள், விவேகானந்தர்

அருச்சனைப் பூக்கள் ஆகிய இந்த நாடகங்கள் நம் மாணவர்கள் நடித்து, மனத்தில் ஏத்தி, மனத்தைச் செம்மைப்படுத்த உதவும் கருவூலங்கள் பக்திச் சுரங்கங்கள் – கவிராயர் வாழ்நாள் முழுதும் போற்றி வாழ்ந்து காட்டிய, அறநெறி பேணும் கொள்கைகளைப் பரப்பும் விலை மதிப்பில்லா புத்தகங்கள். தமிழக அரசின் பரிசும், பாரத அரசு வங்கியின் பரிசும் பெற்றவை.

இன்னொரு சிறப்பும் இவருக்குண்டு. டும்டும் கல்யாணம் என்ற தலைப்பில், லீலா திருவேங்கடம் என்ற பெயரில் இவர் எழுதியது குமுதம் இதழ் நடத்திய சிறுவர் கதைப் போட்டியில் முதல்பரிசு பெற்றது. அதில் சிறப்புச் செய்தி என்னவென்றால், அதில் இவர் சித்திரித்திருந்த ஓர் வயதான தம்பதி, சீதாப்பாட்டி அப்புசாமித் தாத்தாவாகப் பின்னர் விசுவரூபம் எடுத்து பெரும் வெற்றி பெற்றது. படங்கள் கூட இவர் எழுதிப் பரிசு பெற்றிருந்த, இவர் விவரித்ததற்கேற்ப வரையப்பட்ட படங்கள் உறவினர் இருவரை மனத்தில் கொண்டே அந்த தம்பதி உருவாக்கப்பட்டது என்று அவர் என்னிடம் கூறினார்.

எப்போதும், எதிலும் கவிராயரையே வழிகாட்டியாகக் கொண்ட இந்த நாடகக்கலை ஏந்தல், தனது இரண்டு புத்தகங்களைக் கவிராயருக்குப் படையல் செய்துள்ளார். இவருடைய நூல்களுக்கும்திருப்பதி தேவதானத்தின் அங்கீகாரமும் ஆதரவும் கிட்டியுள்ளன. கவிராயரின் கொள்கைகளைப் பக்தி நாடகங்களால் பரப்பியவர் இவர்.

கவிராயரின் மகன் **இராமாநுசக் கள்ளப்பிரான்** கவிதை, கதை, கட்டுரை, ஆய்வுநூல், எல்லாம் தந்தை கவிராயர் வழியிலேயே எழுதியிருக்கிறார். பக்திப் பாடல்கள் இயற்றி, இசை சேர்த்துப் பாடி (கவிராயர் போலவே) ஒலி நாடாக்கள், ஒலி ஏடுகள் வெளியிட்டிருக்கிறார் – வெற்றிக்கு வழிகாட்டும் மேலாண்மை என்ற இவரது நூலின் திருத்தி அமைக்கப்பட்ட ஐந்தாவது பதிப்பு பலராலும் பாராட்டப்படுகிறது. கள்ளப்பிரான் அவர்கள், தன் தந்தையாரும் மகத்தான ஆன்மிகக் கவிஞருமான இராமாநுசக் கவிராயரின் வழிநடப்பவர்; அற்புதமான கவிஞர்; இசையோடு கவிபாடும் வித்தகர் என்று போற்றப்படுகிறார். மனித வாழ்க்கை என்பது அறம் என்னும் நெறியைச் சார்ந்து, அனைவருக்கும் பயன் விளையும் வண்ணம் துலங்க வேண்டிய ஒரு வாய்ப்பு என்பதே

அவர் கொள்கை. கவிராயரின் தாக்கம் என்றும், இப்படிப் பல முகங்கள், பல்வேறு வகையான ஆற்றல்கள் கொண்டவர் இவர், ஆய கலைகள் அத்தனையும் கற்றுத் தெளிகின்ற தாகம் இவருக்கு இவர் தந்தையார் வழியாகக் கிடைத்திருக்கிறது. அருந்ததமிழ் ஆய்விலிருந்து ஆர்க்கிமிடீசு தத்துவம் வரை அறிவும் ஆற்றலும் இவர் தந்தையாருக்கு உண்டு. இந்நூலாசிரியருக்கு இவையெல்லாம் தந்தை வழிவந்த செல்வம் எனக் கொள்ளலாம். அந்தச் சிந்தனைத் தெளிவையும் ஞானப் பிழிவையும் இந்த நூலில் பரக்கக் காணலாம் என்று சான்றோர் குறிப்பிட்டுள்ளனர்.

திரை இசை, தமிழ் இசை, கருநாடக சங்கீதம், திருமகள் இருபது, சாயிநாதர் தவனமஞ்சரி, மணிவிழா மலர் (பசனைப் பாடல்கள்) மற்றும் ஆங்கிலத்தில் திருக்குறள் மொழிபெயர்ப்பு, ஆய்வு நூல்கள், திருமால் வழி உரை (கோதைநாயகியுடன் இணைந்து எழுதியது) எல்லாம் இவர் எழுதியவை. தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித்துறை பரிசும், திருப்பதி தேவதானத்தின் அங்கீகாரமும் ஆதரவும் இவர் பெற்றிருக்கிறார்.

கவிராயரின் அடுத்த மகள் காசினிவேந்தினி இராமாநுசன் கவிக்குயில் என்று போற்றப்படுபவர். பல கவிதை நூல்களை யாத்திருக்கிறார். பல பக்திப் பாடல்கள் எழுதி, இசை சேர்த்துப் பசனைப் பாடல்களாகப் பாடி வருகிறார். தானே நாட்டியம் ஆடுவதோடு, லிபியாவில் நாட்டியப் பள்ளியும் நடத்தியுள்ளார். ஆயர்பாடி அமுதம், மணிவிழா மலர் (பக்திப் பாடல்கள்), பக்திச் சுனை அமுதம் – சாயிபாபா, பக்திச் சுனை அமுதம் – விநாயகம் பக்திச் சுனை அமுதம் – முருகன் பக்திச் சுனை அமுதம் – அம்பாள் பக்திச் சுனை அமுதம் – பெருமாள் ஆகிய பல நூல்கள் எழுதியுள்ளார். இவருடைய நூல்களுக்கும் திருப்பதி தேவதானத்தின் அங்கீகாரமும் ஆதரவும் கிட்டியுள்ளன.

கவிராயர் குழுவில் அவரின் முதல் மகள் அரங்கநாயகி தமிழ் முதுகலைப் பட்டமும், கோதைநாயகி தமிழில் பட்டமும் பெற்றவர்கள். ஆனால் இவர்களும் கவிராயரின் மற்ற வாரிசுகள் போல் பக்திவழி தமிழ் பாண்டித்யம் அடைந்தவர்கள் தாம். (கல்லூரிகளில் படித்து இசைப்பட்டம் பெற்றுக் கச்சேரி செய்வது போலல்லாமல் குருமூலம் பாடங்கேட்டு சங்கீதவித்வான் ஆவது போல) பக்திப்பாடல்களில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் மூழ்கித் திளைத்துத் தமிழை, தமிழ்க் கவிதையைத் தம்

வசமாக்கிக் கொண்டவர்; பக்தி உணர்வோடு தமிழ் வளமை பெற்றவர்கள் – இதுவே இராமாநுசக் கவிராயரின் பாரம்பரியத்திற்கு உள்ள தனிப் பாங்கு.

கவிராயரின் மகள் வயிற்றுப் பேரன், பேத்தி, அரங்கநாயகி அம்மையாரின் பிள்ளைகள் திருமகிழ் மாறன், செல்லப்பூங்கோதை கவிதைகள் எழுதுகிறார்கள். பாடுகிறார்கள், சின்னமகள் காசினிவேந்தினியின் குமாரர்கள் ஞானதேசிகன், இராமாநுசன் கவிதைகள் எழுதிப் பாடுகிறார்கள். மகளின் மகள் செல்லப் பிரசீதா கவிதை எழுதிப் பாடுவதுண்டு. இன்னொரு மகள் கோமதியும் பேத்தி அரினியும் (விசாலாட்சி திருவரங்கச் செல்வி) பாடி இசைப் பேழை வெளியிட்டுள்ளார்கள். கவிராயரின் மகள் காசினிவேந்தினி, தங்கை மகள் காந்திமதி, தம்பிமகள் அரசாழ்வார், பேத்தி கோமதி நாட்டியம் பயின்று அரங்கேறியிருக்கிறார்கள். இவர்கள் எல்லோருமே கவிராயரின் கொள்கைகளைப்போற்றி, தங்கள் படைப்புக்களில் வெளிப்படுத்தி யுள்ளனர்.

கவிராயரின் மகனின் மகன் இராமாநுசன் (புதுயுகன்) ஓர் சிறுகதை, கவிதை, புதினம் படைக்கும் எழுத்தாளர். இவரது சமுத்திர சங்கீதம் கவிராயரின் நூற்றாண்டைக் கொண்டாடுகிற வகையில் விமரிசையாக வேதாரண்யத்தில் வெளியிடப்பட்டது. காந்திகாவியம் புகழ் கவிராயர் இராமாநுசர் அவர்களின் பேரன் புதுயுகன், புதிய கண்ணோட்டத்துடன், புதுமையான முறையில், சமுத்திர சங்கீதம் படைத்திருக்கிறார். "இவர் தெறிப்பான சிந்தனைகளுக்குச் சொந்தக்காரர். அவர்களிடையே இருக்கிற ஆழ்ந்த நேசத்தின் ஈரம் இவர்கள் இணைய வேண்டும் என்ற தவிப்பை ஏற்படுத்துகிறது" என்று கவிப்பேரரசு வைரமுத்துவும், காதலுக்குரிய கண்ணியம், கௌரவம் ஆகியவற்றை அமரர் கல்கி போலவே இவரும் தருகிறார் என்று குருகுலத் தந்தை அ.வேத ரத்தினம் அவர்களும், இந்த ஆக்கம் அனைத்துலகத் தமிழ் மக்களுக்குத் தனிப்பட்ட வகையில் ஓர் சிறந்த படைப்பாக அமையும் என்று இலண்டன் தமிழ்ச் சங்கத் தலைவர் அசோகன் அவர்களும் இந்தப் புதினத்தின் முடிவு நெஞ்சை உறுக்குவதாக இருக்கிறது. ஒரு வாசகனாக – ஓவியனாக அலல – என் உணர்வுகளைத்தான் சொன்னேன். இந்தப் புதிய யுகத்தில் புதுயுகன் ஒரு

பெயர் பெற்ற நாவலராசிரியராகப் பரிமளிப்பதில் வியப்பேதும் இல்லை என்று ஓவியர் செயராசு அவர்களும் கருத்துத் தெரிவித்திக்கிறார்கள். திரைப்பட இயக்குநர் – தயாரிப்பாளர் மணிமாறன் "அவர்கள் தங்களின் சமுத்திர சங்கீதம் படித்தேன். படித்தேன். அமரர் கல்கியின் பொன்னியின் செல்வனில் நாட்டியமாடிய நந்தினியைப் போல், தங்கநிற மங்கை, அலைகடல் அழகி ஜென்னியைப் படைத்திருப்பது அற்புதம். சமுத்திர சங்கீதத்தை ஒரு தலைசிறந்த தமிழ்த் திரைப்படமாக்கலாம் என்கிற எண்ணம் என்னுள் எழுகிறது" என்று மடல் வரைந்திருக்கிறார். மாநிலத் தமிழ்ச் சங்கத்தில் ஏறத்தாழ ஒன்றரை மணிநேரம் சமுத்திர சங்கீதத்தைத் திறனாய்வு செய்து பேசினார் முனைவர் பா.வளன் அரசு. கட்டமைப்பு, வருணனைத் திறன், கதை மாந்தர், தத்துவ முத்துக்கள், எல்லாம் விவரித்து, உலகின் ஒப்பற்ற சிறுகதை "ஞானியின் பரிசு", வைரமுத்துவின் "தண்ணீர் தேசம்" ஆகியவற்றைப்போல இனிமையாக உள்ளது என்று கூறினார். இன்றும் நீங்கள் கன்னியாகுமரிக்குச் சென்றால் அந்த நெஞ்சை உருக்கும் காட்சியைக் காணலாம் என்று கதை முடிகிறது. ஆனால் நம் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிவந்து வடிகிறது! நெஞ்சை அள்ளும் கதை இலக்கியம் என்று முடித்தார்.

பக்கத்துக்குப் பக்கம், படிக்கப் படிக்க ஆனந்தம். மனசெல்லாம் பரவசம், திரும்பத் திரும்பப் படித்தேன். திருப்பித் திருப்பித் படித்தேன் மயங்கினேன், மயக்கம் தெளிந்த பின்பும் படித்தேன் என்று நீண்ட கடிதம் எழுதினார் பஞ்சாலைக் கவிஞர் ச.இளமுருகன். நாட்டின் சுதந்திரப் போராட்டம், மகளிர் முன்னேற்றம், ஆதரவற்ற பெண்குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்லும் சுதந்திரப் போராட்ட தியாகி சர்தார் வேதரத்தினம் அவர்களைப் பற்றி ஆங்கிலத்தில் புதுயுகன் எழுதியுள்ள AIR, FIREX WATER பல அறிஞர்களின் பாராட்டைப் பெற்றது. காந்தியாரையும்கவிராயரையும் இணைத்து எழுதிய பாங்கு எல்லோரையும் கவர்ந்தது.

புதுயுகனின் ஏழுவயது மகள் நிஷ்டாமீனாம்பிகா ஆங்கிலத்தில் புத்தாண்டை வரவேற்றுப் பாடல் எழுதி, கவிராயரின் பாரம்பரியம் இன்னும் உயிர்ப்போடு இருப்பதை நிருபித்திருக்கிறாள்.

இந்த வட்டம், இதில் பங்குபெறும் நம் எல்லோராலும், கவிராயர்

நூல்களைப் படித்து, ஆய்வு செய்து, பரப்பும் ஒவ்வொருவராலும் விரிவுபட்டுக் கொண்டே போகிறது. கோதைநாயகி அவர்கள் கூறியதுபோல், திருவடியோடு ஐவரானோம், வளனரசோடு அறுவரானோம் என்றபோது மோகனோடு எழுவரானோம் என்று தன் சிறப்புச் சொற்பொழிவில் குறிப்பிட்ட பேராசிரியர் மோகனைப் போல், கவிராயர் நூல்களைப் பயின்று, அவர் கொள்கைகளைப் பரப்பும் ஒவ்வொரு தமிழ் அறிஞரும், ஆர்வலரும், கவிராயர் பாரம்பரியத்தைச் சேர்ந்தவர்களே ஆவார்கள்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்

என்பது கவிராயர் வாழ்ந்து காட்டு பாதை. கவிராயரின் குரு காந்தியாரின் சத்திய சோதனையைப் படித்து, கவிராயரின் வாழ்க்கைப் பார்க்கும்போது, தராசு ஒரு பக்கமும் சாயாமால் நிற்பது காண பெருவியப்பும், மிகுந்த மரியாதையும், ஏன் பக்தியுமே ஏற்படுகின்றது.

**கவிராயர் தரும் செய்தி :**

கவிராயர் தம் வாழ்வின் ஆதார சுருதியாகக் கொண்ட கொள்கைகள் வாழ்ந்து காட்டிய, பரப்பிய, இலட்சியங்கள், அவர்தம் பாரம்பரியம் ஏற்றுக் கடைப்பிடித்துப் பரப்ப வேண்டிய பண்புகள்.

உயிர் வாழ்வதற்கு சுவாசித்துக் கொண்டே இருப்பது போலவே இறைபக்தியோடு, இறைவனை நினைத்துக் கொண்டே எல்லாக் காரியங்களையும் செய்ய வேண்டும்.

சத்தியம், தருமம் ஆகிய இரண்டையும் இரண்டு கண்களாகப் போற்ற வேண்டும்.

இறைவனே உயிர்; நாமெல்லாரும் அவன் உடலில் உள்ள சிற்றுயிர்கள்.

நம்மாழ்வார், ஆழ்வார்கள், நாயன்மார்கள், மற்றும் உலகெங்கணும் உள்ள ஆச்சாரியர்கள் வாழ்வின் வழிகாட்டிகள்.

சமயங்கள், சாத்திரங்கள் வெவ்வேறானாலும் இறைவனிடம் கொண்டு சேர்க்கும் பாதைகள்.

காந்தியம், வாழ்க்கையின் கடைப்பிடிக்க வேண்டிய முக்கிய வழிகாட்டிய சொத்துக்களில் சிறந்தவற்றைத் தருமத்திற்காகக் கொடுக்க

வேண்டும்.

எல்லா மனிதர்களையும் சமமாக மனத்தினுள் நேசிக்க வேண்டும். அதே சமயம் நமக்குக் கொடுக்கப்பட்ட பாத்திரத்தின்படி நடந்து கொள்ள வேண்டும்.

கம்பராமாயணம், ஷேக்ஸ்பியர் நாடகங்கள் மனிதனின் மன இயல்புகளை ஆழமாக ஆய்ந்து அழகாக வெளிப்படுத்தும் கருவூலங்கள்.

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சமாகும்.

சந்ததி விருத்திக்குத்தான் சம்சாரத்தை நாட வேண்டும்

உழைத்து உண்; அறவோடு உண் ; செறித்தது அறிந்தது உண்

அரைவயிறு அளவிற்கு உணவு; கால்வயிறு தண்ணீர் ; கால் வயிறு காலியாக இருக்க வேண்டும் என்பதே அளவான உணவு.

நீரைச் சுருக்கி, நெய்யை உருக்கி, மோரைப் பெருக்கி உண்ண வேண்டும்.

கற்பு என்பது இருபாலருக்கும் பொது

நம்பிக்கை நன்மை தரும்; சக்தி தரும்

காமம் நிலையற்றது; காதல் நிலையானது

உண்மையான அன்பு நித்தியத்திற்கு இட்டுச் செல்லும்

உண்மையின் போராட்டம் நன்மையில் முடியும்

மெய்வருத்திக் கைசெய்து உண்மின்

மருத்துவம், கல்வி, பசிநீக்க உதவி செய்ய வேண்டும், ஆடம்பரச் செலவுகளுக்கு, அயலார்க்கும், உறவினர்களுக்கும் உதவக்கூடாது.

வீட்டில் எல்லோரையும் சமமாகப் பார்க்க வேண்டும்.

இவை அவர் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தவை. வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய அறவழிகளும், தத்துவங்களும், அவர் நூல்களில் விரவிக் கிடக்கின்றன. அவரது பாரம்பரியபத்தை பேணுவோர், அவற்றைத் தேடிக் கொணர்ந்து, வாழ்ந்து காட்டி, பரப்பும் வகை செய்தல் வேண்டும்.

பக்தி, தருமம், சத்தியம், நீதி, நேர்மை, அன்பு, பண்பு போன்ற நல்லவை பரவி, பணத்தாசை, சுயநலம், எப்படியும் வெற்றி, கூட்டுக் கொள்ளை போன்ற தீய சக்திகளை விரட்டி, சமுதாயத்தைச் சீரமைத்து, வாழ்வைச் செழிப்பாக்கி, அதையும், மகிழ்ச்சியும் உலகெலாம் நிலவச் செய்ய கவிராயரின் பாரம்பரியம் இணைந்து செயல்படுவோம்!



பெரும்புலவர் இராமாநுசக் கவிராயரின் திருக்குடும்பம்

# 5. Lyrics of life, Romanticism and Ramanuja Kavirajar: A literary analysis

**Professor T.K.RAMANUJAM[1], London**

## Introduction

Hundred years hence, who are you, I wonder,
reading my poem with such interest?
Hundred years hence.

- Rabindranath Tagore, 1400 Saal, 1895
(Mukhopadhyay S., 1999: Pg:11)

This paper presents a literary critique on 'Lyrics of Life' [1979], a poem collection in English written by a classical poet T.K. Ramanuja Kavirajar [1905 – 1985], who wrote his poems decades ago if not a hundred years ago like Tagore.

This compilation consists of 58 poems running over various themes such as love, law, passions, human inconsistencies, spirituality, nature etc.

This poet lived in the southern Indian town of Tirunelveli and profusely produced literature in both English and Tamil[2] his magnum opus being Mahatma Gandhi Kaviyam[3].

## Methodology

This paper evaluates the lyrical texture of Kavirajar through his themes set in this collection. It also examines the use of poetic elements, wordplay and concludes with a comparative analysis on a few romanticism poets.

1 Also writes as 'Pudhuyugan'
2 www.kavirajar.org
3 An epic in Tamil on the life of Mahatma Gandhi in 12, 285 verses

Wherever poems have been cited from the text of this analysis, the poem's title, paragraph and page numbers have been given right beneath.

The same has been applied wherever lines from other poets have been cited, but with the surname of the author and year of publication.

This critique pertains only to this collection and does not include any other work of this poet in any detail.

**Theme & Motif**

The poems in this collection exude true value and have everlasting appeal. This is predominantly due to the themes chosen by the poet and the sophistication in the depiction.

They mainly deal with the core issues of life with profundity and, with a certain nonchalant bravado, brush aside the superficial glamour of life which a commoner generally clamours after. This is exactly what that makes these poems unique, priceless and attaches longevity to them akin to the immortal lines on dawn sung by the famed Kalidasa.

All great poets who have paused time with their poetry, have done the same.

For instance one finds it natural to tie up the following lines of Kavirajar with the winged cupid of Shakespeare[4].

Love is young in eye then mind
Wakes itself from slumber blind
['The song of the coin', 16, pg: 131]

William Wordsworth defines good poetry as the 'spontaneous overflow of powerful feelings'.

4. Love looks not with the eyes, but with the mind,
And therefore is winged cupid painted blind (Shakespeare, 'A Midsummer Night's Dream', 1.1:234-235)

Even though Kavirajar embraces this idea, his cup of tea seems to be the higher octaves of human mind. Whilst he reverberates with the fervour and flavour of the English Romanticism poets of the mid – late 18th century, alongside Shakespearean sentiments & Kamban's refinements – who all have captured his imagination – Kavirajar's romanticism resides more on philosophy, inadequacies of the human flesh, spirituality and so forth.

He takes a Dickens-like dig on human contradictions, exposes the frails of mankind and conjures up a spiritual, ethereal balm as a poetic healer. This is in contrast to the shades of blasphemy brought out by poets like Shelly albeit resonating on the same arc of sensitivities.

There are many poems that run on this very same mill, with striking altruism, if a reader is prepared to show some generosity on recurrences.

**Rendering & word play**

Kavirajar's use of language is largely classical and colourfully tinted. Even though the poet's command over his native tongue Tamil far exceeds his sway of English, the language skills in this collection is fairly in line with the British romanticism poets such as Keats and Byron.

Kavirajar attaches paramount importance to the rhythm and metre in his rendering. This is a common trend that can be seen all through the collection.

For instance this feature stands out in 'Thambiraparani', as can be found below, where the poet takes the creative liberty in preferring to use a 'her' instead of the usual 'she', so as to maintain his rhyme for 'whisper', in line 3;

Many a love many a whisper
Many a hermit's peace
Many a he or many a her
Have got their soul's release
[Thambiraparani, 6, pg: 3]

All poems in this collection are lyric poems written for a metre or different metres in certain cases.

**Poetic elements: Symbolism, imagery & metaphors**

The imagery is attractive whenever Kavirajar depicts nature and it is powerful in 'Thambiraparani', a poem written for the river that flows through his hometown and flows in the vicinity of his dwelling.

The poet uses glittery imagery in the following lines;
On my golden sands or layered rocks
With then my neighbouring trees
Under silvery moon's flowing locks
Or evening golden breeze
[Thambiraparani, 7, pg: 3]

The 'golden sands' and the 'layered rocks' in the backdrop of some 'tree neighbours' paint a picturesque picture of the river bed of the free-flowing Thambiraparani under scintillating sunup. Kavirajar did have a love affair with this scene, as he took his bath in the river by the crack of dawn, all his life.

Similarly in 'Debt never Dies' given below, the poet portrays gorgeous imagery through his 'smiling green' and 'waving crops' which are refreshingly new, though the poem itself, wherein Kavirajar as a fatalistic realist and not the usual romanticist, languidly drives home the double grind of disappointment and old age.

Smiling green with sloping hills
With lovely fields and brooks and rills
Her vast domain with waving crops
Where wealthy lords of Indopur
['Debt never Dies', 4, pg: 97]

The two crimson ray-like lines from 'An Evening' given below, play a movie on dusk exclusively for our mental eyes with the 'fainting west' and 'far off birds';

The crimson rays are fainting west
And far off birds on wings to nest
['An Evening', 1, pg: 23]

Also, symbolism galore can be found in the titles of certain poems such as 'Bullet-Flower', 'Faded Blooms', 'Guilt's Innocence' and so on.

**Historic relevance and freedom**

The river of his native town has an enduring history and so sings the bard,

How old are you, how old are you
O perennial Thambiraparani...
[Thambiraparani, 1, Pg: 3]

He provides references mythical by reminiscing Ram's dip in it and links up with the Pandyas too.

Rama bathed his heart full sore
My cooling touch restore
Even sita's loss it troubled no more,
For mind accustomed bore
[Thambiraparani, 5, Pg: 3]

Alongside history, he has also dealt with universal sentiments;

Happy be the Christmas day
With sincere love and reverence pray
When the Lord our saviour christ was born
To save frail Man from sin forlorn

Sri Krishna born of lordly race
Chose the lowly shepherd's place
Love divine and highest grace
Is same or similar in every trace
['Humility is Divinity', 1, 6, pg: 128]

The analogy makes sense as both Krishna and Christ were born in similar humble settings, in east and west respectively, and enriched humanity with copious spiritual wealth.

Being a Gandhian himself and having written an epic on the Mahatma, the poet simply walks with his legs when he writes about the freedom of India and about Mahatma himself.

Although India now has tested its range of nuclear weapons, Kavirajar talks of his time in 'Freedom' when 'Bharath land the gem of the world' had no atom bomb.

Proud with martyred blood in red
Green with Nature's emerald bed
White with spotless soul-force fed
Lofty thus by virtue led[5]
['Freedom', 4, pg: 35]

**Kavirajar on 'empty vanishing blood'**

As claimed in his 'Root of life' as 'Life will be an empty staggering dream', Kavirajar often cogitates on the desolateness of life and ruminates on the purpose of the same.

5. Symbolism for the tricolour in the national flag of India

He is in his ethereal best in 'Faded Blooms' a moving elegy written for his tender daughter who deceased young. The poet flows in abject grief poignantly lamenting, 'Where will you sleep, where will you sleep, where will you sleep my child
There on the turf on the soft little couch where Nature is gay and mild'.

While a part of the poet's mind bemoans the 'icy Death' the other part characteristically gets philosophical.

Something more lasting than this empty vanishing blood
Some ethereal tie some eternal love by some such link is led
The soul immortal by nature free from fear or tears' flood
And grief and fear are passing shades or empty dreamy tread ['Faded Blooms', 9, pg: 62]

The rhythm is gripping and the ephemeral hue on 'empty vanishing blood' and the eternal cue on 'soul immortal' and 'passing shades' appear more as a solace to his own heart as it is for a pensive reader.

As a pattern, the bard in most poems makes a mockery of empty materialism and quizzes the vagaries of life's gambits.

As a parallel thought, it is worth summoning in memory the following immortal lines of Thomas Gray[6] which, with conspicuous symbolism, hint about wasted or unrecognised talent. This is clearly a populist pointer of association for the masses.

Kavirajar comes up with a similar streak in 'The Few' wherein he muses that 'countless drops do rain in hordes but only a few turn to pearls'.

---

6. Full many a gem of purest ray serene
The dark unfathom'd caves of ocean bear
Full many a flower is bom to blush unseen,
And waste its sweetness on the desert air.
(Thomas Gray, An Elegy Written In A Country Churchyar ; 53-56)

Few are good and few are clever
And few are Beauty's treasure
Many are waste though struggling endeavour
For each but bloom his measure
['The Few', 10, pg: 42]

Whether it is the survival of the fittest or the law of the spirit - which he discusses eloquently in various other poems such as 'Dharma' - the emphasis is just the same. By the repeated usage of the words 'few are' he emphasises the curious ways of life on how or why a few glitter and the rest flutter.

In 'Casabianca', 'Remain ye here in my cabin-room Stir not son for death or doom' instructs the father, leaves and never returns. As the obedient son is devoured by the tongues of fire, one can't help condemning the folly rather than adoring the obedience.

Even though he glorifies the duty-bound son the poet contemplates the rationale or the lack of it behind the casualty.

God is above and Reason rules
While blind Belief still makes us fools
The tragic death of a sinless child
Breathes no comfort even brief or mild
['Casabianca' ,5, pg: 94]

**Spiritual glow in ethereal flow**

In 'Avarice' Kavirajar peeps into the mind of the material man and comes out and not without silken satire.

But polished smiles and speech we reach
While Avarice drinks our soul as leech
['Avarice', 4, pg: 33]

He attacks the absurdity of the greedy or overly outgoing mind found in the so-called civilised life as 'Empty shows'

Empty shows of civilised life
What good like butter-ere a knife
When roadside corpse we daily find
Nothing sored in heart or mind ['Avarice', 5, pg: 33]

The goodness in the poems is the hope that the poet prescribes in form of eternal law. Although old and customary, it has a calming and soothing effect, as sampled in 'Bullet-Flower'.

Might is right for a moment's glow
For flesh will always bow
To eternal Law of soul's good flow
Like snow before the scorching brow
['Bullet-Flower', 23, pg: 32]

The darker shades found in some of his poems, one wonders, are the result of the number of deaths – including that of his wives and a couple of children - he had endured in his family. Hence the mystic glow that can be found in the following lines from 'Love's destiny', much in likeness with the undying line by Milton called 'Their song was partial' so exclaimed by Byron[7], is remarkable.

We may die but deathless in soul
We both do form an endless whole
[Love's Destiny, 5, 65]

If the first line opens a window on philosophy and if the second line transcends further to classical love, the phrase 'endless whole' is sublime, pregnant with meaning and transports one's mind to unearthly heights.

**Humour and harmless family gibe**

The serious Kavirajar has a seriously funny side too.

In a series of poems he fondly teases his son and a couple of his grandsons[8].

7. Their Song was partial (John Milton, Paradise Lost. 552)
8. Prankish Pride (pg.125) Baby's bliss (pg;104) & Grandson's glee (110)

He pulls the leg of one of his grandson in 'Baby's bliss';

His tongue is now to taste not speak
And feels itself in letters weak
['Baby's bliss', 11, pg: 105]

And in 'Prankish Pride', he goes...

Slowly tasting the dish
He will drag the precious time
Study he doesn't relish
Much less the difficult rhyme
[Prankish Pride, 3, pg: 125]

And another for his grandson starting with 'wilful villainous bare is Ramanujam fair...'

In belly he lives now
And food is his only love
To speak the Truth is his Vow
His head he doesn't know
[Grandson's glee, 2, pg: 110]

Out of all his poems the last one given above can be proclaimed to be totally true in all solemnity and veracity without an iota of doubt due to the simple fact that the 'head' described above is none other than that of this very writer.

**Criticism:**

Much desires to be done when it comes to the quality, gait and makeup of the publication and cover. There are two poems with the same heading 'Love and Lust' which could have been avoided.

The poet himself has meticulously given the corrections for the errors, which appear quite frequently, at the end with a clear index. A few spelling and punctuation errors are obviously credited to the proof-reader and can be rectified in the next editions.

Even though one could deliberate whether some terseness and effectiveness are lost due to the complexity that has been overdone in these poems, it is only fair to leave it to the discretion of the individual reader.

**Conclusion**

To summarise, 'Lyrics of life' is a collection of classic romanticism with an Indian flavour from a deep poet. It is scrumptiously fresh and indeed gives a welcome break from the current materialistic madness.

Despite the melancholic quality that flows as an undercurrent all through the text, what makes these poems original and attractive is the feel-good impact that they surprisingly leave behind in the reader's mind notwithstanding the initial sullenness.
This effect largely vows to the philosophical middle path the poet advocates in his lines and had practiced in life.

By achieving all of the above Kavirajar has indeed done what the English romanticism poets had achieved a couple of centuries ago – infusing high-minded idealism in an otherwise deadpan practical world.
Poets like these are associated with posterity rather than popularity[9].

'Lyrics of Life' is not for light-reading or time-eating during your flight, but for soul-searching and to help in getting face-to-face with the little thing called oneself.

---

9. Frail man, even a rag like this,
Survives himself, his tomb, and all that's his (Byron, Summer of dormouse)

## ... my great-grandfather

Wherever Mahatma Gandhi goes
Sprinkle of bright light hovers
And everyone is Mahatma's lovers
All written by poet Ramanuja Kavirajar

Whenever someone comes up
Kavirajar gives a cup of tea
His standard is as big as the sea
And always says the truth to you and me!

Whatever hurts a living being
Kavirajar doesn't go without seeing
Gives strength and a nice cuddle
And gives some water from the puddle

**Nishta Ramanujam, London**
**[8 years old]**



# 6. துளவன் துதிப்பாக்கள்

முனைவர் ச.கண்ணபிரான்
61, சேக்மதார் தெரு, காந்திநகர்,
திருநெல்வேலி-627008

## முன்னுரை :

வைணவச் செம்மல் –கவித்தென்றல் – பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர் அவர்களின் அரிய படைப்பிலக்கியமாகிய துளவன் துதித் தொகுப்பு என்னும் செய்யுள் நூலைப் படிக்கும் பேறு பெற்றேன். கவிராயர் அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிறந்து, அந்த நூற்றாண்டின் இறுதியில் திருநாடு சென்றடைந்துள்ளார்கள். தோன்றிற் புகழோடு தோன்றுக என்ற திருக்குறளின் நெறிப்படியே தோன்றி, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, உடலால் மறைந்தாலும் தமிழாய் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மையாகும். பன்னிரு ஆழ்வார்களின் பட்டியலுடன் சேர்த்துக் கொள்ளத்தக்க அளவில் திருமாலின் பெருமையும், வைணவ சித்தாந்தங்களும் கவிராயரால் வெள்ளிடை மலைபோல் மிளிர்வதை நான் நன்கு உணர்கின்றேன். பெரும்புலவர் அவர்கள் காந்திகாவியம் உள்ளிடட பல நூல்களை அருளிச் செய்துள்ளார். அவற்றுள், துளவன் துதித்தொகுப்பு என்ற நூலைப்பற்றி ஆய்ந்து எழுதுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இந்நூல் 1) திருமால் மொழி 2) திருமால் ஒளி, 3) திருமால் வழி, திருமால் எழில் 5) திருமால்பொழில் என்னும் ஐந்து பிரிவுகளைக் கொண்டதாகும். அவற்றுள், திருமால் மொழி பத்துப் பத்தாகப் பதின்மூன்று பிரிவுகளை உடைய பெரும்பிரிவு ஆகும். பல்வேறு யாப்பு முறைகளில் இராகம், தாளம் அமைய இயற்றப் பெற்ற இசைப்பனுவலாக அமைந்துள்ளது. அந்தாதித் தொடையில் அடைந்த இப்பகுதியில் மூழ்கித் திளைத்து எழுவது என்பது ஓர் எளிய செயலன்று. நுனிப்புல் மேய்வதுபோல் படித்தால் பயன்தராது. மதிநுட்பத்துடன் படித்தே ஆய்வு செய்தல் ஏற்புடையதாகும். திருமால் ஒளி, நேரிசை வெண்பா யாப்பில் 1200 பாடல்களாக அமைந்துள்ளது. திருமால் வழி எட்டடிக் கொச்சகக் கலிப்பா யாப்பில் 57 பாடல்களை உடையது. திருமால் எழில் நிலைமண்டில ஆசிரியப்பா வகையில் முந்நூறு பாக்களையுடையது.

திருமால்பொழில் அறுசீர்க்கழிநெடில் யாப்பில் 24 பாடல்களாக அமைந்துள்ளது. ஒரு பலாப் பழத்தைப் பிரித்துச் சுளை சுளையாக எடுத்துக் கொம்புத் தேனில் நனைத்துக் சுவைப்பதைப் போல இப்பாடல்களைப் பக்திச்சுவை நனிசொட்டச் சொட்ட இசையுடன் பாடிப் பரவிப் பொருளுணர்ந்து அனுபவிக்க வேண்டும் என்பதே நூலாசிரியரின் நோக்கமாக எனக்குப் புலப்படுகின்றது.

**திருமால் மொழி:** - துளவன் துதித்தொகுப்பு என்னும் நூலின் முதற்பகுதி திருமால் மொழியாகும். இப்பகுதியில் திருமால் மொழியாக, 2197 பாடல்களும், தனிமொழியாகப் பன்னிரண்டு பாடல்களும் இடம் பெற்றுள்ளன. இப்பகுதி மட்டுமே ஒரு தனிப்பெரும் பனுவலாக அமைந்துள்ளது. பல்வேறு தலைப்புகளில் ஆய்வு மேற்கொள்ள வேண்டிய பகுதியும் ஆகும். வரையறை செய்யப்பெற்ற அடிப்படையில் ஒரு சில பாடல்களை மட்டுமே கையாண்டுள்ளேன். முதற் பத்து முதலாம் பகுதி முதற்பாடல் : இறையுயிர் விளக்கம் - கலிவிருத்தம்.

அலகில அடலினன், அகிலமும் அருவுரு
உலவிடு மொடுச்சடம் ஒடுங்குயிர் உடையவன்
மலமறு மாண்பினன் மகிமைமண் மாதவன்
நலங்கழல் நயந்து நீ தத்துநன் மனனே

பொருள் : அளவிடற்கரிய ஆற்றல் உடையவன் திருமால்; அருவுருவாய் உலவிடும் ஆற்றல் மிக்கவன். குற்றமற்ற நிருமலனாக மாண்புடன் திகழ்பவன். மாட்சிமை பொருந்திய மாதவங்கள் புரிந்தவன். இத்தன்மையை உடைய இறைவனின் நலந்தரும் பாதங்களை விரும்பித் துதித்துப் பிறவிக்கடல் கடப்பாய் மனமே என்பது பொருளாகும். சுடரொளி தொழுதெழு என் மனனே என்ற நம்மாழ்வாரின் திருப்பாசுர அடி ஈண்டு நோக்கத் தக்கதாகும்.

அந்தாதித் தொடையில் அமைந்த இரண்டாம் பாடல்

**மனன்வழி மடங்குயிர் மற்சட வுடலதில்**
**தனதெனத் திகழுறுந் தடமியற் றருதுமெண்**
**புனைகுண மியற்கையும் பொறுத்துறுஞ் செயற்கையும்**
**அளனத்தக மருந்துற அரும்புறு மியலே**

பொருள் : மனம் செல்லும் வழியில் மயங்கும் உயிரைத் தாங்கிய சடமயமான உடல் பற்றிய தத்துவம் இப்பாடலின் உள்ளீடாக அமைந்துள்ளது. இயற்கையும் செயற்கையும் கலந்த தன்மையில் சடமான உடலும், மயக்கம் நிறைந்த மனமும் தன்னிலையில் தளர்வது இயற்கையாகும். இதனையே மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் என்றார் திருவள்ளுவப் பேராசான். சிந்தையின் நிறைவே செல்வம் என்று அருளினார் குமரகுருபர அடிகளார். முதற் பத்தில் இரண்டாம் பகுதியில் முதற்பாடல் வஞ்சித் துறையில் அமைந்துள்ளது. வாழ்வின் இயல் விளக்கம் பற்றித் தெளிவாகக் குறிப்பிடுகின்றது.

இரக்கமெழில் நீதிப் பரப்பின் படர்சீலம்
நிரப்பும் நிலைக் குணமாய்ச் சுடரெண்ணே

என்பது பாடல். இறைவன் அருளிய வாழ்வின் இயல் - இரக்கமும், அழகும், நீதிநிலை தவறாத விரித்த பரப்பாகச் சீர்மையை நிரப்பும் நிலையான குணமாகச் சுரக்கும் ஒளிச்சுடராக அமைந்துள்ளது என்ற கருத்தை விளக்குகிறது. 2-ம் பத்து - 11ஆம் பகுதியில் கலி விருத்தப்பா யாப்பில் அமைந்த பாடல் :-

எல்லே யிளங்கிளியே எங்குஞ் செல்வாயே
நல்லாய் நீயேதான் நாயேன் நலிவதன
அல்லா ரலர்மேனி ஆழி மாயனிடஞ்
சொல்லாய் சுகிர்தமுடன் சூதிற் றொழுவேனே

நாயகன் நாயகி பாவத்தில் அமைந்துள்ள அகத்துறைப்பாடலாக ஆசிரியர் வழங்கியுள்ளார். திருப்பாவையில் ஆண்டாள் அருளிச் செய்த எல்லே இளங்கினியே என்ற பாசுரத்தை இப்பாடல் நினைவுபடுத்துவதாகத் தெற்னெப் புலப்படுத்துகின்றது. தன்னை நாயன் என்றும், நாயகனின் நினைவால் தான் நலிவதையும் ஆழிமாயனாம் தலைவனிடம் சொல்லுமாறு வேண்டுவது சுவையான பகுதி.

2ஆம் பத்தின் 12-ஆம் பகுதியில் நவ திருப்பதிகளும் நமன்துயர் தீர்ந்ததும் பேசப்படுகின்றன. சந்தமொழி செய் துளவருத்தம், தென்னற் கமுகூர்நத்தம் போழ்க்க னேற்கும் புளிங்குடி பயில்வான், பேரும்புகமும் பெருங்கோ ளூரான், இருமா விரட்டை யெம்மானிருவர் அருட்சார்

கழல்கள் என்று இரட்டைத் திருப்பதியையும், தொல் திருப்பேரான் என்றும், நவதிருப்பதிகளைப் பட்டியலிடுகின்றார். பாடல்-8,

தேக மொழியத் திகைக்கும் பின்னர்
ஏகும் நெறிகள் இறுதி யுணரோம்
சோகஞ் சுவடில் சுடர் திருக்கோளூர்
ஏக மவன்தான் எழிலின் நெறியே

இப்பாடல் நம்மாழ்வாரின் சீடராகிய மதுர கவியாழ்வாரின் திருக்கோளூரைக் குறிப்பிடுகின்றது.

பாடல் -9,

ஏதம் வேண்டா எல்லாம் அருளும்
கோழில் குருகூர்க் குலவு மார்க்கும்
ஆதி நாதன் அருமாக் கழலால்
வேதம் தமிழ்செய் விழுமம் காணே

இவ்வாறு ஒன்பது திருப்பதிகளிலும் எழுந்தளியுள்ள திருமாலின் தனிப்பெரும் பெருளமகளைக் கவிராயர் எடுத்துரைக்கிறார். திருக்குருகூரின் வளத்தையும், மாறன் என்ற சடகோபரின் அடியளய் சேர வேண்டும் என்று மனத்திற்கு உரைக்கும் பாங்கினையும் இப்பாடல்களால் உய்த்து உணரலாம்.

13ஆம் பத்து – 13ஆம் பகுதி உயிரின் முடிநிலை இறை பக்தியே என்னல் – பாடல்–1

அலகிற்பற் றறியாய் அமைசடம்பலத் தலகுணங்கள்
உலவு முயிரினங்கள் ஒன்றொழியிற் பிரிநிலைசேர்
நிலத்திற் பல்விதமாய் நிகட்குறியி லோர்மொழியாய்ப்
புலத்திற் திரிபுணரும் பூணுயிர்ச் சீர்த் தனியாயே

பாடல் 2

ஆயு முயிரினங்க ளவையவைகள் பொதுத்தனியாய்
வேயும் தம்வாழ்வை விரும்பாதே யயல்வித மேத்
தோயு மிறைமுதலைத் தொடர்பாடு முறுமாயம்
நேய மெழிலறிவு மதுநிகழ்த்துந் தனிமுறையே

இவ்விரண்டு பாடல்களும் இறைவனையே சார்ந்திருக்கும் பல்வகையான உயிரினங்கள் பற்றிய தத்துவக் கோட்பாட்டினை உணர்த்துவனவாக

அமைத்துள்ளமை சிந்திக்கத் தூண்டுகின்றன. இறைவன் முடிவற்றவன், எம்பெருமான் புகழ்மட்டுமே நிலையானது என்ற உணர்வை உலகுக்கு உணர்த்துகிறார். ஒவ்வொரு பத்தின் இறுதிப்பாட்டிலும் இராமாநுசன் என்ற தனது திருநாமத்தையும் கவிராயரின் கவியுள்ளத்தையும் காணலாம். நிலையில்லா வாழ்வை விரும்பும் உயிரினங்களைச் சாடுகின்றார்.

**தனிமொழி :** - இப்பகுதியில் பகவத் சக்திப் பிரயோக பிரபாவம் குறித்துப்பேசுகிறார் கவிராயர்.

தொல்லைகள் நீங்க அறக்கழல் மாலைப் பணிதல் வேண்டும், மாற்றமில் மேற்பரன் போற்றறன் தான் பணிதல் வேண்டும். ஈசன் இல்லை எனப் பேசுபவரின் மீசை மிடுக்கினை வெறுக்கின்றார். "மெய்யிலியற்கையின் பொய்யு மறப்புடை, மொய்ம்பு மறமுறைக் கொய்வுமற" என்றும் குறிப்பிடுகின்றார். "ஞால முணர்விஞ் ஞான மறவானே" என்றும் பேசுகிறார். ஆண்மையற்ற உடல் வலிமையைக் கண்டித்து ஒதுக்குகின்றார்.

கேசவ னாரண மாதவ கோவிந்த
தேசுறு விட்டுணுத் தேர்மது சூதன்
மூசு கழல்திரி விக்ரம வாமனன்
ஏசுறு சிரீதர விருடிகேச பதமே

என்ற பாடலில் திருமாலின் திருநாமங்கள் பரவப் பெற்றுள்ளன. பத்மநாபன், தாமோதரன் என்றும் பரவுகின்றார். தனக்குப் பக்தி இல்லை என்று தன்னைத் தாழ்த்திக் கொள்கிறார். பன்னிரண்டு பாடல்களில் தனிமொழி பேசப்படுகின்றது.

**திருமாலொளி :** திருமால் ஒளி என்னும் பகுதி 120 நேரிசை வெண்பாக்களால் ஆன இன்னிசைப் பனுவல் ஆகும். இறையும் மனித அறிவின் இயலும் இப்பகுதியில் பேசப்படுவதை நாம் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு சில பாடல்களைப் பார்த்தால் கவிராயரின் கவியுள்ளம் வெளிப்படும். இப்பகுதியும் அந்தாதித் தொடரில் அமைந்துள்ளது. முதற் பாடலில் நேர்மை வலியுறுத்திப் பேசப்பட்டுள்ளது.

பூணும் புசிப்புணவும் பொய்மெய்யும் தாம்புணரக்
காணும் உயிர்வாழ்வில் ஊன்வாழ்வும் – பேணும்
திறனழியாத் தேர்ந்திடும்பல் தீங்குடன் நன்மை
உறவினுற ஓங்கிறைவன் ஒன்று

என்ற பாடலில் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற திருமூலரின் திருவாக்கு அடங்கியுள்ளது.

**திரிமூர்த்தி தத்துவம்**

கூத்தின் உடல் வாழ்க்கை கூட்டுவித்தான் கொய்தொழித்தான்
யாத்த உயிரளிப்பான் இம்மூவர் – ஏத்தப்
பணிவழியே பாங்குயர்வால் பார்சடமோப் பாங்கும்
அணியெதிர்ப்பல் ஆழ்சடமோ அங்கு

இதில் மும்மூர்த்திகள் இடம் பெறுகின்றனர். வேறுபாடலின் வாயிலாகத் திருமாலே முழு முதற் பரம்பொருள் என்கிறார். மற்றொன்றும் வேண்டேன் மாதவனே எப்பிறவி வாய்த்தாலும் எம்பெருமான் இன்னருளால் தப்பிடுதல் வேண்டும் என்கின்றார். மற்றொரு பாடலில் இறைவன் காமக்கறை கழுவுபவனாகவும், ஊமையைப் பேசவைப்பவனாகவும், தொன்னயங்கள் பலவும் நல்கிடும் நாயகனாகவும் இருக்கின்றான் என்ற தத்துவம் புலப்படுகின்றது. விண் மண் ஒப்பு இப்பகுதியில் குறிப்பிடப்படுகிறது.

ஆங்கிருக்கும் அம்புலியும் அஞ்சடையிற் கங்கையுடன்
பாங்கிருக்கும் தேவியவளப் பாதியதாய் – நீங்கலில்லா
மன்மதனுந் தன்னிருப்போய் மந்தமுறு மற்றுமவன்
இன்கழலே காந்தும் துணை

இப்பாடல் சிவபெருமானைக் குறித்துப் பாடுவதாக அமைந்துள்ளது. இது சமயப் பொது நோக்கமாகும்.

**நம்மாழ்வார் சிறப்பு :**

நாமப்புனற் றழைக்கும் நற்பொருளை நற்சுனைசூழ்
சேமக் குருகூரிற் செய்தவத்தாற் – பூமகளின்

மாறன் சடகோபன் மாமொழியோர் ஆயிரமும்
மாறாவினை தீர்க்கும் பார்

என்ற பாடல் திருவாய்மொழியின் சிறப்பை உணர்த்துகின்றது. திருமாலின் தாளை வாலறிவன் தாள் என்று கவிராயர் பாடிப் பரப்பியுள்ளார்.

**திருமால் வழி :** இப்பகுதி பாவைப்பாட்டு வகையில் அமைந்துள்ளது. மொத்தம் 57 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

**பாடல் 1 தத்துவத்தின் ஒருமை :**

அலகில் வினையாட அருஞ்சடத்தில் பலப்பலவாய்
உலகம் பலவாகி உடல்உயிரின் விதம்பலவாய்
நிலவும் நிலைஒன்றும் நித்தியம்இல் லாததனால்
குலவும் நிலைஒன்றும் நித்தியம்இல் லாததனால்
குலவும் அவன்அருளால் குந்தகம்தீர் உடல்உரனும்
நலம்செய் அறிவுஅதனை நண்ணிடும்எவ் வுடல்எனினும்
மலத்தில் மலியாதே மாண்புஅதனில் தான்வழுவா
நிலையை எய்திடுவான் நெடும்பிறவிப் பல்யாப்பில்
உலவி முயல்உறவே ஊழ்புரிவான் எம்பாவாய்

திருப்பாவை அருளிய ஆண்டாள் நாச்சியாரின் திருமொழியை இப்பாடல் நினைவுபடுத்துவதாக அமைந்துள்ளது எனலாம். நெடும் பிறவிப்பல் யாப்பில் உலவி என்ற பகுதி இந்த மானிடப் பிறவி ஒரு நெடும்பிறவியாகும் என்பதைத் தெற்றென விளக்குகிறது. அத்வைதம், துவைதம், விசிட்டாத்துவைதம்ஆகிய அனைத்துவிதத் தத்துவங்களையும் உள்ளடங்கிய பொதுவியல் வாழ்க்கைத் தத்துவம் இப்பாடலில் பொதிந்து காணப்படுகிது.

**பாடல் 57 – சீயப்பதித்துவம்**

செய்யாள்மலர் எங்கும்செழி நெல்லைத் திருநகருள்
பொய்யார் வேடமதில் புன்கவிசெய் இராமானுசன்
மையார்கவிக்கும் அருள் மாதவத்தன் னெண்ணலகே

என்று நிறைவுப் பாடலை அடக்கமாக எழுதியுள்ளார்.

**திருமால் வழி** என்னும் இப்பகுதியைக் கவிராயர் அலகில் எனத் தொடங்கி அலகே என்று முடித்துள்ளார். இது ஒரு நுட்பமான ஆய்வுப் பகுதியாகும். தளிர்விழி விழியை அலங்கரிக்கின்றது. உவமையாகவும் கொள்ளலாம்

(வினைக்கடலில்) வினையைக் கடலாக உருவகம் செய்துள்ளமை சிறப்பாகும். திருமகள் உறையும் மார்பன், மடியில் துளபம் அணிந்தோன், சாரங்கம் என்ற வில்லை ஏந்தியவன் என்றெல்லாம் ஆசிரியர் திருமாலை வருணிக்கின்றார். இப்பாடல் சரணாகதித் தத்துவத்தை விளக்குவதாய் அமைந்துள்ளது. ஐயன் திருவடியே அடைக்கலமாய்க் கை தொழுவேன் என்கிறார். அடியேன் இராமானுச தாசன் என்ற வைணவக் கோட்பாட்டின் அடிப்படையில் கவிராயர் அவையடக்கமாகத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு, புன்கவிசெய் இராமானுசன் என்று சுட்டுதல் சிறப்பு.

**திருமால் எழில் :** நிலைமண்டில ஆசிரியப்பா வகையில் அமைந்துள்ள இப்பகுதியில் 300 அடிகள் இடம் பெற்றுள்ளன. உடற்பருவத்தாலன்றி, நாயகத்துவத்தின் காரணவிவரம், சத்தியத்தால், சீலத்தால், காலத்தால், பயனால் உயிரின் நாயகித்துவம் மாற்றக் கூடாமை ; மற்றும் பகவத் விளக்கம் அடங்கியது.

எண்ணத்தழகதம்மா ஏந்திழை நீ நிளனத்த
வண்ணம் வளர்ந்த தம்மா வல்லியிளங்கொடியே

எனத் தொடங்கி,

நின்றிடு முள்ள மொப்பநிமலன ருளினாலே
ஒன்றிடு மன்பினுறும் உத்தமன ருளினெல்லை
நன்றிலி ராமாநுசன் நடிக்குமா லெண்ணழகே

என்று தேற்றேகாரத்துடன் இப்பாடலை நிறைவு செய்கின்றார். அன்னம் பாலிக்கும் தில்லை ஆனந்தரூபன் என்று சிவபெருமானையும், சென்றவர்க்கெல்லாம் நன்மைகள் செய்யும் திருச்செந்தூர் முருகப் பெருமானையும், வணங்கினையோ என்று மனத்தை விளிக்கின்றார். புனற்காவிரிச் சோலைத் திருவரங்கர்ச் சோதித் திருவடிகள், சூழம் வினையறுக்கும் சுருதி முதல் வன்கழல் ஏழு மெழு பிறப்பும் ஏத்தி வணங்கினாயோ என்று பல விதமாகப் பாடிப் பரவி வணங்குதல் சிறப்புடையதாகும். மாட்சிமை தருஞ்சீர் மாதவன் என்றும், கருமுகில் வண்ணத்தான் கண்காணவருவண்ணத்தான் என்றும் திருமாலின் எழிலை வியந்து பாராட்டுதல் குறிப்பிடத் தக்கதாகும். சொற்பொருட்பின் வருநிலையணியில் பரவுகின்றார்.

. பிறரின் துணையில்லாது உலகில் சுகம் பெறுதல் இயலாது என்கிறார். அறனில்லாத வழியில் பெறும் சுகம் நிலைபேறுடையதல்ல என்றும், தம்மிற்றளிர்வு நெறித் தாரணியில் கண்ட சுகம் என்றும் இவருவரின்றி வாய்க்காது என்றும் வலியுறுத்துகின்றார், இப்பகுதி ஆசிரியரின் உள்ளத்தில் தோன்றும் தத்துவத்தின் ஞானப் புலம்பல் போலத் தோன்றுகிறது. பொய்மாப் புலன்கள் என்று கடிந்து கொள்கின்றார், இதன் மூலம் கவிராயரின் புறவொழுக்கம், அகவொழுக்கம், இறையன்பு ஆகியவை தெற்றெனப் புலப்படுகின்றன. நிறைவுப் பகுதியில் இராமாநுசன் நடிப்பதை நீ நன்கு உணர்வாய் என்று எம் பெருமானிம் திருவுளம் பற்றி நிற்கும் தன்மையை நன்கு வலியுறுத்துவது எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாகும். தான் முழுமையாக அனுபவித்த இன்பத்தைத் திருமால் எழிலாகத் காட்டுவதில் கவிராயரின் புலப்பாட்டு நெறிபோற்றத்தக்க அளவில் அமைந்துள்ளது எனலாம்.

**திருமால்பொழில் : கலிவிருத்தம், அறுசீர்க்கழிநெடில் :**

இப்பகுதியில் 24 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அலகிலதாம் ஆருயிர்க எனத் தொடங்கி, வரதனிறை யருள் அலகே என முடிக்கின்றார். அலகில் சோதியன் அம்பலத் தாடுவான், அலகிலா விளையாட்டுடையார் எனப் பிறரும் இறைவனை விளித்திடும் பாங்கில் அமைத்துள்ளார். காமத்தின் தன்மையை இப்பகுதியில் விரிவாகப் பேசுகிறார். மாறாக, அனைத்தறன் வாய் அலகில் விதம் அவனாமக் காமமதே என்ற அடியில், திருமாலின் திருநாமத்தினால் ஏற்படும் காமம் பேசப்படுகிறது. உயரறமோ முயன்றிடினும் உறுவர் சீலமிக்காரே என்ற அடி ஒரு சிலருக்கே உயரறம் கை கூடும் எனப் பகர்கின்றது. பன்னிரண்டாம் பாட்டில் நாரணனே பரம் என்று உணர்த்துகிறார். திருமாலை வள்ளல் என்றும் பதினான்காம் பாடல் குறிப்பிடுகின்றது. பொதுவுடம்பாய்த் தோன்றிடினும் புலனவைகள் வேற்றுமையே எனப் பதினான்காம் பாடல் சுட்டுகின்றது. புகழிறைவன் புகும்புவியிற் பொலிந்தொளிர்வா னகப்புறத்தே என்ற அடியில் இறைவன் அகத்திலும் புறத்திலும் அழகுடன் பொலிந்து ஒளிர்வான் எனப் பரவுதல் நயமுடையதாகும். அலகில்லா விளையாட்டான் அவன் அமருந் திருநெல்லைப், பலகற்றும் பயனில்லாப் பாங்கிறைவன் தாள் தாழார்.

நலமற்று மியமில்லா நலிராமாநுசன் கவிக்கும் வலன்முற்றப் பயனலரும் வரதனிறை யருள்அலகே என்பது நிறைவுப்பாடல். கவிராயர் தன்னை நலிராமாநுசன் என்று குறிப்பிடுகின்றார். திருநெல்லை என்று சிறப்பித்துப் பாடுகிறார். திருமால் பொழில் ஒரு பக்திப் பொழில் என்று கருத இடமுண்டு.

**நிறைவுரை :**

நாற்றத் துளாய்முடி நாராயணன் என்று திருப்பாவையில் ஆண்டாள் அருளியது போலவே நம் பெரும்புலவரும், துளவன் துதி என்ற தலைப்பில் இந்நூலைத் தொகுத்துள்ளார். பன்னிரு ஆழ்வார் பாக்களை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்ற நூலாகத் தொகுத்துள்ளார் நாதமுனி. அவர்தம் பாசுரங்கள் வைணவ சமயத்திற்குக் கிடைத்த அரிய செல்வங்களாகும் அதுபோலவே கவிராயரின் துளவன் துதித்தொகுப்பு திருமாலின் செம்மைமிகு அருளாற்றலை விளக்குவதாகும். தக்கார் பலரும் முனைந்து கவிராயரின் செழுங்கவிப் பனுவலை நன்கு ஆராய்ந்து ஆய்வுக் கட்டுரைகளாக வழங்குதல் வேண்டும். ஆழ்ந்த புலமையும் மானுட நேயமும் மிக்க கவிராயரின் புகழ் நிலைக்க எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

# 7. கவிராயரின் திருவாய்மொழிச் சாரம்

முனைவர் கு.சடகோபன்
தலைவர், கம்பன் இலக்கியச் சங்கம்,
பாளையங்கோட்டை - 627 002.

திருநெல்வேலியில் அண்மைக்காலத்தில் வாழ்ந்து மறைந்து புகழுடம்பை நிலை நாட்டிச் சென்றுள்ள பெரியார்களில் இராமாநுசக் கவிராயரும் ஒருவர்.

வைணவ வேளாளர் குலத் தோன்றல் இவர். வாழையடி வாழையாகத் தோன்றிய கவிராயர். எந்தை, தந்தை, தம்மூத்தப்பன் என்று ஏழ்படி கால் தொடங்கி வழிவழியாகத் திருமாலுக்கும் தமிழுக்கும் தொண்டாற்றிய தொண்டைக்குலத் திருமகனார் இவர்.

தென்றல் பங்கயந் துழாவிப் பைங்கடி மல்லிகை முல்லைப் பந்தல்களை ஊடுருவி மெல்லெனவே தோளுயர்த்தி, சில்லெனவே தமிழ் மண்ணில் உலவி இன்பத்தேனை வாரி இறைப்பதே போல், இவர் தம் கவிதை கற்போருக்கும் கேட்போருக்கும் இன்பவாரியை ஏற்படுத்துவதால் இவரைக் கவித்தென்றல் எனப் போற்றினர்.

கவிராயர் எழுதிக் குவித்த நூல்கள் ஏராளம். தம் கவிதை நூல்களையும், கவின்மிகு கட்டுரைச் சொத்துக்களையும், அச்சுவாகனம் ஏற்றித் தமிழ்கூறும் நுல்லுலகத்தே உலவவிட்ட பெருந்தகை இவர்.

இவ் வைணவப் பெரியார் ஆழ்வார்கள் பன்னிருவர் பாலும் தளர்வறியாப் பக்தி பூண்டு ஒழுகினவர். ஆண்டாளின் பக்திச் சுவை நனி சொட்டும் நாச்சியார் திருமொழியிலும் சங்கத் தமிழ் மாலையிலும் (திருப்பாவை) தம் நெஞ்சைப் பறி கொடுத்தவர். ஆண்டாளின் உபநிடதமாகிய அத்திருப்பாவைக்கு இவர் எழுதியருளிய உரையே இவர்தம் ஈடுபாட்டை நன்குணர்த்தும்.

ஆழ்வார்களில் தலையாயவராகிய நம்மாழ்வாரின் பக்திப் பனுவல்களில் ஊறித்திளைத்தவர் இக்கவிராயர்.

பண்டைத் தமிழகம் பெரியார் என்று போற்றிய குருகூர்ச்

சடகோபனிடம் மண்டியிட்டு நின்று பக்திப் பயிர் வளர்த்து உயர்ந்த பாகவதோத்தமர் இவர்.

வேதம் தமிழ் செய்த மாறன் குருகூர்ச் சடகோபன் என்று நம்மாழ்வாரைப் போற்றியது தமிழகம். அவ்வட மறைகளுக்குச் சமமாகவும், ஒரு படி மேலாகவும் தத்துவ மணிகளைத் தமிழ் என்னும் சரடு சோத்து மாலையாக வழங்கியவர் மாலின் அருள்தொண்டராகிய நம்மாழ்வார்.

அன்னாரின் நான்கு பனுவல்களிலும் பொதிந்து கிடக்கும் பேருண்மைகளின் உயர்வுக்காகத் திருப்பெரும்புதுர் மாமுனிவர் வள்ளல் இராமாநுச ஆசாரியர் ஆழ்வாரின் திருவடிகளே தஞ்சம் எனக் கிடந்ததாக குருபரம்பரை வரலாறு பேசுகிறது.

ஆழ்வாரின் பனுவல்கள், திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கிலும் உள்ளம் நைந்து உய்ந்தவர் இக்கவிராயர் என்றால் மிகையாகாது.

திருவிருத்தத்தில் ஆன்மா இறைவனிடம் கொண்ட மாளாத காதலை நம்மாழ்வார் விவரிக்கிறார் என்கிறார் கவிராயர். தம்மை நாயகியாக்கிக் கொண்டு இறைவனை நாயகனாகப் பாவித்துக் கொண்டு, (நினைவின் முதிர்ச்சியால்) காதல் பயிர் வளர்க்கிறார் நம்மாழ்வார். இதைக் கவிராயர், நாயக நாயகி அவஸ்தையாகத் திருவிருத்தம் வெளியிடுகிறது என்பார்.

திருவிருத்தம், தமிழ் அகத்துறையில் கோபுரம் கட்டி, தங்கக் கலசம் அமைத்து, கொடியுயர்த்தி, பட்டொளி வீசுகிறது என்றால் மிகையாகாது. அத்திருவிருத்தத் துறையில் குள்ளக்குளிர நீராடி மகிழ்ந்தவர் கவிராயர்.

நம்மாழ்வாரின் திருவாசிரியம் திருமாலின் சவுந்தர்யத்தினை விளக்கும் பனுவலாகும். அவ்விறைவன் அழகன். அதுவும் முற்றிலும் முழுமையான அழகன், அவன் பிரிபூரண நம்பி. அழகிய நம்பி அவன், சுந்தரத் தோளுடையான், கண்ணிற் காணும் ஆடவர்கள் பெண்ணாகப் பிறந்தோமிலையே என்று ஏக்க வைக்கும் தோள் அழகன். அந்த இறைவனின் அழகிய தோற்றத்தை அவன் காட்சி கொடுக்கவே கண்டு அகமிக மகிழ்ந்த மகிழ்மாறன் புனைந்த கருத்தோவியமே திருவாசிரியமாம். இபபதிகத்தைப் பற்றிக் கவிராயர் குறிப்பிடும்பொழுது,

ஆன்மாவின் இயல்பின்படி அதை வசீகரிக்கும் வாய்மையை ஆழ்வார் வெளியிடும் நூல் என்கிறார்.

பெரியார் திருவந்தாதி என்ற பெயரைப் பெற்று காலப்போக்கில் பெரிய திருவந்தாதி என்று அழைக்கப்படும் இந்நூல், இறைவனின் ஈர்க்கும் கல்யாண குணங்களை வெளியிடும் பனுவல் என்கிறார் கவிராயர்.

ஆழ்வாரின் தலை சிறந்த பனுவலாகிய திருவாய்மொழியில் கவிராயர் தம்மை முற்றிலுமாக ஈடுபடுத்திக் கொண்டு வைணவத் திலகமாக மிளிர்வதை என்னவென்று உரைப்பது? கலியாணக் குணக் கடலாகிய திருமாலின் குறைவேயில்லா, நிறைவான அழகையும், அதை ஆழ்வார் முற்றும் பருகி, தழுவி முழுகிப் பரிமாறும் பாங்கையும் கண்டு கவிராயர் ஆழ்ந்து போயிருக்கிறார். மானிட வாழ்வின் முடிந்த முடிவாக இறைவனிடத்தில் ஈடுபாடு கொண்டு , முற்றிலுமாக அவனிடம் சரணாகதி கொள்ள வேண்டும் என்பதை ஆழ்வார் பன்னிப் பன்னி உரைப்பதை வாழ்வின் முதற் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும் என்று கவிஞர் நமக்கு உணர்த்துகிறார்.

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் சொன்னதையே திருவாய்மொழியில் விரிவாக்கிக் கூறுகிறார். ஒரு திருவிருத்தப் பாவுக்கு ஒரு பத்தாக ஆழ்வார் திருவாய் மொழியை அருளியிருக்கிறார். நாயகி - நாயகன் இருவராக இருப்பினும் நாயகி, நாயகன் இட்ட வழக்காக இருக்க வேண்டும். நாயகி எப்படி நாயகனின் உடைமையோ, அதேபோன்று பரம்பொருளான திருமாலின் சொத்துக்களே இவ்வான்மாக்கள். அவனே உடைமையாளன். அவனுக்கு மேல் ஒருவன் இல்லை. அவனையே தன்னேரில்லாத தனிப்பெரும் ஒருவன் என்று கொள்ள வேண்டும். அவனுக்கே அவன் உகப்பிற்கே அடிமை செய்து வாழ்வதே வாழ்க்கையாகும். திருவிருத்தத்தில் குறிப்பாக உணர்த்திய நாயகி நாயக பாவத்தை (நினைவின் முதிர்வையே) திருவாய்மொழி விசுவரூபம் எடுத்து விரிவாக விளக்குகிறது.

நாயகி நாயகனைத் தேடுகிறாள் (தேடுதல்), ஓடியாடித் தேடிக் கண்டு மகிழ்கிறாள் (காட்சி), அவனை அடைந்தபின் அவனை விட்டு அகலகில்லேன் சிறிதும் என்ற நிலைக்கு வருகிறாள் (;அவனோடு கலந்து மகிழ்தல்), அவனோ ஒரு மாலையிலையே இவளை விட்டுப் பிரிகிறான்

(பிரிவுநோய்). தேடலில், காணலில், கூடி மகிழ்வில், பிரிவில் ஆழ்வார் பட்ட வேதனைகள், மகிழ்ச்சிகள் தாம் திருவாய்மொழியாக அந்தாதியாக வெளிவந்தது என்பது ஆசாரிய இருதயம் என்ற நூலின் முடிந்த முடிவாகும். இவ்வுயரிய கருத்தை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய இருதயத்தில் அறுதியிட்டு உரைக்கிறார்.

நாயகி அவனைத் தேடுகிறபோது அவள் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல ; அவள் நிலை, தாளம்படுமோ? தறிபடுமோ? யார் அறிவார்? என்று வியக்க வைக்கிறது.

அவனோடு கூடித் தழுவி முழுகிப்பரிமாறும் பொழுது அது ஓர் இன்பக்கேணி. அவன் ஓர் மாயையினால் விலகிவிட இவள் படும் துயரமோ ஒரு துன்பக்கேணி. மீண்டும் அவனைச் சந்திக்கிறாள். அவன் அருளால் இது கூடுகிறது. மீண்டும் வசந்தம் வீச மகிழ்ந்து திளைக்கிறாள்.

இது உலகியற் காதல் போல- மானுடக் காதல் போலத் தோன்றினாலும் இது ஓர் ஆன்மிகக் காதல்! புறக் காதல் அன்று, அகக் காதல்! ஊனக் காதல் அன்று ; ஞானக் காதல்! உடலோ சதையோ ஏற்படுத்தும் ஈர்ப்பால் ஏற்படும் காதல் அன்று ; ஞான முதிர்ச்சியால் ஆன்மா தன்னை உணர்ந்து, தன்னைப் பக்குவப்படுத்திக் கொண்டு, நாயகனாகிய உயர்வற உயர்நலம் உடைய திருமாலிடம் தன்னை முற்றாக ஒப்புவித்து அவனுக்கே ஆளாகி வாழும் நிலை – இக்காதலை ஆண்டு அனுபவித்த ஆழ்வார் கருணையினால் பிறருக்கும் உணர்த்துகிறார் தம் திருவாய்மொழியால்! ஊனில் வாழும் உயிர் (ஆன்மா) பரமாத்மாவை நோக்கிப் பயணிக்கும் பக்திப் பயணத்தை விளக்குவதே திருவாய் மொழியாகும்.

இவ்வனுபவத்தை நம்மாழ்வார் அறுதியிட்டு வெளியிட்ட தமிழ் வேதம் தான் திருவாய்மொழி. இத் திருவாய்மொழியில் முற்றிலுமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர் கவிஞர்.

கவிஞர், தம்முடைய திருவாய்மொழி அனுபவத்தைப் பிறரும் அனுபவிக்க வேண்டும் என்னும் கருணையுள்ளத்துடன் திருவாய்மொழியின் சாரம் என்ற அழகிய நூலை எழுதியுள்ளார். அந்த நூல் நம்மாழ்வாரின் பத்துத் திருவாய்மொழிக்கும் எழுதப்பட்டுள்ளது. ஆனால் முதல் பத்து உரை மாத்திரமே இன்று நூல் வடிவாக நமக்குக்

கிடைக்கிறது. அந்த நூலில் கவிஞர் காட்டும் அவர்தம் கைவண்ணத்தை இக்கட்டுரையில் ஒரு சிறிது பார்ப்போம்.

நம்மாழ்வார், இறைவன் அந்தர்யாமியாக எங்கும் பரந்துளன் என்னும் தத்துவத்தை அழகுற ஒரு பாசுரத்தால் அறுதியிடுகிறார்.

திட விசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவது மாய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்துளங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவைஉண்ட சுரனே.

கவிராயர் திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம் என்ற ஐம்பூதங்களாய், அவை மேலே படர்ந்திருக்கும் பொருள் முழுவதுமாய், அவைகளுக்குள்ளும் உடலிடை உயிர் போலே எங்கும் பரந்தவனாய், அறிவுச் சுடர் ஓங்கும்படி வேதங்களில் தெரியப் பரந்தவனாய், இவை எல்லாவற்றையும் உண்டவனான அமரத்தன்மை வாய்ந்தவனே பரம்பொருள் என்னவாயிற்று என்கிறார்.

வைணவம் இறைவனை ஐந்து நிலைகளில் காணலாம் என்று கூறுகிறது. அவ்வைந்து நிலைகள் ;

1. பரமபதத்தில் எம்பெருமான் நித்தியசூரிகளுடன் இருக்கும் இருப்பைப் பரத்துவம் என்பர்.

2. திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட பெருமாளாகத் தன்னை நாடிவரும் முப்பத்து முக்கோடித் தேவர்களுக்கும் காட்சி அருளும் நிலையை வியூகம் என்பர். (அவதாரம் எடுக்க திட்டமிடும் இடம்).

3. அறம் தேய்ந்து, பொய்ம்மை மறம் எல்லாம் அறமாகத் தலைதூக்க, அதை அழித்துத் தருமத்தை நிலைநாட்டிட பரசுராமனாகவும் தயரதராமனாகவும், கண்ணனாகவும் தோன்றும் நிலையை விபவம் என்பர்.

4. எல்லா ஆன்மாக்களிலும் – மற்ற எல்லாப் பொருள்களிலும் மறைந்து நின்று அருள்பாலிக்கும் பரம்பொருளின் இருப்பை அந்தர் யாமித்துவம் என்பர்.

5. திருக்கோவில்களிலும், இல்லங்களில் உள்ள பூசை அறைகளிலும், கிடந்தவாறும், இருந்தவாறும், நின்றவாறும், நடந்தவாறும், கிடந்து எழுந்தவாறும் காட்சி அருளும் இருப்பை அருச்சை என்பர். அருச்சையில்

விபவாவதாரங்களில் தோன்றிய நிலைகளிலும் அவன் காட்சி அருளுவதுண்டு.

இவ்வைந்து நிலைகளில் திட விசும்பு என்னும் இப்பாடலில் நம்மாழ்வார் இறைவனின் அந்தர்யாமித்துவ நிலையை அழகுபடக் குறிப்பிடுகிறார்.

படர் பொருள் முழவதுமாய் அவைஅவை தோறும்
உடல்மிசை உயிரரெனக் கரந்துளங்கும் பரந்துளான்

என்கிறார்.

இவ்வவைணவக் கோட்பாட்டை அடியொற்றியே கல்வியிற் பெரியான் கம்பனும் தன் காப்பியத்தின் முதற்பாடலில் கடவுள் வாழ்த்து முதற்பாடலில், உலகம் யாவையும் தாமுள வாக்கலும் என்கிறான்.

இவ்வந்தர்யாமித்துவ நிலையை நம்மாழ்வார் பல இடங்களில் தேனொழுகும் தீந்திழ்ச் சொற்களால் வடித்துக் காட்டுவார்.

பனிக்கடலில் பள்ளிக்கோளைப் பழக விட்டு ஓடி வந்தது என் மனக்கடலில் வாழவல்ல மாய மணாள நம்பி!

தனிக்கடலே! தனிச் சுடரே! தனி உலகே! என்று என்று
உனக்கிடமாய் இருக்க என்னை எனக்கு உரித்து ஆக்கினையே

என்ற பெரியாழ்வார் பாசுரத்தில், திருப்பாற்கடலும் பரமபதமும் இருக்கத் தன்னை வாழிடமாகக் கொண்டாயே? என்கிறார். மேலும் அவர் அந்தர்யாமியாகத் தம் உடலில் இருக்கும் இறைவனை

மார்வம்என்பதோர் கோவிலமைத்து
மாதவன் என்பதோர் தெய்வத்தை நாட்டி,
ஆர்வத்துடன் பூசனைகள் செய்ய வேண்டும்

என்கிறார்.

நம்மாழ்வார் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன் என்கிறார்.

உடம்பில் உயிர் எங்கும் பரவி இருப்பதுபோன்று அவனும் உடல் முழுவதும் பரவி இருக்கிறான் என்கிறார்.

நம்மாழ்வார் தென் குறுங்குடி நம்பியின் பேரழகில் ஈடுபட்டு அவனை யாண்டும் மறக்க இயலா நிலை பெற்றேனே எனப் பெருமிதம் கொள்கிறார்.

நம்பியை, தென்குறுங்குடி நின்றஅச்
செம்பொனே திகழும் திருமூர்த்தியை
உம்பர் வானவர் ஆதி அம்சோதியை
எம்பிரானை, என்சொல்லி மறப்பேனோ? (திருவாய்மொழி 1-10-9)

என்னும் பாசுரத்திற்கு கவிராயர் அழகிய உரை வகுத்துள்ளார்கள்.

நம்பியை - உத்தமனை, நம்பி என்ற அழகிய திருநாமத்தை உடையவனை என்கிறார்; தென்கோடியில் தென்குறுங்குடியில் நின்ற செம்பொன் ஒளிபோல் திகழும் திருமூர்த்தியை, தேவர்க்கும் அறிவரிய ஆதிச் சுடரை - எம்பெருமானை - என் தலைவனை - என்ன காரணத்தைக் கொண்டு மறக்க முடியும்? என்று கைவிரிக்கிறார்.

கவிராயரின் திருவாய் மொழி சாரம் என்ற நூல் திருவாய்மொழி முழுமைக்கும் ஓர் அழகிய உரை வழங்குகிறது. திருவாய்மொழிக்கு உரை தந்தருளிய மிகப் பெரிய ஆசார்யர்களின் பரம்பரையில் இக்கவிஞரும் தம்மை நிறுத்திக் கொண்டு திகழ்கிறார் என்பதை அந்த நூல் கற்றோர் அனைவரும் உணர்வர்.

# 8. இராமாநுசக் கவிராயரின் தனிப்பாடல்கள்

இளமுனைவர் கி.பிரபா
41, காமாட்சி நகர்,
திருநெல்வேலி- 627011.

காந்தியின் மேல் தீராக் காதல் கவிராயருக்கு என்றுமே இருந்திருக்கிறது போலும்! காந்தி காவியம் எழுதியுள்ளார். காந்தியின் பாலபருவம் என மீண்டும் எழுதியுள்ளார். காந்தி வைணவர்; வழக்கறிஞர்; மேலும் வாய்மையைப் போற்றும் பண்பாளர்; பெற்றோரைப் பேணும் பேரறிவாளர். இருவரின் வாழ்க்கையும் ஒத்த நிலையில் இருப்பதாகத் தெரிகிறது.

குற்றமற்றது குசராத்து மாநிலம், ஐம்பூதங்களின் எழில் கொண்டது. அறிவுசார் சான்றோர்களைக் கொண்டது. இம்மாநிலத்தில் போர்பந்தர் எனும் இடத்தில் பிறந்தார், பெற்றோர் இட்ட பெயர் மோகன், நிறைபுகழ் ஓங்கிய உத்தமச் சந்திரன் வழி வந்தவர். பெற்றோரின் பெயர் – கபா காந்தி (கரம்சந்து காந்தி புத்திலிபாய், நான்காம் குழந்தையாகப் பிறந்தார்.

1869ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் இரண்டாம் நாள் இவரின் பிறந்த நாளாகும்.

கவிராயரின் பாக்களில் காந்தி பிறந்தநாளைக் குறிப்பிடும் வகையில் கணக்கு அறிந்தவர்கள் அல்லது சிந்திக்கத் தெரிந்தவர்கள் மட்டுமே புரியும் வண்ணம் உள்ளது – பொலிசதம் பதினெட்டறு தசமொன் பதகடோ பரிருநாள் – இவ்வாறு இருக்கும்போது அவரின் கவிதையைப் பிரித்துப் படிக்கவே பல நாட்கள் ஆகும்! விரைந்து படிக்காமல் விளங்கிப் பயில வேண்டும்.

## பண்புகள்

வாய்மை, பொறுமை, தூய்மை ஆகிய பண்புகள் நிரம்பி இருந்தன. அரிச்சந்திர நாடகமும் சிரவணன் பிதிர் பத்தி நாடகமும் காந்தியின் சிந்தனையில் ஆழமாகப் பதிந்தன. இவையே இவரை மேன்மை கொள் பெருமை கொண்ட பெருமகனாக வாழ வழி வகுத்தன.

## திருமணம்

இவரின் பதின்மூன்றாம் அகவையில் திருமணம் நடந்தது. இவருக்கென முடிவு செய்யப்பட்ட பெண்கள் இருவர் இறந்தனர். மூன்றாம் முறையாக உறுதி செய்யப்பட்ட பெண்ணான கசுதூரியை மணமுடித்தார்:

மும்முறை முடிவு மூதலித் தவர்கள்
இம்மையை நீத்தார் இறுதி மணமுன்
செம்மை கத்தூரிச் சேர்விதி முன்னாற
கொம்பினிற் கனிபோற் கொழுமண மமைந்த
(கவிராயரின் பாடல்)

காந்தியின் தந்தைக்கு உடல் நலம் குன்றியது. அந்தகன் (யமன்) வந்தனன். தாதை (தந்தை) சேந்தான். சிந்தையில் வெந்தனன் காந்தி, காலம் கழிந்தது.

பனிபொழியும் இங்கிலாந்து நாட்டிற்குச் சென்றார், பாரிதர் பட்டம் வாங்க! அன்னையிடம் வாக்குக் கொடுத்தார். எந்தச் சூழலிலும் மது, மாதுவைத் தொடமாட்டேன் என்று புது நாகரிகம் இருப்பினும் கொண்ட கொள்கையில் மனம் ஒன்றி இருந்தார். பதியிரண்டாண்டில் பாரதம் வந்தார்.

1891ஆம் ஆண்டில் பாரிதர் ஆனார். 1894இல் காங்கிரசு வித்து முளைக்கிறது. உற்றுப் பார்த்தால் மட்டுமே விளங்கும் இவருடைய கவிதை நயம். ஆம்! சொல் விளையாட்டு ஆடுகிறார் என நினைக்கத் தோன்றுகிறது.

“சதமோர் பதினெட் டதன்மேற் றசநவம்
அதன்மேற் சதுர்த்தி யமைவாண் டதனில்
.......................................................
...................... எழுங்காங்கிரசு” என யாத்துள்ளார். (பாடல்30)

அந்த காங்கிரசு நலம் புனல் வார்ப்பில் நயமாக வளர்ந்ததாம்! வாய்மையால் வளர்த்தானாம் மோகன். இத்தகைய காங்கிரசு வளர்நிலையில் காந்தியும் வாய்மையால் வளர்ந்துள்ளார். துயர்கள் வந்தன. ஆனாலும் கனிவுடனே இருப்பார் காந்தி.

ஒளிவிளக்கு அணைந்தது. உடலுக்கு நெருப்பு, உயிருக்கு மதிப்பு! ஆம் அவரின் புகழ் இன்றும் நிலைத்துள்ளது. வையகம் போற்றும்

வாழ்வாங்கு மனிதனாகப் பிறரால் மதிக்கப்படுகிறார்.

30.1.1948இல் அவரின் உடலை விட்டு உயிர் பிரிக்கப்பட்டது. இயற்கையாக மரணம் வந்திருப்பின் மேலும் சில ஆண்டுகள் இருந்திருக்க வாய்ப்பு உண்டாயிருக்குமோ!

தமிழின் சிறப்பில் அனைவராலும் அறியப்பட்ட உண்மைகள் பல. அகரம் முதல் னகரம் இறுவாய் முப்பது என்ப - தொல்காப்பியம் நினைவூட்டுகிறது. தமிழின் சிறப்பு எனும் செய்யுள். செய்யருந்தவமேல் எனத் தொடக்கம். கருதுயிர் கற்பே கைமையுங் கொளுமே என நிறைவில் காண்கிறோம். சிறப்பு என்னவெனில் முப்பது அடிகள் உள்ளன.

முப்பது எழுத்துக்கள் கொண்ட தமிழை முப்பது அடிகளில் காட்டிச் சிறப்பித்துள்ளார். செம்மையான தமிழின் வளம் செய்யருந்தவமேயாம்! மெய்யான அறிவின் சிறப்பால் பெருமை பெறலாம். தவ ஆற்றல் நிரம்பிய துறவிகளுடன் மைவண்ணத்து மேகங்களின் தொடர்புடன் பொதிகை இருப்பதுபோல! தெய்வ ஆற்றலுடன் இளமையுடன் தீந்தமிழ் அணங்கு இருக்கிறாள்.

கார்மேகத்தில் பொன்வண்ண வளம் அழகுடன் ஒளிரும். அதைப் போல் தமிழ் உள்ளது. பாரில் தமிழின் புகழ் சிறப்பு நாராணன் எனும் திருமாலின் நன்றாற்றலைப் போலவே காணப்படுகிறது. இவ்வையகமே புகழ்கிறது தமிழை. அதன் பாங்கு எழிலோங்கக் காரணம் - வாய்மை, வளம் நிறைந்த வேதம். இவைகளைப் பேணினால் பைந்தமிழின் எல்லை எங்கும் பரவும்.

திருமலை வளம் போலே ஓங்கி உயர் நிலையை அடையும். க்வியின் தரம், உயர்நிதி ஆகியவற்றால் திருமலை புகழ் போலே தமிழ் உயர் நிலையடையும் அதற்கெனத் தனிப்பெயர் என்றும் இருக்கும். தீயவை இல்லா நிலை அதுவே!

மணம் நிறை மலர், ஒளி நிறை பொன், கலைகள் கொண்ட நூல்கள், நலம் வாய்ந்த புகழ், பொருள் அமையப்பெற்ற பாடல், பலவகைகளில் பழகும் பண்புகள் கொண்டாலும் வாழ்விற்குத் தமிழ் வானுயர உயர்த்தும்.அறம் வழித் தமிழ், அறிவியலில் தமிழ், மலர வைக்கும், ஊக்கம் தரும் மேன்மை பெற முடியும்.

தமிழால் உயர்வு எப்படி? சிந்தித்தால் பாழ் (சுழி) எப்படி அதன்

இருப்பிடத்தைப் பொருத்தே மதிப்புக் காட்டுமோ அதைப் போன்று தமிழ் மதிப்பைக் காட்டும். காரிகையின் நலம் போலே தமிழின் பெருமை காணலாம். கற்றுக் கொள்வதும் எளிமையே!

தமிழ் பெண்ணே ஆகும். பெண்ணால்தானே உயிர்கள் பல்கிப் பெருக வாய்ப்புள்ளது. அதைப் போலவே இருந்த பலமொழிகள் பல்கிப் பெருகி உள்ளன என அறிய முடிகிறது. ஆக மொழிகள் எத்தனை இருப்பினும் அத்தனைக்கும் தாயாக விளங்குகிறது தமிழ் என முடிந்த முடிவாகவும் தெளிவாகவும் அறிய முடிகிறது.

தமிழை அணங்கு, அரிவை, மங்கை எனப் பல பருவங்களில் கவிராயர் காட்டியுள்ளார். மனோன்மணியம் சுந்தரனார் பாடலில் தமிழைச் சிறிய நெற்றியில் உள்ள நறுமணம் கொண்ட திலகமாகக் காட்டியிருப்பார். கவிராயரும் நிலமகள் திலகமாகச் சிறப்பித்துள்ளார்.

அற்புதமான தமிழ்! இளம் பெண் ஈன்றெடுத்த செல்வத்தைப் போல தமிழ் தரணியில் தமிழ் கற்பு நிலையில் உயிர்போலே கலப்படமற்றது. இப்படிப்பட்ட தமிழின் சிறப்பு என்றென்றுமே இளமையும் வளமையும் கொண்டது ஆகும்.

அணங்காகத் தமிழ் அற்புதங்களைத் தருகிறது. தனித்திருந்தாலும் வாழும் தமிழ் என்றென்றுமே!

கடவுள் வாழ்த்து! ஆம் கடந்து இருக்கின்றான். உள்ளேயும் புறத்தேயும் அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்துள்ளான் இறைவன். ஆகவே அவன் கடவுள், நோக்குமிடமெல்லாம் நிறைந்துள்ளான். அவன் ஒருவனே! என்றும் உளன். இமைப்பொழுதும் நீங்காமல் நிறைந்திருக்கிறான். அவன் எமது உள்ளத்தில் உள்ளான். எனினும் அவன் எனக்கு மட்டுமே அல்லன். பொதுவானவன்! வாழ்க்கை நிலையற்றது. உயிர் நிலையானது. நிலையற்ற வாழ்வில் நிலையானவன் இறைவனே! உயிர் மங்கா நிலை அல்லவா! அதுபோல் இறைவனும் மங்கா நிலை கொண்டவனே! பழுதில்லாதவன்.

இறைவனைப் பணிகின்றேன். பணிவேன் எனில் எப்போதும் முக்காலமும் வணங்கி வாழ்கிறேன் என உறுதிப்பாட்டைத் தருகிறார் கவிராயர். சரி! உயிருக்கு உருவம், வடிவம், வண்ணம் எவையேனும் உண்டா? அழியாதா? என்றுமே...?

உயிர் அழியாது. ஒருமைக்குரியது. ஆம் இறைவனும் ஒருவன்தான்! அப்படியெனில் கடவுள் வாழ்த்தில் கவிராயர் பங்கமிலதாகப் பணிவேன் கழலே எனத் தந்துள்ளாரே! சிக்கல் இல்லையா? இல்லவே இல்லை என்பதே விடை. அவரவர் விருப்பப்படி இறைவனை நினைக்கும்போதும் நெஞ்சில் வழுத்தும்போதும் உருவ வழிபாட்டில் எண்ண வாய்ப்புள்ளது அல்லவா!

அந்த அடிப்படையில் தான் சார்ந்த வைணவத்தின் பால் ஈடுபாடு கொண்ட நிலையில் திருவடி வணக்கம் எனச் சுட்டுகிறார். வைணவர்கள் திருவடி வணக்கத்திற்குப் பழக்கத்தைக் கொண்ட வழக்கமுள்ளவர்கள். ஆதலால் கவிராயர் உள்ளம் தெரிகிறது. கழலே பணிவேன் எனும்போது.

## மாதவியின் எழுத்தோவியம்

இளம்பெண்ணின் எழுத்தோவியமாக இருப்பினும் மடலில் தம் உள்ளக் கருத்துகளை எழுதும் நேர்த்தியைக் காண முடிகிறது. மனத்தை வருடும் கவலைகளைக் கடிதத்தில் தன் மடல் வழியே அனுப்பும் இங்கிதம் தெரிகிறது.

தலைவனால் தலைவி புரியும் நிலையில் அவளின் மனம் படும் பாடு! ஆம்! கோவலன் மாதவியைப் புரிந்து கொள்ள இயலாமல் விட்டுப் பிரிந்து சென்று விட்டான். மாதவியின் மேல் ஏதும் பிழை இல்லை. புரிதல் இல்லாததால் பிரிதல் நிலை!

புலன் வழியேயும் உளம் வழியேயும் உயிர் முழுதும் புகுந்து நலம்பெறக் காரணமான நாயகனே வணக்கம்! சடங்குகள் ஏதும் செய்யாமல் உன்னுடன் வந்தேன். சடங்குகள் இல்லையெனில் வாழ்வில்லையா? உன் நலம் பேண எனக்கு உரிமை உண்டு. புலம்புகின்றேன்! என் உயிரே நான் தான்! என்னுள் ஏதும் பிழை இல்லை.

அல்லலில்லா வாழ்வைக் காணேன்! செல்வனே! உன் அடியில் வாழ விழைகிறேன்! விரைந்து வர இருக்கிறேன். நீ அருள்க! நல்லவற்றை நாடுகிறேன் நான். நீ இல்லையேல் என் வாழ்வில் ஏதுமே இல்லை. இல்லத்தில் தனிமை மட்டுமே உணர்கிறேன்.

அழகில்லை! யாழில் இன்னிசை இல்லை! சிலம்பொலி இல்லை! கீச்சு கீச்செனும் பறவைகளின் ஒசை கேட்க இல்லை. யாழ் இருக்கிறது,

சிலம்பு இருக்கிறது, பறவைகளும் இருக்கின்றன. ஆனால் அவைகளால். எனக்கேதும் இன்பம் இல்லை.

சொல்லில் வடிக்க இயலாத் துயரத்தில் இருக்கிறேன். பஞ்சணை இருந்தும் உறக்கம் இல்லையே! பாலும் பழமும் இருந்தும் சுவைக்க மனமில்லையே! கொஞ்சும் தென்றலும் நிலவொளியும் என்னை வாட்டுகின்றன. இன்பமில்லா வாழ்வில் துன்பத்தில் மட்டுமே வாழ்க்கை எனக்கு! ஏன்.....? ஏன்......?

கனலாய்க் கொதிக்கிறது உடலும் உள்ளமும்! என் உள்ளம் செம்மையானது அல்லவா! இப்போது ஏதுமில்லையா என்னைப்பற்றி எண்ணுவதற்கு! சிந்தனை இல்லை எனக்கு. உணர்த்த மொழியில்லை எனக்கு. தேனில்லா மலர் இருக்குமோ? மின்னல் இல்லா மேகம் இருக்குமோ!

வஞ்சகியானேன்! உன்றன் துணையின்றி உறக்கம் கொள்ள வில்லை. துடிப்பில்லா மரக்கலம் போல் ஆனேனே! தனித்துள்ளேன்! மழலையாய் (குழந்தை) மயக்க நிலையில் உள்ளேன். நெடும்பசி உள்ளது. வாடுகிறேன்! ஆனாலும் இறைவனின் துணை இருப்பதால் இன்னமும் இருக்கிறேன், வாழ இல்லை, உன் நினைவுகளால் மனம் வாடுகிறது, மழுங்கிப் போயுள்ளேன்.

இல்லக்கிழத்தியாய் இருப்பதனால் இன்னமும் மாண்புடன் இருக்கிறேன்! எப்படி? கற்புடைப் பெண்ணாக வாழ வேண்டும் என உறுதியுடன இருப்பதால்!

இளம்பெண்ணின் வாழ்வில் காதலனாக இருந்த கணவன் அவளை நீங்கினால் வஞ்சிக்கப்பட்டுவிட்டாள்! எனும் எண்ணமே முதலில் ஓங்கி இருக்கும். ஒருநாள் வருவான்! உயிர் அதுவரை இருக்கும். ஏனென்றால் அவளின் கற்பு மாறாததனால்!

கவிராயர் பெண்ணாகப் பிறந்து அவரின் வாழ்வில் இப்படித் துன்பம் உண்டாயின் இப்படித்தான் பிரிவாற்றாமையைப் பிழிந்திருப்பார் போலும்!

ஏற்றப் பாட்டு! இசையுடன் மிளிரும் பாடலாக இருப்பின் தனிச்சுவை பெற முடியும். ஏற்றம் இறைக்கும்போது மக்கள் சுமை தெரியாமல் இருப்பதற்காகவே பாடிக்கொண்டே பணியாற்றுவார்கள். அந்த வகையில் இங்கே நாம் இயற்கையைப் பற்றிய ஏற்றப் பாட்டைக் கண்டு உணர

முடிகிறது.

ஆற்று வெள்ளம் நாளை வரத் தேற்றுதே குறி! – மலையாள மின்னல் ஈழ மின்னல் ........ எனும் பாடல் சிற்றிலக்கியங்களில் இடம் பெற்றது. அப்பாடலை நினைவூட்டும் வகையில் கவிராயரின் ஏற்றப் பாடலும் உள்ளது.

காற்றில் வேற்றுமை தெரிகிறது. கருமேகங்கள் வரும் முன்னே அடையாளம் காட்டுகிறது. நால் திசையிலும் கீற்று முளை தோன்றியுள்ளது. தட்டான் சிறகை விரித்துப் பறக்கும்போதோ நல்ல இசை கேட்கிறது. ஆட்டு மந்தைகள் கூட்டம்! கூடுகளில் இருக்கும் பறவைகள் கலைகின்றன. கிழக்குப் பக்கம் நட்பின் அழகு மிளிர்கிறது.

மின்னல் ஒளி மங்கி வெட்டுகிறது மின்னல்களைக் கண்ட மேகங்கள் குளிர்ந்தன! எங்கும் இளஞ்சாரல் தூற்றுகின்றது. இளம்பூக்களில் தேன் ஊறுகிறது. ஊறும் ஓசையும் கேட்கிறது. கனல் போன்ற ஒளி எல்லையில் பழுதியில்லாமல் படர்ந்துள்ளது. கனலில் ஒளி வளைபிறை போல் தோன்றுகிறது. மங்கை– இளம்பெண்களும் அவர்களின் மைந்தர்களும் இயற்கையின் இன்பச் சூழலில் இசைக்கின்றனர். பாத்திகளில் உள்ள நாற்றுகள் இளஞ்சாரலில் உண்டான தூறல்களால் நீரில் அசைந்தாடுகின்றன.

வெள்ளி இருளில் தெரிகிறது. கடுமையான தூறல்களால் வாடை கூடியது. வாலை மீன் தேடுகின்றது. வளமை உள்ள அதன் விழிகளில் சீர்மை ஓடுகிறது. சோலையில் மயில் தன் தோகையை விரித்து ஆடுகிறது. மேகத்தில் மின்னல் பாம்பைப் போல் நெளிந்தோடுகிறது. சேற்றினில் தவ்வை பாயும் அழகும் கெண்டை மீனும் பாம்பும் கிழக்குப் பக்கம் நீரில் பாய்ந்து துள்ளுகின்றன.

சிவப்பான கதிரின் வெப்பம் எங்கும் சூழ்ந்துள்ளது. ஒளியின் தாக்கத்தால் கடுமையான பசி சுடரைப் பேரல் உடலெங்கும் பரவி விட்டது. அங்கம் எங்கும் வியர்வை ஆறாய்ப் பெருகிப் பொங்கி விட்டது. காளைகளும் பாய்கின்றன. அகவையில் இளைய ஆண்களும் புனலின் ஆழத்தில் பாய்கிறார்கள். தென்றலின் இங்கிதம் பளகாங்கிதம் (சொல்லொணா இன்பம்) தருகிறது. புன்னகையின் ஒளி நிழலாகத் தெரிகிறது. அகத்தில் தெரியும் நிழல் அதுவே! பொன்னிற வண்ணத்தும்பி

செந்தேனைக் கூட்டில் சேர்க்கும்போது செங்கூழின் சுவை நாவில் சுவைக்கும்போது ஏற்படும் நிலையைக் காட்டுகிறது.

இயற்கையைச் சுவைக்க இராமானுசக் கவிராயரின் ஏற்றப்பாட்டு உதவுகிறது. மனிதா! இறைவனை வணங்கு. இயற்கையைச் சுவைத்துப் பார்! எனச் சொல்லாமல் சொல்லும் கவிதையாக நெஞ்சில் நிலைக்கிறது.

வேலையின் சுமை தெரியாமல் இருக்க இப்படிப்பட்ட பாடல்கள் உதவும். மேலும் ஆடிப்பாடி வேலை செய்யும்போது தனிமை மறந்து போகும்!

**தாமிரபரணி :**

தாமிரபரணியைப் பற்றி எழுபத்து இரண்டு அடிச் செய்யுள் உள்ளது. இராமானுசக் கவிராயரின் பிறந்த ஊர் திருநெல்வேலி. தாமிரபரணியால் திருநெல்வேலிக்கு வளங்கள் அனைத்தும் கிடைக்கின்றன. மக்கள் நலத்துடன் வாழ அந்நதி பயன்படுகிறது. சீவநதியாக இருக்கும் தாமிரபரணியைப் பற்றிப் பெருமையாகச் செய்யுளில் யாத்துள்ளார் கவிராயர்.

கவிராயரின் பாவடிகள் – காமமில் வளமேக் கருதருஞ் சிறப்பே! என்கிறார். ஆம் அறில்லா ஊருக்கு அழகில்லை என்பதைக் காட்டுகிறது. இப்புவியில் நிறை உள்ளத்தின் அமுதாக இந்நதி ஓடுகிறது!

நொடிதோறும் பிறவி எடுக்கிறதாம். அமுதான இந்நதி நித்தம் நித்தம் பிறப்பெடுக்கிறதாம்! எப்படியெனில் சீரிளந்தமிழ் போலே!

பாறைகளும் நுண்மணலும் இருக்கின்றன. அவற்றைத் தழுவுகிறது இந்நதி. அதனால் அவை அழகுற இருக்கின்றன. நதியால் தூய்மையாக்கப்படுகின்றன எனும்போது அழுக்கை நீக்கி அழகை உருவாக்குகிறது என்கிறார்.

பொழிகின்ற தமிழின் இனிமை உள்ளது. தேனைச் சொரியும் மலரில் நாற்றம் பொதிந்துள்ளதே! மிகுமணம் கொண்டுள்ளதே! அன்னியம் எனப்படுபவை யாவுமே உன்னால், உன் புணர்வால் மினுக்கிறதே! ஒளி வீசுகிறதே! உன்னால் யாவும் நல்லவையே! உடல் பிணி மறைகிறது. உள்ளத்தில் பிணி ஒழிகிறது.

வளர்தமிழின் தங்கையாக இருக்கிறாய்! தமிழே இளமைதான்!

எனினும் அவளின் தங்கையாக நீ தெரிகிறாய்! உன்னுள் இளமை பொங்கி வழிகிறது. எத்தனை காதல்! எத்தனை மனிதர்கள் இவ்வுலகை ஆள்வதற்கு ஆசைப்படுவார்! ஆனால் நீயோ.............!

மரங்கள், விலங்குகள், பறவைகள், வயல்கள், மக்கள் கொண்ட வளம் நிறை நதியாக இருக்கிறாய்! உன்னைக் கம்பன் இராமகாதையில் பொருணை எனப் புகழ்ந்துள்ளான். நீ தானே அந்த நதியாம் தாமிரபரணி! கருணை என அழைப்பேன் யான், ஏனெனில் நீயோ காரிகை!

வெப்பம் மிகு சூழலில் நீ தானே சூட்டைப் போக்குகிறாய். பொதிகையின் தமிழ் அரும்பும் அருந்தமிழாய் வாழ்கிறாய். உன் எழிலால் மருத நிலம் செழிக்கிறது. செம்பு கலந்த நதியாம் உன்னால் கிடைப்பவை ஏராளம்! நாள்தோறும் உன் தெளிபுனலில் மூழ்கி எழும்போது உடல் வனப்பும் மனத்திடை மகிழ்வும் ஏற்படுகின்றன.

தித்திக்கும் தென்றல் வீசும்போது உன்னால் களிப்பு அடைகிறேன். ஏகாந்த எழில் அமுதாய், அமைதியுடன் காணும் உன்னால் கள் போன்ற காதல் இருப்பதை உணர்கிறேன். உலகியலோடு வாழ்ந்து இவ்வுலகம் நீங்கிப் போக வேண்டுமெனில் பாவங்களில் இருந்து அறவே நீங்க வேண்டும்.

நற்புனலாக விளங்கும் உன்னால் சிந்தனையில் மாற்றம் வருகிறது. வலிமையும் தூய்மையும் உன்னால் பெறுகிறேன். வாழ்வில் சீரும் சிறப்பும் பெற நீ உதவுகிறாய். புகழொழி வலம் வரும் உன்னால் செல்வங்கள் மலிந்துள்ளன.

பெற்றுப் பயன் அடைக.
தாமிரங்கலந்து தகைதணிந் தோர்க்கு!
மெய்ப்பிணிகள் எழும் இடர் தீர்ப்பாய்!
வனப்புடல் வளம்.
பொருணை என்றுன்னைப் புகன்றனன் பொய்யில்
................ சடகோபன்.
பொதிகையின் செல்வன்

இவ்வாறு தாமிரபரணி நதியைப் பற்றிச் செய்யுள் வடிவிலே தமிழின் சொல்லோவியத்தைக் கொண்டு பார்த்து இன்புற முடிகிறது.

# 9. இராமாநுசக் கவிராயரின் திருமால் வழி

இரா.கோதைநாயகி
இரா.கள்ளப்பிரான்

## புதிய புலவரும் பழைய தமிழும்

நெல்லை தந்த காப்பியப்புலவர் இராமாநுசக் கவிராயர். செம்மொழித் தமிழின் பண்டையத் தமிழ் மரபில். தமிழ் நடையில், வாழ்வைச் செம்மைப்படுத்தும் பாக்கள் பல யாத்த பெருமகனார். 12285 பாடல்களில் காந்தி காவியம் எழுதிய காப்பியப் புலவர் அராவகனதளம், பூகந்த வெண்பா, கட்டபொம்மன் காதை, கோவிந்தபசனை ஆகிய 18 நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள், துளவன் துதித்தொகுப்பு என்ற நூல் வாயிலாகத் திருமாலின் மொழி கேட்டு ஒளி பெற்று, வழி நடந்தால் வாழ்வு எழிலாகவும் இன்பப் பொழில் ஆகவும் திகழும் என்று நிறுவியுள்ளார். 57 பாடல்களால் ஆன திருமால் வழியில் வரும் பல அரிய தத்துவங்களும், கருத்துக்களும், வாழ்க்கை வழிமுறைகளும், சிந்தை நிறைக்கும் சந்தப் பாக்களும், அவரது புதுச் சொல்லாக்கத்திறமும், சொற்றொடராக்கமும் இங்கே நம் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. பாரதியும் பாரதிதாசனும், வள்ளலாரும், தாயுமானவரும், நாமக்கல் கவிஞரும் எளிமைப்படுத்தி விட்ட தமிழ்க்கவிதை நடை அரசோச்சும் இக்காலத்திலும், கம்பர் ஆழ்வார்கள் , புகழேந்திபோன்று பழந்தமிழ் நடையைக் கையாண்டுள்ளார். செறிவான, இப்போது நாட்டிற்குத் தேவையான சீரிய கருத்துக்களை இவர் நூல்கள் பரப்புகின்றன.

## திருமால் வழியில் புதிய சொல்லாக்கம் :

திருமால் வழியில் வரும் சில சொற்களையும், சொற்கோவைகளையும் பார்க்கலாம். முயனுறவே : முயற்சி நாம் செய்வது. ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதுபோல் பலன் இறைவன் பழவினைக்கேற்ப அளிப்பான். அந்த முயற்சி எண்ணம் எழுந்தாலும் செயலாக்கம் பெற ஊழ் புரிந்திருக்க வேண்டும்.

அன்பு, அறிவு, ஆற்றல் மூன்றும் சேர்ந்திருந்தால்தான் ஒரு செயல்

நிறைவுறும். உதவி செய்ய வேண்டும் என்ற அன்பு எண்ணம் இருந்தும், அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் இருந்தும், தகுந்த அறிவான வழிமுறை தெரியாவிட்டால் முயற்சி தோல்வியுறும்! அன்பிருந்தும், வழிமுறை அறிவிருந்தும், அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் இல்லாவிட்டால் பணிநிறைவேறாது - மனைவிக்குப் பயந்து அன்னையைக் கைவிட்ட கதை ஆகிவிடும்.

ஆற்றலும் செய்முறை அறிவு இருந்தும், அன்பில்லாவிட்டால் எப்படிப் பணி நிறைவுறும்? எண்ணம் முயற்சியாகி, முயற்சி வெற்றிபெற ஊழ்புரிந்திருக்க வேண்டும். பல்யாப்பில் உலவி முயலுறவே ஊழ்புரிவான் எம்பாவாய் (தத்துவத்தின் ஒருமை). மனைவியைச் சமாதானப்படுத்தி அன்னைக்கு உதவக் கணவனுக்கு உதவி ஊழ்புரிந்தால், அடுத்த நிலையில் மகனிடம் ஆன்ம முன்னேற்ற முயற்சிக்கு உதவி கோரும் போது அவன் மனைவியைச் சமாதானப்படுத்தி உதவி செய்ய ஒருவர் வருவார்; வாழ்க்கையே ஒரு தொடர்வினை என்பதை முயலுறவே என்ற சொல் விளக்குகிறது.

**ஆழித்துயர் :** கடல் போல் ஆழமான துயரம், நான் என்னும் அகந்தை வாய்ப்பட்டு மும்மலங்களில் மூழ்கி, உயர்நலங்கள் கிட்டாத வகை தேடிப் பெற்றுக் கொள்வது ஆழித்துயராளாது ஆராயே லெம்பாவாய் (ஊழ்)

**வீயாவினை :** போயபிழையும் புகுதருவான் நின்றனவும் என்று ஆண்டாள் குறிப்பிடுகின்ற, இன்னும் பழுத்துச், செயலுக்கு வராத முன்வினையால் வரஇருக்கும் துன்பங்கள் என்று ஒவ்வொருவர் வாழ்விலும் வரஇருக்கும் பழவினைப் பயனைக்குறிக்கிறார் ஆசிரியர்.

வீயா வினை வாழ்வின் வெந்தழல்கள் வேற்றுமைகள் (வாய்ப்பேச்சு பயனில்லை)

**வாங்காரப்பூ :** பிறவி எடுத்து வரமாட்டார்கள் என்ற பொருளில் இந்தச் சொல் கையாளப் பட்டிருக்கிறது. பூ என்பது பூமியைக்குறிக்க இந்தப் பூமியில் உடல் எடுத்து வரும் பிறவியை வாங்கமாட்டார்கள் என்பது குறிப்பு.

வம்பார்ப் புன்குரம்பை வாங்கார்ப்பூ எம்பாவாய் (11- நம்பிக்கையே உறுதி

**திரள்கூடி :** கூட்டு வழிபாடு, கூட்டுப்பிராத்தனை, பசனை என்று பக்தர்கள்,

ஒரே நோக்கத்தோடு செய்யும் வழிபாடு, பாடல்கள், பசனைகள் பன்னெடுங்காலம் நம் மண்ணில் வழக்கிலிருக்கிறது. பாவை நோன்பும் அப்படிக் கன்னியர் கூடிக் களிகொள்ளும் ஒரு வழிபாடு.

பாவாய் நீயெழுந்து பவித்திரமாம் திரள்கூடி (திருமால்வழி 49 உயிரின் இயல் – கூட்டுத்தொழுகைக்கும் ஏற்றது)

**முன்பின் முகில் நீரில் :** கடலிலிருந்து நீர் சூரிய வெப்பத்தால் மேகங்கள் ஆகி, பின் குளிர்ந்து, உலகிற்கு மழையாக நல்ல நீரைத்தரும். அந்த நீர் முன்னால் முகிலாக இருந்தது. கடலில் கலந்தபின், மறுபடியும் முகிலாகிறது. முன்பின் முகில் நீரில் என்ற சொற்றொடர் திருமால் வழி பாடல் 5இல் (மாதவனைத் தேடல்) அழகாகக் கையாளப்பட்டிருக்கிறது.

முன்பின் முகில் நீரில் மூழ்கேலோர் எம்பாவாய்

**நேய நீராவி :** நேய நீராலி என்று கவிராயர் இங்கே கண்ணனின் இராசலீலையைக் குறிப்பிடுகின்றார். ஆலிப்பு என்பது மயக்க ஆரவாரம். அன்புடைய பக்தர்களுடன் நீரில் ஆர்வாரமாகக் குளித்து இன்ப மயக்க நிலையில் இருக்கும் கண்ணன் அந்த நிலைவிட்டு நீங்கான். ஆகவே ஆடிப்பாடி யமுனைக் கரையில் அவனோடு குளித்துக் கும்மாளமிடலாம். கண்ணனை விட்டு நீங்காத நிலைதானே சுவர்க்கம்.

நேய நீராலி நீங்காதான் எம்பாவாய் (திருமால்வழி 4– கண்ணன்)

**ஆக்கையின் இன்பம் :** உடல் சம்பந்தமான இன்பம், ஆக்கை யினதின்பம் அளவற்றுத் தானருளும் (திருமால் வழி 50)

**நெகிழின்பம் :** இன்பம் துய்க்கும்போது நெகிழ்ச்சி ஏற்படுகின்றது. நெகிழ்ச்சி இன்பத்திற்கு இட்டுச் செல்கின்றது. நான் என்ற அகந்தையற்ற காதலர்கள் இணைப்பில், களிவண்டும் தாமரையும் போல் உணரப்படும் இன்பத்தை நெகிழின்பம் என்று கவிஞர் கூறுகிறார்.

தூற்று மெருக்குடனும் தோயும் அது நெகிழ் இன்பம் (திருமால்வழி 15 உளம் அஞ்சவேண்டாம் என்னல்) இதுபோல், கலியவிய, பிறழறிவால், சடத்துறங்கும், களிநிதியும், விழுமநலம், சமதமங்கள், ஓர்மையுறு, நேர்நிகழ்வு, மாய்சின, பூப்புவித்த என்று திருமால்வழியில் பல நயமான சொல்லாட்சி காணலாம்.

**நூல் சாரம் :**

பிணியற்ற உடல்நலமும், நல்லன செய்யும் அறிவும் பெற முயலும் உயிர்கள், மனம் சலனமின்றி அசையாது கிடக்கும் பக்குவம் வரும்போது இறைசிந்தனையில் ஆழ்கின்றன. சக்தியற்றவராயினும் நற்குணமுடைய பக்தர்கள் மனம் மகிழவும், நல்லூழால் நன்மைகள் பெற்றாலும் அதற்குமேல் நிலையான இறை அனுபவம் பெறவும், அவரவர் அடைந்துள்ள நிலைக்கு ஏற்பத் தன்முனைப்பு நீங்கி வீடுபேறு அளிப்பான்பால் பணிய வேண்டும். காலம் கடந்தவனாகிய இறைவனின் கல்யாண குணங்களில் ஆழ்ந்து ஆழ்ந்து அதுவேயாகி, கலியின் வலியழிய பக்தியில் நனைந்து, பாடி, உருகி, அன்பால் ஒன்றாகி பெருமைமிகு சதிபதிபோல் இறையன்பில் கலந்திருக்க வேண்டும். எப்பொழுதும் அவன் நினைவாகவே கசிந்து, உருகி, வருந்தி நின்றால், அரும்பு பெரிய மொக்காகி இதழ் இதழாக மலர்வது போல் அகமும் முகமும் மலர்ந்து பொலிவுறும்; உள்ளம் மகிழ்வுறும். தான் கண்ணன்பால் கொண்ட அன்பு, பக்தியால் பெற்ற உணர்வுகளை இன்பங்களை, கண்ணனின் அழகு, குணாதிசயங்கள், லீலை, அவதார மகிமை, சௌலப்பியம் எனத்தான் அனுபவித்தவாறே இந்த 57 பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார் என்று திருமால்வழி நூலின் சாரத்தை, இதை நாட்டிய நாடகமாகத் தயாரித்து வரும் திருமதி திரிபுரசுந்தரி சுப்பிரமணியன் கூறுகின்றார்.

திருமால் வழி கூறும் பல தத்துவங்கள், கருத்துக்கள், வழிமுறைகள் கீழே பட்டியலிடப்பட்டிருக்கின்றன.

**தத்துவங்கள் பாடல் எண் :** 1, 6, 27, 29, 30, 31, 32, 33, 34, 389, 40, 52, 53, 55, 56

**கருத்துக்கள் பாடல் எண் :** 3, 4, 5, 12, 16, 18, 22, 24, 25, 26, 35, 36, 41, 42, 43, 44, 45, 47, 50, 51,57

**வழிமுறைப் பாடல்கள் :** 2, 7, 8, 9, 10, 11, 13, 14, 15, 17, 19, 20, 21, 23, 28, 37, 38, 46, 48, 49, 54

| **தத்துவங்கள்** | | பாடல்கள் |
|---|---|---|
| 1. | உலகத் தத்துவம் – வாழ்வின் இலக்கு | 1 |

கருத்துக்கள் பாடல் எண்

**சிந்தை நிறை சந்தப்பாடல்கள்** **பாடல் எண்**

ஆவல் வழியவனை அணங்கினருந் தாமடைவாம்
தூவில் நீராடித் தோத்திரங்கா னெம்பாவாய் 3

3. மும்மலம் தீர்ப்பான் :
நென்ன லின்றோடு நெடுநாளும் தான்தொடரும்
சொன்னம் புவிமாதர்ச் சுவையாடு வல்வினையின்
இன்னல் தீர்ப்பான் இங்கிதமாய்த் தான்போக 5

4. உணர்வும் நெறியும் :
புணர்ப்பா முடல்வழியே புகுமுணர்வில் உள்ளியலைக்
குணமாய் நெறிபகுத்துக் கூட்டிடுவா னெறிஉயிர்ப்ப 7

5. நாம் பெற்ற இறையுரு நம்மை வழிநடத்தும் :
அணையு மெழிலுருவம் அவரவர்க்குப் போதுமதன்
பிணைப்பும் பெருகிடுவான் பெம்மானேற் றேற்பாவாய் 7

6. அன்பினால் சுற்றம் :
ஆரு மன்பமைப்பை ஆராயில் அனைவருடன்
சேரு மியலதுவுஞ் செம்மலவன் திருவுளமே 9

7. வேண்டுவோர் விரும்பியபடி குணத்தையும் மாற்றிடுவான் :
பாயும் உரன்படுப்ப பாங்குயிரின் இயல்வழியே
நேய பூதவழி நெகிழ்த்திடுவான் நேர்மைநலம்
வேயு மிறையொன்றே வேட்கையொழித் தீர்க்கும் 10

8. அறிதுயில் :
சேட னமளியிடைச் செல்வனவன் உறங்குதும்போல்
வேடம் புரிவாயோ 14

9. யாரும் உளம் அஞ்ச வேண்டாம் :
ஏற்றந் தருமியல்கள் இல்லையெனு முள்ளமதால்
ஊற்ற மழிவானேன் ஒருவனவன் திருநாமம்
தேற்று முயிரிலைத் தெளிகிற்பின் கீழ்மேலாம் 15

10. சதிபதிபோல் நெகிழின்பம் :
காற்றிற் பறந்துவரும் களிவண்டும் தாமரையும்
தூற்று மெருக்குடனும் தோயுமது நெகிழின்பம் 15

11. இதற்குப் பாடம் எடுப்பதுண்டோ?
சிற்றின்பஞ் செப்பிச் சீரணங்குங் கூட்டடுவரோ

கற்றிடுமோ கலைபோல் காமன்தன் வில்லங்கம் 16

12. அற்புதனை, அமுதை :

அற்பதனை, அமுதை, அணியரங்கத் துயில்வானை

வெற்பது மேனின்று வென்றிடுஞ்சீர் வேங்கடத்தான் 16

13. தாயுமானனவன் :

.................. வளரெழியின் திருமகளும்

தூய்மை நலந்தருவான் துலங்குதுமென் றொளிமார்பில்

தாய்மை யவளருளால் தாங்குதுமெக் குற்றமதும் 17

14. பக்தர் வேடமும் பயனளிக்கும் :

சீரி லுளத்தவரும் செல்வனவன் வேடங்கொளில்

யாரும் பணிந்திடுவார் என்றென்று மொழிச்செயலில் 31

15. வறுமையும் சிறப்பே :

ஓயும் பொழுதுலகில் உடைமையுணர் வொழிந்திடவே

பாயும் உள்ளமதில் பங்கயன்தன் பாங்கெழில்கள்

தூய்மை நல்குரவைத் துதித்திடும்நல் லுளம்பூக்கும் 37

16. உயிர்பெறும் சுதந்திரம் :

நோய்நல் குரவதுவும் நொம்பலங்கள் செய்கணமே

தோயு முடற்றனியால் தோன்றிடுவார் சுதந்திரமாம் 44

17. முறைதவிர்க்கான் சடவிதியும் :

குறியொன் றில்லார்க் கொற்றமுடன் உயர்ஆணை

பெறுமா றேதுணராப் பெற்றியதால் பெருமிறைவன்

முறியான் மொய்ம்பவைகள் முறைதவிர்க்கான் சடவிதியும் 41

18. அவதார மகிமை :

ஆலின் துயின்றான்மேல் அடல்வலத்தோன் கேசவன்தான்

பாலின் கருணையவன் பரம்பொருளாம் நாரணனே

மேலில் மாதவன்கோ விந்தன்விட்ணு மதுசூதன்

தோல்வி மாவலிபாற் றொலைவில் விக் ரமன்வாமன்

..........................................................................

ஓரம் புழியோங்கும் உரனோடு மரமேழும்

தீரும் வகைசெய்தான் திகழ்ந்திடுமேற் சிரீதரனே

போரைம் புலன்தீர்ப்பான் புகழிருடி கேசனனே

வலைவாழ் பற்றதனால் வாங்குடலின் உரன்மிகுமால்
கலைபாற் பற்றதனால் கவினுளத்தின் தரமிகுமால்
உலையாப் பாசமதால் உடல்எழிலும் முகமிகுமால்
நிலையாழ் நெடுமதியால் நியதியதன் உரன்மிகுமால்
சலியாப் பற்றுழைப்பால் சஞ்சலஞ்செய் நிதிமிகுமால்
வலியால் விளையாத வலன்பற்றுக் கிலையாமால் 42

28. இறைவன் எழிலுருவம் :
தையல் மலர்மார்பம் தளிர்விழியில் அருளமுதம்
கையில் ஒளிச்சங்கம் கதிர்த்திகிரி எழிலுரனாம்
மெய்யின் முடித்துளவம் மிளிர்ந்திடுமாற் சாரங்கம் 57

முடிவுரை :

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமாநுசக் கவிராயர், சங்கத் தமிழ்ப் பாணியில், ஆண்டாளின் திருப்பாவையை ஒட்டி எழுதியுள்ள நூல் திருமால் வழி. இந்நூலின் சிறப்புகளை, சொல்லாக்கம், சொல்லாட்சி, சந்தப் பாடல்கள் ஆகியவற்றால் பார்த்தோம். இதில் பொதிந்துள்ள தத்துவங்கள், கருத்துக்கள், வழிகாட்டல்கள் பற்றியும் சிறிது பார்த்தோம். விரிவான ஆய்வுக்கும், ஆன்மிக வாழ்வு முன்னேற்றத்திற்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் ஆன பல அரிய செய்திகளைக் கண்டோம். இதன் மூல நூல் விமரிசனத்தில், "...... this book is a distinct contribution in the Stock of Vaishnavite Lore on religion and pHilosophy and Practical gudie to be Sadhakas who aspire for union with the Lord" என்று இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிக்கை கூறியுள்ளது.

திருமால் வழியை உலகத்திற்கு அடையாளம் காட்டும் இந்த வாய்ப்பின் வாயிலாக இக்கட்டுரை கவித்தென்றல் இராமாநுசக் கவிராயர் என்ற ஒரு பெரிய தமிழ்ச் சுரங்கத்தைத் தோண்டித் தந்திருக்கிறது. இவருடைய மற்ற நூல்களையும் தக்கமுறையில் ஆய்வுக்கு உட்படுத்த தமிழ்கூறு நல்லுலகத்தில், தமிழறிஞர்கள், ஆர்வலர்கள் பார்வைக்குக் கொணர வேண்டும் என்பது மாநிலத் தமிழ்ச் சங்கத்தார் மற்றும் தமிழ்ச் சான்றோர்களின் வேண்டுகோளாகும்.

# 10. இராமானுசக் கவிராயரின் ஞானத்தேடல்

திருமிகு சீ.இராசா முகம்மது,
503, நடுப்பேட்டைப் பாவடித் தெரு,
தென்காசி – 627811.

அன்னைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஆழ்ந்த தேர்ச்சியுடைய ஐயா தி.கா.இராமானுசக் கவிராயர் வாழ்வியல் பாடல்கள் எனும் தலைப்பில் ஆங்கிலத்தில் 58 கவிதைகளை ஒரு தொகுப்பாக வெளியிட்டுள்ளார். வாழ்வின் நுட்பமான உணர்வுகளைத் தம் பட்டறிவாலும் நுண்ணுணர்வாலும் தோய்ந்து ஆய்ந்து துய்த்து அவர் எழுதியுள்ள இந்தப்பாடல்களில், ஆங்கிலச் சந்தங்களும் சந்தனச் சிந்தனைகளும் நம்மை மயக்கி, நம் உணர்வுகளை அவர் நினைக்கும் திசையில் இட்டுச் சென்று ஒரு புதிய உலகைக் காட்டுகின்றன. சுகமும் வலியும் நிறைந்த அந்தப்பாடுகளை அவர் பாடும்போது நுண்ணுயிர் முதல் மனிதன் வரை வாழ்வின் பல பரிமாணங்களை நம் கட்புலனுக்குக் காட்சியாக்கிடும் மாட்சியால் நம்மை மகிழச் செய்கிறார்.

இதயத்தை வருடி நம்முள் கவிதையின்பத்தைப் புகுத்தி அவர் காட்டும் மாய விநோதங்கள் வாழ்வின் பல அற்புதங்களை நமக்கு உணர்த்துகின்றன. இருப்பினும் சாறுபிழிந்து தம் கவிதைகளை அமரத்துவம் பெறச்செய்யும் கவிராயரின் வாழ்வுபற்றிய மெய்யுணர்வு நம்மை ஆனந்தக்கடலில் ஆழ்த்துகின்றது.

கவிதையின் அற்புதங்களை அவர் தொட்டு, நம் எண்ணத்தில் வண்ணமாகத் தீட்டிக்காட்டும் ஓவியங்கள் மிக உன்னதமானவை. கவிதையில் வாழ்வின் கற்பனைகளையும் நுட்ப உணர்வுகளையும் அவர் படம்பிடித்துக் காட்டியுள்ளார். தவறுகளையும் பிழைகளையும் காண்பிப்பதுடன் நில்லாது, தன் செயல்களை அவர் பாராட்டும் பாங்கும் பாலைப்பருகி நீரை விட்டுவிடும் அன்னப்பறவையாக விளங்கும் கவிராயரின் கவித்துவமும் நம்மை வியக்கச் செய்கின்றன.

இயற்கை, கலை, மனிதர்கள், நாட்டுப்பற்று, காதல், விழுமியங்கள், வாழ்வின் அழகியல், மரணத்தின் வனப்பு ஆகியவற்றை ஆங்கிலத்தில்

58 தலைப்புகளில் மிக நேர்த்தியாகப் பாடி நம்மைப் பரவசத்தில் ஆழ்த்தியிருக்கிறார். நம்பிக்கை என்ற கவிதையை அவர் தொடங்கும்போதே மனிதன் உண்மையைத் தேடிக் கற்காலம் தொடங்கித் தற்காலம் வரை பயணித்துள்ளதைப்பாடிச் செல்கிறார்.

முன்னேற்றம், பின்னடைவு ஆகிய இரு எல்லைகளுக்குள் சட்டம் எப்படிக் குற்றப்படுத்தியும் தற்காத்தும் நிற்கிறதோ, அப்படி அவர் கவிதை ஒளியின் மாண்பும் இருளின் அழகை உணர்த்துகின்றது.

நம்பிக்கை அறிவை நாடிச்செல்வதற்கு மாறாக மனிதனின் பலவீனமாகவும் அமைந்துவிடுகிறது. மனிதனால் பகிர்ந்து கொள்ளப்படும் நேயம் அவனை அமரத்துவம் பெறச் செய்கிறது. வலிகளுக்கும் சுகங்களுக்கும் இந்த நம்பிக்கையே காரணமாகி அவனைக் கலக்கம் பெறச் செய்கிறது.

உலகில் ஒளிரும் கதிர்களாய் உடலின் சதையும் உயிரின் நரம்பும் ஆடும் கூத்தினை அவர் அம்பலப்படுத்தி நம்மை அதிசயிக்கச் செய்கிறார். கவிராயரின் தத்துவ விளக்கங்களை அவர் பாடல்கள் நமக்குணர்த்தி நம்மைப் பரவசப்படுத்துகின்றன. நேயம் – கடவுள் மீதான நேயம் – நம் ஆன்மாவைச் சுகப்படுத்துகிறது – சுத்தப்படுத்துகிறது. இறுதியில் அந்த ஆன்மநேயம் மட்டுமே நம்பிக்கை சார்ந்து நம்மை அமரத்துவத்திற்கு ஆற்றுப்படுத்துகின்றது.

தண்பொருநை ஆறு நம் பயிர்களையும் உயிர்களையும் வளர்க்கிறது. காலவோட்டத்தில் கலந்து அதன் பழமை நம்மை நம் வாழ்வை எப்படி எல்லாம் நனைக்கிறது என அவர் விளக்குகிறார்.

கற்கண்டின் இனிப்பாய் பொருநை ஆறு பல வண்ணங்களைச் சேர்க்கிறது என அவர் போற்றுகிறார். பல காதல் ஏக்கங்களையும் இயக்கங்களையும் பொருநை தன்னுள் கரைத்துக் கொண்டு ஆன்மாவையும் இதயத்துடிப்பையும் வருடிச் செல்வதை அவர் நம் இதயத்தில் பதிய வைக்கிறார்.

மாலை மந்தகாசத் தென்றலையும் இரவின் நிலவொளியையும் பாடி அவை பொருநையின் மரங்களையும், பாறைகளையும் தங்க மணற்பரப்பையும் எழில் கொஞ்சச் செய்வதை அவர் பாடும் நேர்த்தி, பரவசம் கொள்ளச் செய்கிறது.

மாறும் சட்டங்களைப் போல் அன்றி மாறாத அதன் இயல்பு மனிதனின் உடலையும் உள்ளத்தையும் தடவிக் கொடுத்துத் தவிப்பையும் தாகத்தையும் தணிக்கிறது. அறிவைப்பற்றி மிகத் தெளிவான நுட்பங்களைத் தம் கவிதையில் அவர் கூறும் நயம் பாராட்டத்தக்கது. இரவின் எண்ணெயை எடுத்து கொண்டு அல்லல் படாமல் வைகறையின் விடியல் தரும் இதமான சுகம் உழைப்பை ஊக்கப்படுத்தி உற்சாகம் சேர்ப்பதைப் புலப்படுத்துகின்றார். பழமையை அழித்துப் புதுமை நாளும் நாளும் வெற்றி கொள்வதை, அவர்சட்ட மதிநுட்பம் வாழ்க்கையின் சட்டத்தின் இயல்பை நமக்குக் காட்டுகின்றது. கலை, அறிவியல் ஆகிய எல்லாவற்றையும் அறியும்போது இன்னும் முழுமையான அளவில் நாளும் நாளும் புதிய பரிணாமங்கள் பெற்று மிளிர்வதையும் வாழ்வை ஒளிரச் செய்வதையும் அவர்பாடும் அழகியல் நம்மை ஆனந்தம் கொள்ளச் செய்கிறது. ஒருவனின் சுயமான கவிதை அவனுக்கு இனிக்கிறது. வாழ்வின் ஒவ்வொரு கமுக்கத்தையும் உணர்வுத் திரையில் படமாக்கும் உண்மை நம் பகுத்தறிவுக்குப் புலப்படாமல் ஒளிந்து கண்ணாமூச்சி காட்டுவதை அவர் பாடும் நயம் பாராட்டிற்குரியது. வாழ்வின் எழில் வடிவமும் அழிவதில்லை, நேயமும் வீணாவதில்லை. உண்மையோ, பொய்மையோ, நன்மையோ தீமையோ எல்லாம் வாழ்வில் சுவையை வாய்க்கச் செய்கின்றன.

பிரிந்த நேயம் அல்லது காதலின் சுவடுகள் நம் இதயத்தில் மாறாத சோகத்துடன் விதியின் வலிமையையும் மனித பலவீனத்தையும் உணர்த்தி நிற்கின்றன. அவளை நினைத்து அவன் விடும் கண்ணீர் காயும்போது அவன் தன்னையிழந்து துயில்கிறான். வசந்தம் போலவே பனியும் குளிரும் கூடமாய்ந்து மறைந்து மீண்டும் துளிர்ந்து வருகின்ற இயற்கை விளையாட்டை அவர் எழிலுறக்காட்டுகிறார்.

படைப்புகளில் மனிதனைப் பற்றி **'Man in Creation'** என்ற பாடலில் "Man has mind but cannot find the truth in life with eyes he is blind strange is he himself" என்று அவர் பாடும் அழகு நம்மை வியப்புக்குள்ளாக்குகிறது. ஆன்மாவின் சுவை தேடல் நம் உடலில் உறைந்திருப்பதையும் அந்தச் சுவை தேடல் மனிதனைக் கடும் முயற்சிகளில் ஈடுபடுத்துவதையும் அவர் அழகுறப்பாடுகிறார். காமம்

சதையின் தேடலாகவும் காதல் ஆன்மாவின் தேடலாகவும் விளங்குவதை அவர் நுட்பமாகப் பாடுகின்றார்.

மனிதன் தன் கண்களால் காணமுடியாத அளவு வாழ்வின் உண்மை ஒளிந்து கிடப்பதையும், குருடனாக அவன் எலும்பும் சதையும் கலந்த உடம்பையே தான் என்று மயங்கிக் கிடப்பதையும் அழகுறப்பாடுகிறார்.

Man has mind but cannot find
The truth in life with eyes he is blind
Stange is  he himself disowns
And thinks himself as flesh and bones

விழுமியம் மட்டுமே மனிதனின் குறிக்கோள் ஆக முடியும். அறிவு எந்த ஒன்றையும் முடிவாக வெளிப்படுத்த முடிவதில்லை. இயற்கை ஒளியின் முன் உலகின் இன்பங்கள் வேடிக்கை விளையாட்டாகக் கரைந்து மறைந்து விடுகின்றன என்கிறார். தத்துவார்த்த விளக்கங்களான அவர் கவிதை, வார்த்தைகளைத் தாண்டி நம் உள்ளத்தை ஊடுருவிச் செல்கின்றது.

மனிதனால் கடவுள் மகிமையுறுவதாகக் காணும் கவிஞர், திட்டமிடுவதைச் செயல்படுத்தும் வித்தையால் மனிதன் மற்ற உயிர்களைவிட மேம்பட்டு இறைவனின் மகிமைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதை நயமுறச் சுட்டிக் காட்டுகிறார். ஒரு மாலை என்னும் கவிதையில், மாலையில் மேற்கு ஒளிக்கதிர்களால் செவ்வைரக்குழம்பாகச் சிவப்பதையும், கூடு திரும்பும் பறவைகளின் அணிவகுப்பால் வானம் அழகுறுவதையும் அருமையாகப் பாடுகிறார்.

உண்மையின் வெற்றிபோல், அந்தியின் இருட்டில், ஆயிரம் நட்சத்திரங்கள் சொலிப்பதைக் கனவில் காணும் தங்கத்தின் காட்சியாகக் கவிதையாற்றியுள்ளார். தொடுவானத்தின் அருகில் இருட்டை வரவேற்கும் வௌவால்களும் ஆந்தைகளும் பாடுவதையும் மிதமான தென்றலில் மலர்களின் மணம் மிதந்து வந்து நம் நாசியை அடைவதையும் கவிராயர் பாடும் அழகு அவரது இயற்கை ஈடுபாட்டைக் காட்டுகிறது.

நுண்ணுயிர் முதல் மனிதன் வரை சதை ஒன்றே என்று கூறுவதுடன் ஆனால் மனவியலின் உந்துதலில் அறிஞன் ஆற்றல்

செயல் அற்றுப்போவதை அவர் நுட்பமாகப் பாடுகின்றார். வானவில்லின் பொழிவு போல் உண்மைக்காதலும் அழகின்மேல் படர்வதையும், காமத்தின் சுவை காதை மங்கச் செய்வதையும் நேர்த்தியுடன் பாடுகிறார். வாழ்வின் பேறாகச் சில நேரங்களில் கண்சிமிட்டும் மங்கையின் புன்னகையும் மார்பின் கவர்ச்சியும் கன்னிமையின் பெருமிதமும் சுவர்க்கம் போல் கவர்ந்து இறுதியில் நரக நெருப்பாய்த் துரோகத்தின் விளிம்பில் தகிப்பதையும் கவிராயரின் கவிதை அழகியல் உணர்வோடு பாடுகிறது. உலகியலில் காதல் வானவில் போல் மறைந்து கரைய, குழிவிழந்த, கண்களின் கண்ணீரும், வெளுத்த இதழ்களின் புன்னகையும் மாய்ந்து மறைந்து போக, அழகின் சிரிப்பு கனவாகிவிடக் காதல் எதுவும் மிஞ்சி நிற்காமல் அழிவதையும் அவர் சித்திரிக்கிறார்.

ஆன்மாவின் மரணத்தில் அவள் மணம் புரிந்து கைகளில் குழந்தையுடன் வரும்போது வார்த்தைகள் ஏதுமின்றிக் கன்னிப் பருவத் தவறுக்கு மன்னிப்புக்கோரும் உணர்வுடன் மறைகிறாள். காமம் உடல் சார்ந்தது. காதல் மனம் சார்ந்தது. அது அழியாது! Lust is flesh, Love is soul that never dies of dream things foul . வாழும் காதல் கனவிலும் பிழை செய்யாது என்கிறார்.

உண்மைக்குப் போராடுவதில் மரணமும் மகிழ்ச்சி தருவது; பாடுவதும் கவர்ச்சியானது. அது சதையின் தேடலாக அன்றி ஆன்மாவின் தேடலாக அமைவதைப் பாடுகிறார். நாம் மடிந்தாலும் வாழ்ந்தாலும் அதுபற்றிக் கவலைப்படாமல் இதயத்தின் வலியுடன் காதலின் உறுதியுடன் போராடுங்கால் மரணமும் மண்டியிட்டுப்பணியும் எனப்பாடி மகிழ்கிறார். வழக்கறிஞரான கவிராயமும் தமிழைத் தம் கவிதைகளாலும் அழகுறச் செய்தது போல் ஆங்கிலக் கவிதையிலும் நம்மைவியக்க வைக்கிறார்.

வாழ்வியலின் அழகை அவர் பாடிக் காட்டும் முறை வாசகனின் மனத்தை அவர் நினைத்த திசையில் நேர்த்தியாக இட்டுச் செல்கிறது. குழந்தைப் பருவம் முதல் மனிதனாகும் வரை பல்வேறு பருவ நிலைகளிலும் உருவ உடல் மாற்றங்கள் போல், உள்ளத்தளவிலும் அடையும் மாற்றங்களை அவர் ஆற்றலுடன் பாடியுள்ளார்.

காதல் சுகத்தையும் வலியையும் கலந்து தரும் அற்புதத்தையும் ஒளியும் இருளும் ஆகக் காதல் கண்ணாமூச்சி காட்டுவதையும் உடலில்

மலர்ந்து உள்ளத்தில் மணம் சேர்ப்பதையும் பின் உடலால் மறைந்தும் ஆன்மாவில் நிலைப்பதையும் அவர் பாடும் தன்மைய வாழ்வின் முதிர்ச்சியில் அவர் பார்வை எவ்வளவு நேர்த்தியாக அமைந்துள்ளது எனக் காட்டுகின்றது. காதல் பிறப்பதில்லை அது உண்டாக்கப்படுகிறது. சதையின் கவர்ச்சியில் தோன்றி ஆன்மாவில் நிரம்பிப் பின் உடல் கவர்ச்சிகளைத் தாண்டி மனத்தின் ஆழத்தில் அமரத்துவம் பெறும் அழகைக் கவிராயர் அருமையாகப் பாடுகிறார்.

சரியா தவறா என்று சொல்ல முடியாத தன்மையில் நிகழ் காலத்தின் சுகமாக அரும்பி மனத்தினை முற்றும் ஆட்சி செய்யும் வலிமையுற்றுச் சற்றும் எதிர்பாராத முடிவுகளை அடையும்போது காதல் உண்மையாக இருப்பின் அது வாழ்வின் வரம்புகளையும் தகர்த்து அமரத்துவம் பெறும் அழகைப்பாடுகிறார்.

வாழ்க்கையின் பாடல் வெறும் கவிதைத் தொகுதி என்ற அளவில் இல்லாமல் மதி நுட்பம் நிறைந்த கவிராயரின் தத்துவப் பார்வையால் தன்னிகரற்ற தன்மையுடன் விளங்குகின்றது. கவிதை இன்பத்துடன் நில்லாது வாழ்வு குறித்த உண்மைகளைக் கலை நயத்துடன் வெளிப்படுத்தி மகிழச் செய்கிறது. அன்னைத் தமிழ் அழகின் உணர்வை ஆங்கிலத்தில் வெளிப்படுத்திக் கற்போரை அற்புத உணர்வுகளுக்கு ஆட்படுத்துகின்றது. ஆம்; இராமாநுசக் கவிராயரின் வாழ்வியல் பாடல், ஞானத்தேடலாக நம் உள்ளத்தில் களிநடனம் புரிகின்றது.

# 11. இராமாநுசக் கவிராயரின் நாடகத்திறன்

திருமிகு சு.இரத்தின குமார்
தலைமை ஆசிரியர்,
அரசு மேனிலைப்பள்ளி, இட்டமொழி

**முகவுரை :**

தமிழுக்கு முத்தமிழ் என்று பெயர். நாடகத்தமிழ் என்ற வகைப்பாடு சங்க இலக்கியக் காலத்திலே இருந்தது. நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர் என்று மணிமேகலை கூறுகிறது. சிலப்பதிகாரம் ஒரு முத்தமிழ்க் காப்பியமாக இன்றும் விளங்குகிறது.

ஐரோப்பியர் இந்தியாவிற்கு வருகை தந்த பின்னர் சேக்குவீயர், பெர்னாட்சா போன்ற ஆசிரியர்கள் இயற்றிய நாடகங்களை அடியொற்றி ஐந்து அங்க நாடகங்களும் தமிழ் இலக்கியத்திலும் தோன்றின. பேராசிரியர் சுந்தரனார் மனோன்மணியம் என்னும் நாடக நூலை ஐந்து அங்க நாடகமாக இயற்றினார். அது ஆங்கில ஆசிரியர் லிட்டன்பிரபு இயற்றிய சுருங்கை வழி (The Secret Way) என்ற நூலைத் தழுவியது.

தமிழ்ப் பேரறிஞர் தி.க.இராமானுச கவிராசர், மகாத்மா காந்தி என்ற ஆங்கில நாடக நூலை இயற்றியுள்ளார். இதுவும் ஆங்கில இலக்கிய நாடகத்தின் அமைப்பை தழுவி உள்ளது. அவர் ஒரு சிறந்த நாடகப் புலம பெற்ற நல்லறிஞர் என்று நிறுவுவதே இவ்வுரையின் நோக்கம் ஆகும்.

## சிறந்த நாடகக் கூறுகள், மகாத்மா என்ற நாடக நூலில் பொருந்தியுள்ளன :

**நாடகக்கூறுகள்:**

1. பொதுவாக நாடகம் நல்ல கதை ஒன்றை அடித்தளமாகக் கொண்டு இருக்க வேண்டும். அக்கதை நடவாத நிகழ்ச்சியாகவோ, நடந்த நிகழ்ச்சியாகவோ இருக்கலாம்.
2. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும் தருவதாக நாடகம் அமைய வேண்டும்.

3. தன்னேரில்லா தலைவன் ஒருவனை நாடகம் பெற்றிருக்க வேண்டும்.
4. ஒவ்வொரு நாடகமும் சில அங்கங்களாகவும் பல களங்களாகவும் பகுக்கப் பெற்றிருக்க வேண்டும்.
5. நாடகத்தில் கதை வளர்ச்சி பின் கண்ட ஐந்து நிலைகளைக் கொண்டிருக்க வேண்டும், Opening Scene (முகம்), Growth (பிரதிமுகம்), Climax (கருப்பம்), Decline (விளைவு), Fall (துய்த்தல்)
6. நாடகத்தின் முன்னுரை எனப்படும் Prologue என்ற அமைப்பும் Epilogue என்ற பின்னுரை அமைப்பும் வேண்டும்.
7. நாடகத்தின் இடப்பொருத்தம், காலப்பொருத்தம், செயல்பொருத்தம் ஆகிய மூவகைப் பொருத்தம் இருத்தல் வேண்டும்,
8. நாடக நடை செய்யுள் நடையாகவோ, உரை நடையாகவோ இருக்கலாம்.
9. நாடகக் கதை இன்பியலாகவோ துன்பியலாகவோ முடிவுறலாம்.
10. நாடகத்தில் கவிச் கூற்றுக்கு இடமே இல்லை. உறுப்பினர்களின் உரையாடல்களின் மூலம்தான் நாடகம் நடக்க வேண்டும்.

**மகாத்மா காந்தி நூலில் பொருந்திய விதம் :**

1. இந்திய தேசத் தந்தை சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட போது நடந்த நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு நாடகம் அமைத்துள்ளார்.
2. இந்த நாடகத்தில் சத்தியாகிரகம், அகிம்சை, பற்றற்ற நிலை, அன்பு, கடவுள் பக்தி, கருமவினைக் கோட்பாடு வலியுறுத்தப்பட்டுள்ளது. இறுதியில் தருமம் வெற்றி பெறுவதாகக் காட்டப்பட்டுள்ளது.
3. கதைத் தலைவனாக மகாத்மா காந்தி திகழ்கிறார். Pure in heart, and sure in mind in Truth and love, he God did find. என்று நூலின் முகப்புப் பகுதியிலேயே ஆசிரியர் உரைக்கின்றார். அன்பை அடிப்படையாகக் கொண்ட தாய்நாட்டினை அடிமைத்தளையினின்று விடுவிக்க முற்படும் தலைவனைக் கதைத் தலைவனாகக் கொண்டுள்ளார்.
4. இந்த நூலில் ஐந்து அங்கங்கள் உள்ளன. ஒவ்வொரு அங்கத்திற்கும் ஐந்து களங்கள் வீதம் 25 களங்கள் உள்ளன.

5. மகாத்மா காந்தி இளம்பருவம் முதல் அவர் கோட்சேவால் சுட்டுக் கொல்லப்படும் வரை நிகழ்ச்சிகள் பகுக்கப்பெற்று நாடகம் நன்னிலையில் வளர்ந்து செல்கிறது.
6. ஆசிரியர் தன்னுடைய Preface என்ற அமைப்பில் தருமத்தின் மூலம் மகாத்மா வெற்றி சூடிய நிலைமையை "His life had been a great saga of perfection" என்று கூறுகிறார். பின்னுரையாக ஒரு கவிதையில் Thus it ends a holy saint That used no sword for the sake of God" என்று புனித வாழ்வு படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.
7. ஒரு இடத்தில் நடக்கும் செய்திகள் யாவற்றையும் ஒருபடித்தாக ஒருங்கே கூறுதலே **இடப்பொருத்தம்** ஆகும். இந்நாடகம் போர்பந்தர், தென்னாப்பிரிக்கா, இலாகூர், பஞ்சாபு, தண்டி, தமிழ்நாடு, ஆறுமுகநேரி போன்ற இடங்களில் நடப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. வரலாற்று நிகழ்ச்சி இடங்களே இடம் பெற்றுள்ளன.

   **காலப்பொருத்தம் :** நடுவில் பயனில்லாத தடைகளை ஏற்படுத்தாது கதையினை நன்முறையில் சொல்வது, இந்நூலில் பயனில்லாத நிகழ்ச்சிகள் இன்றி மகாத்மா காந்தி சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட உண்மை நிகழ்ச்சிகளே காட்டப்பட்டுள்ளன. எனவே எந்த ஒரு வெறுப்பும் ஏற்படவில்லை.

   **செயல் பொருத்தம் :** சிற்றாறுகள் பல பேரியாற்றுடன் கலந்து ஒரு முகமாக அடங்கிச் சேருவதுபோல, நாடகக் கதையின் பல பிரிவுகளும் உயர்நிலைக் கதையுடன் தொடர்ச்சியாக ஒத்துச் செல்வது செயல்பொருத்தம் ஆகும். அடிமை இந்தியா ஓர் உன்னதத் தலைவனின் தலைமையை ஏற்று, சுதந்திரம் பெற்றுக் கொள்ளும் போராட்டப் பொருளே கதையின் போக்காக உள்ளதால் செயற்பொருத்தம் நன்கு உள்ளது.
8. நாடகம் உரைநடையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு அங்கத்திற்கும் ஒரு கவிதை உள்ளது எனலாம். அக்கவிதைகள் மிக ஆழ்ந்த ஆன்ம அன்பு கடவுள் கோட்பாடு அகிம்சையைப் போற்றி மதிப்பதாக உள்ளது. நூலின் கடைசியாக உள்ள கவிதை மிகவும் உயிரோட்டம்

மிக்கதாக உள்ளது. "Thus it ends a hoiy saint, A murderous hand an eternal taint, A land of peace, a culture broad, That used no sword for the sake of God" என்ற தொடர்கள் உள்ளத்தை உருக்குகின்றன. கவிராயர் உரைநடையில் தெரிவிக்கும் கருத்துக்களை விட செய்யுள் நடையிலே அதிகமான ஆழமான கருத்துக்களைத்தெரிவிக்கின்றார். ஏனெனில் தமிழ்க் கவித்தென்றல் அல்லவா. அவர் சிறந்த ஆங்கிலக் கவிஞராகவும் விளங்குகிறார்.

9. மகாத்மா காந்தி தன் இலட்சியமான இந்திய விடுதலையைப் பெறுகிறார். மகிழ்ச்சி ஏற்படுகிறது. கடைசிக் களத்தில் அவர் கோட்சேவால் சுட்டுக் கொல்லப்படுகிறார். மௌண்டு பேட்டனின் மனைவி "Ah, he lived like christ and died like him on Friday itself" என்று கூறுவது நம் நெஞ்சை உருக்குகிறது. கண்களில் கண்ணீர் பெருகுகிறது. எனவே இது துன்பியல் நாடகம் ஆகும்.

10. கவிராயர் தன் கருத்துக்களைக் கூற வரும்போது witches, Subtle beings ஆகிய உரையாடல் மூலமே தன் கருத்துக்களைத் தெரிவிக்கிறார்.

## நாடகத்தின் வளர்ச்சி நிலை :

நாடகத்தின் உயிர்நாடியே அதன் வளர்ச்சியாகும். கவிராயர் நாடகக் கதையை எப்படி வளர்த்துச் செல்கிறார் என இங்கே காண்போம்.

### 1. OPENING SCENE (முதல் அங்கம்) - முகம் :

பண்படுத்தப்பட்ட நிலத்தின் அடியில் விதைக்கப்பட்ட விதையில் இருந்து இலேசான முளை தோன்றுவது போன்றது முகம் ஆகும்.

எடுத்துரை கதைதான் இனிமையில் தொடங்கி
உழவினால் சமைந்த பூமியுள் இடுவதை
முளைத்துத் தோன்றுதல் போல்வது முகமே

என்று முகத்திற்குரிய இலக்கணத்தை நாடகவியலில் கூறுகிறார் பரிதிமாற்கலைஞர் முதல் அங்கத்தில் முதற் காட்சியிலே "HISTORIAN" என்ற கதை மாந்தர் மூலம்

A nation's wil it never dies
Like wave that sinks again to rise

என்ற அடிகள் பாரத நாட்டின் சுதந்திரப்போராட்டம் பற்றியது நாடகக்·கரு என்பது தெரிகின்றது. கதை மாந்தரை அறிமுகப்படுத்தும்போதே அவர் கதையின் மையப்பகுதியிலேயோ, இறுதியிலேயோ அவர் நிலை என்ன ஆகப்போகிறது என்பதை நாடக ஆசிரியர் உரைத்து விடுவார்.

சிலப்பதிகாரத்தின் முதல் காட்சியில் கோவலனைப் பற்றி இளங்கோவடிகள் கூறும்போது

மண்தேய்த்த புகழினான் மதிமுகமடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டி
கண்டேத்தும் செவ்வேள் என்று கூறுவார்.

மண்தேய்த்த என்ற அடியில் கோவலன் மண்ணில் படும் அவலம் சுட்டிக்காட்டப்படுவதாக இலக்கிய அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். மகாத்மா காந்தி வெற்றிவேல் வெற்றி பெறப்போகிறார் என்பதையும், அவர் நல்லொழுக்க நாயகன் என்பதையும், அவர் ஒரு வெற்றி வீரர் என்பதையும் ஆசிரியர் பின்வரும் தொடர்களில் காட்டுகிறார்.

"He comes of a family traditionally renouned for devotion
and chastity
His wife is a mode of Hindu chastity
I am an instrument in the hands of God"

கடவுள் கிருபையால் தருமம் வென்று சுதந்திரம் பெறும் என்ற குறிப்புப் பொருளை முதல் அங்கத்தில் தெள்ளத் தெளிவாகக் காட்டியுள்ளார்.

## உ. GROWTH (இரண்டாம் அங்கம்) - பிரதி முகம் :

முளையானது இலை தழைகளோடு வளர்ந்து நாற்றாக நிற்பது போன்றது பிரதி முகம் ஆகும்.

முளைத்தல் முதலா இலையும் பெற்று
நாற்றென நிற்பது பிரதி முகமே

என்று இதன் இலக்கணத்தைப் பரிதிமாற் கலைஞர் கூறுகின்றார்.

மகாத்மா காந்தி நாடகத்தில் இரண்டாம் அங்கம் முதல் காட்சியில் தான் மகாத்மாவாக காந்தி பேசுவதாகக் காட்சி தரப்பட்டுள்ளது.

"We have assembled here for opposing the Asiatic Bill
that requires every Asiatic to register himself and permit of
residence.

காந்தி கடைசி வரை இயேசு கிறிஸ்துவைப் போலவே வாழப் போகிறார் என்பதை

"Perhaps Jesus must have been like him"

என்ற அடிகள் அவருடைய நிலையை விளக்குகின்றன.

**3. CLIMAX (மூன்றாம் அங்கம்) - கருப்பம் :**

களை பல தம்மைச் சூழ, நெற்பயிர் வளர்ந்து பால் கொள்வது போன்றது கருப்பம் ஆகும். இதைக்குறித்து,

நாற்று முதலாக் கருவு முதிர்ந்துழிக்
களைபல செயிறக் கட்டளை ஒழிதலும்
பொருள்நனி பொதிந்து நிற்பது போல்வது
கருப்பம் என்னக் கழறினர் பெரியோர்

என்கிறது நாடகவியல்.

இந்தக் கருப்பத்தில் தான் நாடகம் உச்சநிலையில் இயங்கிக் கொண்டிருக்கும்.

கோபாலகிருட்டிண கோகுகலே என்பவரையே காந்தி தன் குருநாதராகக் கொள்கிறார். தென்னாப்பிரிக்காவில் அவர் பெற்ற வெற்றி இங்கே முன்னோடியாக அமையும் என்ற கருத்து உரைக்கப்படுகிறது.

His struggle is like "Thandakaranya in Ramanyana where karan was slaughtered as Fore Runners of Ravana's doom.

இதற்கிடையில் சாலியானா வாலாபாக்கு படுகொலை நடைபெறுகிறது. இதுவே உச்ச நிலையாகக் காட்டப்படுகிறது.

7th Witch கூறுவதாவது

It is not Gandhi but Dyer who has given swaraj (p.68)

மோதிலால் நேரு

My Ananda Bhavan is hereafter yours for housing the congress (p.72)

என்று கூறுகிறார். காந்தி அடிகள் நிச்சயம் சுதந்திரம் பெற்று விடுவார்.

Our bullets on pierce a distance of ten miles but his chakra has struck our Monchester 6000 miles away. (pp.77-78)

என்று Watts என்னும் கதைமாந்தர் கூறும்பொழுது நாடகம் உச்சக்கட்டத்தை அடைவது தெள்ளத் தெளிவாகக் காட்டப்படுகிறது.

**4. DECLINE (நான்காம் அங்கம்) - விளைவு :**

முற்றி நின்ற கதிர்கள் சிறப்பாக வளர்ந்து மிளிர்தலும், இலங்கும் கதிர்களைக் கடிக்கும் விலங்குகளை ஓட்டி, துரத்தியபின் கதிர்கள் நன்றாகப் பழுத்துத் தலை சாய்தலும் போன்றது விளைவு ஆகும்.

முற்றி நின்ற கதிர்திரண் டிடுதலும்
இலங்கும் கதிர்கறி விலங்கு கடிந்தபின்
காய்த்துத் தாழ்வது போல்வது விளைவு.

என்கின்றது நாடகவியல். கதை சரிந்து போகிறது அல்லது கதைத் தலைவனுக்குச் சோதனை ஏற்படுகிறது. காந்தி அடிகள் கைது செய்யப்பட்டுள்ளார். நீதிபதி தீர்ப்பு கூறும்போது

My position is like the Governor Pilate who washed hi hands beofe the crucification of Lord Jesus. I convict you for sedition (p.81)

என்று தீர்ப்பு அளிக்கிறார். காந்தியார் தண்டியாத்திரை மேற்கொள்கிறார்.

"Todya is a day when I begin to disobey a law,
that I consider unjust". (p.93)

என்று கூறுகிறார்.

ஆறுமுகநேரியில் நடந்த உப்பு சத்தியாகிரகத்தில் ஒரு போராட்டக்காரரால் ஆலை நிருவாகி கொல்லப்படுகிறார். அங்குள்ள காவல்துறை நிருவாகி கூறுவதாவது

He is there in Dandi in prayers but his word has
wrought the death of an unfortunate officer (p.96)

இதை கேள்வியுற்ற காந்திஜி வருத்தமடைகிறார். இவ்வாறு நான்காம் அங்கத்தில் அவரது போரட்ட நிலைக்கு சோதனை வருகிறது. நாடகக் கலை நிலையில் சரிவு ஏற்படுகிறது.

**5. FALL (ஐந்தாவது அங்கம்) - துய்த்தல் :**

காய்த்த கதிரினை அறுவடை செய்து அடித்துத் தூற்றி, அப்பயனை உண்டு மகிழ்ச்சியடைவதைப்போன்றது துய்த்தல் ஆகும்.

காய்த்த கதிரினை அறுத்து நற்பொலி
செய்து கொண்டுபோய் உண்டு மகிழ்வது
போல்வது துய்த்தல் புகலுங் காலே

என்கிறது நாடகவியல். நாடகக் கதையின் முடிவை ஐந்தாம் அங்கத்தில் காணலாம். சுபாசு சந்திரபோசு

"Without sword we can't gain our goal

as the enemy fears only the sword" (p.107)

என்கிறார். காந்தியார் Violence is foreign to the nature of the soul என்று கூறுகிறார். இந்தியா சுதந்திரம் பெற்று விட்டது. துன்புற்ற நிலையில் கசுதூரிபாய் காந்தி

"It is heaven for me to die on his lap" என்ற மனநிலையை பெறுகிறார். பட்டேல் காந்தியிடம்

"I am feeling danger against your life" (p.111) என்கிறார்.

காந்தியார் "My mission seem to have ended" (p.119) என்கிறார்.

காந்தியார் கோட்சேவால் சுடப்படுகிறார்.

LADY MOUNT BATTEN : Ah, he lived like Christ and died like him on Friday itself என்ற நிலையில் நாடகம் முடிவடைகிறது.

Thus it ends a holy saint என்ற கவிதை மனத்தை உருக்குகிறது.

**முடிவுரை :**

சேக்குவீயர், பெர்னாட்சா போன்ற மேல்நாட்டு நாடக ஆசிரியர்கள் நாடக இயக்கத்தில் ஈடுபட்டனர். அவர்கள் சிறந்த நாடகங்களைப் படைத்தனர். நாடக இயக்கத்தில் ஈடுபடாத இராமாநுசக் கவிராயர் நடித்திற்குரியதாகவும், படித்திற்குரியதாகவும் உள்ள ஒரு நல்ல நாடகத்தை இயற்றி தமிழ்நாட்டு சேக்குவீயர் ஆகவும், பெர்னாட்சா ஆகவும் விளங்குகிறார்.

# 12. இராமாநுசக் கவிராயரின் ஆளுமை

முனைவர் இரா.மோகன்
அறிவகம், 78/1, ஆழ்வார்நகர்,
நாகமலை, மதுரை-625019

இராமாநுசக் கவிராயர் எண்பது ஆண்டுகள் (1905-1985) மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்த மாமனிதர்; 'ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்னும் வாக்கிற்கு நல்லதோர் இலக்கியமாகத் திகழ்ந்த நயனுடையாளர்; எப்போதும் தூய வெள்ளைக் கதராடை அணிசெய்ய, நெற்றியில் திருநாமம் தரித்து, எளிமையுடன் காட்சியளிப்பது அவரது வழக்கம். இராமாநுசர் தொழிலால் வழக்கறிஞர்; தூய உள்ளத்தால் - உள்ளத்தில் ததும்பி நிற்கும் உணர்வால் - காந்தியவாதி. தமிழிலும் ஆங்கிலத்திலும் நூல் எழுதும் பேராற்றல் படைத்தவர் அவர். அதே போல் பக்திப் பாசுரம் முதல் பெருங்காப்பியம் வரை படைப்புப் பல படைக்கும் பழுத்த தமிழ்ப் புலமையும் பெற்றவர் கவிராயர். பாவேந்தர் பாரதிதாசன் போற்றிப் பாடியது போல் 'தூய உள்ளம், அன்புள்ளம், பெரிய உள்ளம், தாயுள்ளம்' கொண்டு ஏழை எளிய மக்களுக்காக – மகளிர்க்காக – மாணவர்களுக்காகப் பல்லாற்றானும் ஆக்கமும் ஊக்கம் நிதியும் நல்கிப் பேணிய கொடையாளர் கவிராயர். இங்ஙனம் பல்வகைத் திறன்களும் பாங்குறப் பொருந்திப் பெருவாழ்வு வாழ்ந்த இராமாநுசக் கவிராயரைக் குறித்துத் தமிழ் கூறு நல்லுலகம் இன்னும் சரியாக அறிந்து கொள்ளாதது தவக்குறையே ஆகும்; இப்போதேனும் சாகித்திய அகாதெமி, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், தனித்தமிழ் இலக்கியக் கழகம், நம்மாழ்வார் சபை ஆகிய கல்வி நிறுவனங்களும் அமைப்புக்களும் கவிராயரின் பெருமையைப் பேச முன்வந்திருப்பது உண்மையிலேயே இலக்கிய

ஆர்வலர்களின் நெஞ்சங்களிலே இன்பத் தேனைப் பாய்ச்சுவதாகும்.

கவிராயரின் படைப்புக்களிலே மணிமுடியாய்த் திகழ்வது மகாத்மா காந்தி காவியம் ஆகும். இக் காவியம் இளம்பருவக் காண்டம், நேதளக் காண்டம், சத்தியோதயக் காண்டம், பாரதக் காண்டம், உயுத்தக் காண்டம், மீட்சிக் காண்டம், சுயவாட்சிக் காண்டம், மங்களக் காண்டம், அப்ராக்கிருத பூர்வ காண்டம் என்னும் ஒன்பது காண்டங்களைத் தன்னகத்தே கொண்டது; ‘கடவுள் வாழ்த்து’ முதலாக ‘அறிகுறிப் படலம்’ முடிய உள்ள 69 படலங்களால் அமைந்தது; நான்கு பாகங்களால் ஆன இக் காவியத்தில் இடம்பெற்றுள்ள மொத்தப் பாடல்கள் 12,285. “இதுவரை உலகங்கண்ட எந்தக் காரியத்திலும் பாட்டுடைத் தலைவன் வீரம் முதலியன செயல்பட்டது அவர்களுக்கு ஏற்பட்ட சொந்தத் துயர் தீர்ப்பதற்காகவே நடந்துள்ளது. இராமாயணத்தில் சீதையைச் சிறை மீட்பதற்கும், பாரதத்தில் இழந்த இராச்சியத்தை மீட்பதற்கும் நடந்த செயல்களேயாகும். ஆனால் இந்தப் பாட்டுடைத் தலைவனாகிய மகாத்மா தனது சொந்த நலனுக்காக யாதொரு விதமான செயலும் செய்யாமல் முழுவதும் பரோபகரமான தேச விடுதலைக்காகவே நடத்திய போராட்டம் மிகவும் தன்னிகரற்றது. அந்தப் போராட்டத்தில் எதிலுமே கோபமில்லாமல் செய்த செயலானது தருமத்தின் பூரணத்தைப் பிரதிபலிப்பதாகும். இந்தப் பூரணத்துவம் மற்ற இதிகாசங்களில் இல்லையென்பது அடியேனது துணிவாகும்” (ப.i) எனக் கவிராயரே ‘மகாத்மா காந்தி காவியம்’ மூன்றாம் பாகத்திற்கு எழுதிய ‘கருத்துச் சுருக்கம்’ பகுதியில் குறிப்பிட்டிருக்கும் கருத்து காந்தியடிகளின் தனிப்பெருந் தகைமையைத் திறம்படப் புலப்படுத்துவதாகும். கவிராயருக்கு அவரது இளமைப் பருவத்திலேயே காந்தியத்தின் மீது ஆழ்ந்த பற்று உண்டானது; மேலும் அவரது ஆசிரியர் தி.பி.பத்மநாப ஐய்யங்கார் வாயிலாக அந்தப் பற்று பன்மடங்கு உறுதிப்பட்டது. இதன் விளைவாக, காந்தியடிகளின் உயரிய வாழ்க்கை

நெறியில் அவரது மனம் முழுவதுமாக ஈடுபட்டு, அவர் மீது நன்மதிப்பு மலையினும் மாணப் பெரிதாக வளர்ந்தது. இதன் உச்சகட்டமாகக் காந்தியடிகளின் வரலாற்றை ஒரு காவியமாக இயற்றும் பணியை முனைப்புடன் மேற்கொண்டார் கவிராயர். "அதிவிசித்திரமான மகாத்மாஜியின் சரிதத்தை ஒரு காவியமாக இயற்றினால் உலகிற்கு நன்மை பயக்கக் கூடிய செயலென்று கருதி காந்தியடிகள் அமரத்வமான பின்பு இந்தக் காவியத்தை ஆரம்பித்தேன்" (p.iv) என்று கவிராயரே இப் பணி பற்றிய தம் உள்ளத்து உணர்வினை 'மகாத்மா காந்தி காவியம்' முதல் பாகத்திற்கு எழுதிய முகவுரையில் பதிவு செய்துள்ளார்.

கவிராயரின் 'மகாத்மா காந்தி காவிய'த்திற்கு நீதியரசர் எஸ்.மகராஜன் எட்டுப் பக்க அளவில் நல்லதோர் முன்னுரையை எழுதியுள்ளார். அதில் அவர், "நூலாசிரியரும் காந்திஜியைப் பற்றி எழுதுவதற்குரிய தகுதி பெற்றவர்; மதிக்க வேண்டியதை மதிக்கத் தெரிந்தவர்; பொருளோடு அருளும் தயாளமும் நிறைந்தவர்; உண்மைப் பக்தியாலும் அடக்கத்தாலும் தன்னைப் பக்குவப்படுத்திக் கொண்டவர். உரிய பக்குவம் இல்லை யென்றால், நாம் சுட்டுக் கொன்று புதைத்துவிட்ட காந்திஜியைப் பற்றிப் பல்லாண்டுகள் தியானம் செய்து உருகி, உருகி, உணர்ச்சி வசப்பட்டுப் பத்தாயிரம் கவிகளை இயற்றியிருக்க முடியுமா? இந் நீண்ட காலத் தவமே மகாத்மாவின் சத் சங்கத்திலிருந்த பலனை ஆசிரியருக்கு நல்கிவிட்டது" (p.iv) எனக் கவிராயரின் காந்தியப் பற்றினை நெஞ்சாரப் போற்றியுள்ளார்; கவிராயரின் புலமைத் திறத்திற்குப் புகழாரம் சூட்டியுள்ளார்.

கவிராயர் கம்ப ராமாயணத்திலும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் ஆழங்கால் பட்டவர். எனவே அந்நூல்களின் சாயலை அவரது கவிதைகளில் ஆங்காங்கே கண்டு மகிழ முடிகின்றது. மேலும், 'உண்மையான உணர்ச்சி உள்ளத்திலே தோன்றிவிட்டால், தமிழ்மொழி, நம்மைக்

கேட்காமலேயே நம் உள்ளத்தில் புகுந்து, நம் உணர்ச்சிக்குக் கவி வடிவம் கொடுத்து விடும்' என்னும் இரசிக மணி தி.கே.சி.யின் கூற்றினை மெய்ப்பிக்க வல்ல இடங்கள் பல 'மகாத்மா காந்தி காவிய'த்தில் பரவலாகக் காணப்படுகின்றன. பதச்சோறு இதோ:

*"அறக்கனியே அன்பரசே அருந்துணையே அறிவாற்றல்*
*சிறந்தொளிருஞ் செந்நலமே செய்வினையின் பயன்அறவே*
*துறந்தாற்றும் பெருந்துறவே பேயுலகம் புலம்பிவிழ*
*மறைந்தனையே நிரந்தரமாய் மதியிழந்தார் செய்கையினால்"*

*(அந்திமப் படலம், பா.229)*

சதிகாரன் கோட்சேயால் சுடப்பட்டு காந்தியடிகள் அமரரான பேரவலத்தைத் தாங்கிக் கொள்ள முடியாத சூழலில் கவிராயர் பாடிய இரங்கற்பா இது. 'பண் சுமந்த பாடல்' என்பது போல் ஆழ்ந்த 'அவலம் சுமந்த பாடல்' இது!

காந்தியடிகளின் வரலாற்றைக் கவிராயர் தமிழில் மட்டுமன்றி ஆங்கிலத்திலும் கவிதை வடிவில் 'Bharath Reborn' என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளார்.

"ஒழுக்கமில்லாத அகிம்சை பேடித்தனமானது. உலகத்தில் சத்தியம் அகிம்சை ரூபமாகவே இயங்கி தருமத்தை நிலைநாட்டுவது. உலகத்தில் இதுவரை முதலிற் போரைத் தொடங்கியவர் முடிவில் தோல்வியே யுற்றிருக்கிறார்கள். முதலில் வெற்றி போல் தோன்றினும் கடைசியில் தருமம் தான் வெற்றி கொள்ளுவது பிரத்யட்சம்" (முகவுரை, அராவகன தளம், ப.iii) என்னும் கருத்தினை நிலைநிறுத்தும் விதத்தில் கவிஞர் படைத்துள்ள காவியம் 'அராவகன தளம்'. இக் காவியம் ஆரம்ப காண்டம், மத்திம காண்டம், முடிவு காண்டம் என்னும் மூன்று காண்டங்களாலும் பன்னிரண்டு படலங்களாலும் அமைந்தது.

*"உணர்வொடும் உணர்வுங் காணா உன்னதன் ஒருவன் எங்கும்*
*கணமொடுங் கணமுங் காணாக் காலமெய் யுருவன்தீரா*

*அணவுறுஞ் சடத்தின்ஆறாம் அறிவொடு மறிவுங் காணாக்*
*குணமொடுங் குணமுங் காணாக் கோன்இறை வணக்கஞ்*
*செய்வர்!"*

என்னும் இக் காப்பியத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல் திட்பமும் நுட்பமும் ஒட்பமும் வாய்ந்தது.

"பிற மொழிகளில் காணக் கிடையாத தனிச்சிறப்பு ஒவ்வொரு மொழியிலும் உண்டு. பிற மொழிகளில் அரும்பி நிற்பவை ஒரு மொழியில் காய்த்துக் கனிந்து இன்பங் கொழிக்கும். தமிழில் இத்தகைய தனிப்பெருஞ் சிறப்பாக விளங்குவது பக்திப் பனுவலே ஆம். நாலாயிர திவ்வியப் பிரபந்தம் தேவாரம் திருவாசகம் - இவை வேறு எங்கும் நாம் காணாத புத்தம் புதிய இன்பச் சாறு. இவை கடவுட் காதற் பாடல்கள் - திவ்யப் பிரபந்தங்கள். இந்தச் சாற்றை – சாரத்தை நாம் பருக வேண்டாவா?" (ப.i) என அறிஞர் பி.சிறீ.யின் 'திவ்வியப் பிரபந்த சாரம்' என்ற அருந்தமிழ் நூலுக்கு எழுதிய அணிந்துரையில் வினவுவார் பல்கலைச் செல்வர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார். அவர் தமிழ் மொழியின் தனிப்பெருஞ் சிறப்பாகச் சுட்டியிருக்கும் 'கடவுட் காதற் பாடல்' மரபின் அழகிய தொடர்ச்சியினை இராமாநுசக் கவிராயரிடம் காண முடிகின்றது. 'துளவன் துதித் தொகுப்பு', 'கோவிந்த பசனை கீர்த்தனாமிர்தம்' என்னும் க்விராயரின் இரு பக்திப் பனுவல்களும் இவ் வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை.

'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டக் கவி' பாடுவதில் வல்லவர் கவிராயர் என்பதற்குக் கட்டியம் கூறும் ஒரு பாடல் வருமாறு:

*"அற்றவர்க்கு அருநிதி, அன்பி னால்அடி*
*உற்றவர்க்கு எளியவன், ஒருவன், ஒப்பிலான்,*
*மற்றவர்க்கு அரியவன், மாயன், மாலவன்*
*நற்றிரு வடிகளை நயந்து வாழ்த்துவாம்"*
*(தனிப்பாடல், ப.18)*

'எம்பிரான் புகழ்' என்னும் தலைப்பில் கவிராயர் பாடியுள்ள 'அருமையில் எளிய அழகான' பாடல் இது! ஒரே பாடலில் - நான்கே அடிகளில் - அற்றவர்க்கு அருநிதி, அன்பினால் அடி உற்றவர்க்கு எளியவன், ஒருவன், ஒப்பிலான், மற்றவர்க்கு அரியவன், மாயன், மாலவன் என இறைவனின் அரும்பெரும் பண்புகளை நிரந்தினிது சொல்லி விடுகிறார் கவிராயர். முடிவில் மாலவன் 'நற்றிரு வடிகளை நயந்து வாழ்த்துவாம்' எனப் பாடி அவன் திருவடிகளைச் சரணடைவதே மானிடர் உய்யும் நெறி என்பதையும் உணர்த்தத் தவறவில்லை கவிராயர்!

"மனிதன் இறைவனைத் தொழுதல் முறைகளில் இங்கிதமும் எளிதுமானது அவன் நாம சங்கீர்த்தனமே" (முகவுரை, கோவிந்த பசனை கீர்த்தனாமிர்தம், ப.iii) என்பது கவிராயரின் கருத்து. பல்லவி, அநுபல்லவி, சரணம் என்ற அடிப்படையில் தாம் இயற்றிய கீர்த்தனைகளைக் கவிராயர் இசையில் பெரும்புலமை படைத்த திரு.சுப்பிரமணிய பிள்ளை அவர்களைக் கொண்டு சரிபார்த்த பிறகே வெளியிட்டிருப்பது அவரது பெருந்தன்மையையும் உயர்ந்த புலமைக்குத் தலைவணங்கும் பேருள்ளத்தையும் பறைசாற்றுவதாகும்.

ஆதி தாளத்தில் கீர்வாணி இராகத்தில் கவிராயர் பாடியுள்ள ஒரு கீர்த்தனையில் இருந்து பயில்வார் உள்ளத்தைத் தொடும் சில வரிகள் இதோ:

*"பல்லவி*

*வேலாண்டி யவன் வேலாண்டி அவன் செந்தூர் வேலாண்டி*

*அநுபல்லவி*

*மாலாண்டி மயில் மேலாண்டி கையிற் சூலாண்டி! தையற்*
*கோலாண்டி*

*சரணம்*

*மெல்லாண்டி மதன்வெல்லாண்டியுரு – உள்ளாண்டி*
*என தெல்லாம்டி..."*

*(கோவிந்த பசனை கீர்த்தனாமிர்தம், ப.41)*

பக்திச் சுவையைப் படிப்பவர் மனத்தில் எளிமையாக ஊட்டும் வகையில் பேச்சுத் தமிழை இங்கே பொருத்தமாகக் கையாண்டுள்ளார் கவிராயர்.

'திருமால் மொழி', 'திருமால் ஒளி', 'திருமால் வழி', 'திருமால் எழில்', 'திருமால் பொழில்' என்னும் ஐந்து பகுதிகளால் ஆனது 'துளவன் துதித் தொகுப்பு.' பேராசிரியர் பா.வளன் அரசு குறிப்பிடுவது போல் இத் தெய்வப் பனுவல், "திருமாலின் மொழி கேட்டு, ஒளி பெற்று, அவ்வழி நடந்தால் வாழ்வு எழிலாகவும் இன்பப் பொழிலாகவும் திகழும் என்று நிறுவுகிறது" (இராமாநுசக் கவிராயரின் எழுத்தோவியங்கள், ப.11)

பாரதியார் படைக்கும் பாஞ்சாலி,

*வல்ல சகுனிக்கு மாண்பிழந்த நாயகர்தாம்*
*என்னைமுன் னேகூறி இழந்தாரா? தம்மையே*
*முன்னம் இழந்து முடித்து என்னைத் தோற்றாரா?"*
*(பாரதி பாடல்கள், ஆய்வுப் பதிப்பு, ப.286)*

என வெடிப்புறப் பேசுவாள்; தன்னை அழைத்துச் செல்ல வந்த தேர்ப்பாகனிடம் நெஞ்சில் உரத்தோடு கேட்பாள். இதற்கு இணையாகக் கவிராயரின் 'பூகந்த வெண்பா'விலும் ஓர் அருமையான பாடல் இடம்பெற்றுள்ளது. சிந்தனையைத் தூண்டும் அப்பாடலில் தொடக்க அடிகள் இதோ:

*"மற்றப் பொருள்போல மாநிலத்தில் விற்பதற்கு*
*உற்ற பொருளாமோ ஒண்டொடியார்?"*
*(பூகந்த வெண்பா, சுயம்வரப் படலம், பா.44)*

இங்கே 'பெண் விற்பனைப் பொருளோ?' எனத் தொடுக்கும் கவிராயரின் கேள்விக் கணை இன்றைய பெண்ணியச் சிந்தனையோடு ஒத்துச் செல்வதாகும்.

ஒழுக்கம்,. அறிவு, சக்தி எல்லாம் போற்றக்கூடிய அளவில் அமையப் பெற்ற பூகந்தன் அவனது வாழ்வைச் சுற்றிச் சுழலும் செம்பாணி, விம்பாணி, வம்பாணி என்னும் மூன்று பெண்கள் ஆகியோரை மையமாகக் கொண்டு கவிராயர் படைத்துள்ள படைப்பு 'பூகந்த வெண்பா'. "கடவுள் ஒருவரே மாறாத நிலையினர். அவர் சடத்துக்கு மேற்பட்டவர். மற்றவர்கள் சடத்துக்குட்பட்டவர்கள்" (முகவுரை, ப.2) என்பதே இப் படைப்பின் வாயிலாகக் கவிராயர் உணர்த்த விரும்பும் செய்தி ஆகும். 'மணநூல்' எனச் சுட்டப் பெறும் சீவக சிந்தாமணிக் காப்பியத்தின் நாயகன் சீவகனை நினைவூட்டும் விதத்தில் கவிராயர் பூகந்தனைப் படைத்துக் காட்டியுள்ளார்.

கவிராயரின் ஆளுமை பல்வேறு அரிய திறன்கள் எல்லாம் ஒன்று திரண்டு ஓர் உருவானதாய் விளங்குகின்றது. பொதுவாகக் கவிஞர்களுக்குக் கணக்கில் அவ்வளவு ஈடுபாடு இராது; பாரதியார் இதற்குச் சரியான உதாரணம். 'கணக்கு, மணக்கு, பிணக்கு, ஆமணக்கு' என்னும் அவரது கூற்று புகழ் பெற்றது. ஆயின் கவிராயரோ 'மனிதனும் கணிதவியலும்' (Man and Mathematics) என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஒரு நூலே எழுதியுள்ளார். பாரதிக்குச் செல்லம்மாள் வாழ்க்கைத் துணையாக அமைந்தது போல் கவிராயருக்கும் செல்லம்மாள் என்ற பெயரில் வாழ்க்கைத் துணைவியார் கிடைத்துள்ளார். பி.ஏ.,பி.எல். பயின்று நீதிமன்றத்தில் வழக்குரையாடும் பணியில் ஈடுபட்டவர்கள் பெரும்பாலும் பெருமிதமும் உயர்வு மனப்பான்மையும் கொண்டவர்களாக இருப்பார்கள்; கவிராயரோ தம்மை 'அடியேன்' என்றும். 'தாசன்' என்றும் மெத்தப் பணிவோடும் அடக்கத்தோடும் குறிப்பிட்டுக் கொள்கின்றார்; காலமெல்லாம் கதராடை அணிந்த ஓர் எளிய காந்தியவாதியாகவே வாழ்ந்துள்ளார். "அன்று கவிராயரும் அவர்கள் தந்தையும் நடந்து கொண்ட முறையைப் பார்த்த போது, மகாத்மாவைப் போன்ற சாந்த சீலர்கள் இவர்கள் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது" (முன்னுரை, இராமாநுசக்

கவிராயரின் 'மகாத்மா காந்தி காவியம்', ப.ii) என நீதியரசர் மகராசன் குறிப்பிடுவதும் இங்கே மனங்கொளத் தக்கதாகும். ஒருவர் ஒரு துறையில் தோன்றிச் சாதனை படைப்பது என்பதே அரிது; ஆயின், கவிராயரோ தனிப்பாடல், காப்பியம், நாடகம், பக்திப் பனுவல், தன்னுணர்ச்சிப் பாடல் (ஆங்கிலத்தில்) என்றாற் போல் பல்வேறு துறைகளில் தோன்றி அவற்றில் படைப்புப் பல படைத்துள்ள சாதனையாளராகத் திகழ்கின்றார். இராமலிங்க அடிகளார் ஒன்பது வயதில் 'ஒருமையுடன் உனது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்' என்று பாடியது போல், கவிராயரும் ஒன்பது வயதில் கவி புனையும் ஆற்றலைப் பெற்றவராக விளங்கியுள்ளார். தாமே கவிஞராக இருந்து கவிதை படைத்ததோடு நின்றுவிடாமல் நம்மாழ்வாரின் 'திருவாய்மொழி', ஆண்டாளின் 'திருப்பாவை' ஆகிய பக்திப் பனுவல்களுக்கு உரையும் கண்டுள்ளார் கவிராயர். உரையாசிரியர் என்ற பரிமாணமும் அவரது ஆளுமையில் சிறப்பாகக் காணப்படுகின்றது.

## 'நல்லதோர் வீணை'

வாழ்வின் கடைசி கட்டத்தில் மரண பயம் கொண்டு நாளுக்கு நாள் செத்துச் செத்துப் பிழைக்காமல் அப்பர் பெருமானைப் போல், "நான் என் கடமையைச் செய்தாகிவிட்டது. இனி நான் உலகில் இருந்து விடை பெற வேண்டியது தான். எனக்கு எதற்காக மருந்தும் சிகிச்சையும்? தண்ணீர் போதும்" என்று கூறும் அளவிற்கு அஞ்சாமையும் ஆன்ம பலமும் பொருந்தியவராகக் கவிராயர் நிறைவாழ்வு வாழ்ந்திருக்கிறார். முத்தாய்ப்பாக, அரங்கநாயகி அம்மையார் பாடுவது போல் 'சாந்தமே உருவதாகி, சத்திய அணி பூண்டு, மாந்தருள் தலைசிறந்து மாமுனியாக' வாழ்ந்த - 'காந்தியின் அடிச்சுவட்டில் கடமைதனை ஆற்றிய கவி வேந்தர்' இராமாநுசக் கவிராயர் தமிழ் கூறு நல்லுலகிற்குக் கிடைத்த 'நல்லதோர் வீணை' என்பது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

# 13. இராமாநுசக் கவிராயரின் திருமால் வழி உணர்த்தும் பக்தி நெறி

முனைவர் நிர்மலா மோகன்
78/1, ஆழ்வார் நகர்
நாகமலை. மதுரை – 625 019.

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இணையற்ற பெரும் புலவர்களுள் இராமாநுசக் கவிராயர் (1905-1985) சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் ஆவார். தமிழ் மொழியிலும், ஆங்கில மொழியிலும் பல அரிய நூல்கள் படைத்தவர் அவர். 'மகாத்மா காந்தி' பற்றிய காப்பியம் செய்த கவிராயர், காந்தி அடிகளைப் போலவே எளிமையான வாழ்வு வாழ்ந்தவர். திருமால் மீது பக்தி செலுத்துவதையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கடைப்பிடித்தவர் என்பதை உணர்த்தும் வகையில் திருமால் மீது திருமால் மொழி, திருமால் ஒளி, திருமால் வழி, திருமால் எழில், திருமால் பொழில் ஆகிய ஐந்து நூல்களை இயற்றியவர்.

"நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாடல்களில் தோய்ந்து நித்யாணு சந்தானமாகவும், கவிதாமிர்தமாகவும் அநுபவித்து வாழ்ந்த பெரும்புலவர் இராமாநுசக் கவிராயர்... நம்மாழ்வரின் ஈடு இணையற்ற 'திருவாய் மொழி'யைப் போல் 'திருமால் மொழி'யும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் 'திருப்பாவை' போல 'திருமால் வழி'யும் எங்கள் கருத்தைக் கவர்ந்தன" என்று 'திருமால் வழி'க்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் திருமதி கோதைநாயகியும் திரு. கள்ளப்பிரானும் குறிப்பிடுகின்றனர் (ப.27). கவிராயர் எழுதிய 'திருமால் வழி' என்னும் நூலில் ஆண்டாள் படைத்த 'திருப்பாவை'யின் தாக்கம் இடம்பெற்றிருப்பதை எடுத்துக்காட்டும் வகையில் இக் கட்டுரை அமைகின்றது.

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில், வீடு சிறக்க நல்ல கணவனை வேண்டியும், நாடு செழிக்க நல்ல மழை வேண்டியும் ஆயர்பாடிப் பெண்கள் கண்ணனை நினைத்துப் பாவை நோன்பு நோற்றதை ஆண்டாளின் திருப்பாவை காட்டுகின்றது. ஆண்டாள் நாச்சியாரின் பாடல்களில் மனம் தோய்ந்த இராமாநுசக் கவிராயர், 'பூவில் நான்முகனைப் பூப்புவித்த புண்ணியரான' திருமாலை அடைவதற்கு உரிய நல்ல வழியைப் பல பாடல்களிலும் எடுத்துரைக்கின்றார்.

இறைவனை அடைவதற்குப் பலரும் நோன்பு நோற்றல், தவம் செய்தல், யாகம் செய்தல் எனப் பல வழிகளைக் கையாளுகின்றனர்.

*"பொருப்பிடையே நின்றும், புனல்குளித்தும், ஐந்து*
*நெருப்பிடையே நிற்கவும் நீர்வேண்டா; விருப்புடைய*
*வெ.்.காவே சேர்ந்தானை மெய்ம்மலர் தூஉய்க் கைதொழுதால்*
*அ.்.காவே தீவினைகள் ஆய்ந்து"*
*(மூன்றாந் திருவந்தாதி, பா.2357)*

என்ற பாசுரத்தில் பேயாழ்வார், மலையில் நின்று தவம் செய்தல், நீரில் மூழ்கி நிற்றல், ஐந்து நெருப்புக்கு இடையே நிற்றல் என்றெல்லாம் செய்யாமல் திருவெ.்.காவில் குடிகொண்டிருக்கும் இறைவனை உண்மையாக மலர் தூவிக் கைதொழுது வணங்கினாலே போதும், தீவினைகள் அணுகா என்று கூறுகிறார். இக் கருத்தினை அடியொற்றி, இராமாநுசக் கவிராயரும்,

*"மேவு வகைபலவே மேதினியில் மேற்றவமாம்*
*நோவு முட்காடும் நொந்தழலும் தான்வேண்டா;*
*ஆவல் வழியவனை அணங்கினருந் தாமடைவாம்*
*தூவில் நீராடித் தோத்திரங்காண் எம்பாவாய்" (பா.3)*

என்று எடுத்துரைக்கின்றார். 'இறைவனைக் காணும் ஆவலுடன், முள் காட்டில் தனித்திருத்தல், அழலிடையே நின்று தவம் செய்தல், யாகம் செய்தல் என்ற பல வழிகளிலும் முனைந்து முனைந்து பலரும் இறைவனை அடையலாம் எனினும்,

பெண்கள், அவனைக் காணும் மிகுந்த ஆவலுடன், நீராடித் தோத்திரங்கள் சொன்னாலே போதும்! அவனை அடைந்து விடலாம்' என்கிறார் கவிராயர்.

*"... ... ... தாமோதரனை*
*தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது*
*வாயினாற் பாடி மனத்தினால் சிந்திக்க*
*போய பிழையும் புகுதருவான்நின் றனவும்*
*தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்"*
*(திருப்பாவை, பா.5)*

என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாள் காட்டிய வழியில் ஆற்றுப்படுத்துகின்றார் இராமாநுசக் கவிராயர். உயிர்களுக்கு உரிய நல்ல வழி ஒன்றுதான். அதுதான் மாதவனைத் தேடல். நேற்று, இன்று, நாளை என்று எந்நாளும், பொன், பெண் இன்பத்தால் தீவினை தான் தொடரும். அப்படிப்பட்ட இன்னல்களைத் தீர்க்கக் கூடியவனான மாதவன்பால் நாம் சேருவதற்குரிய வழி, ஆற்று நீர், மழை நீர், கடல் நீர் ஆகிய முந்நீராகும் முகில் நீரில் மூழ்கி நீராடி, தூய்மைப் படுத்திக்கொண்டு, பாவை நோன்பு நோற்பதே தக்கது என்பதை,

*"தன்னந் தனிவழியே தாமரையின் தடஞ்சுனையில்*
*கன்னல் அமுதேஅங் காரிகையார்க் கூட்டு அன்றிப்*
*பின்னும் வழிஎல்லாம் பிழையாகும் உயிர்இயலின்*
*மன்னு நெறிஒன்றே மாதவனைத் தான்தேடி*
*நென்னல் இன்றோடு நெடுநாளும் தான்தொடரும்*
*சொன்னம் புவிமாதர்ச் சுவையாடு வல்வினையின்*
*இன்னல் தீர்ப்பான்பால் இங்கிதமாய்த் தாம்போக*
*முன்பின் முகில்நீரில் மூழ்கேலோர் எம்பாவாய்" (பா.5)*

என்னும் பாடலில் தெளிவுற மொழிகின்றார் கவிராயர்.

**இறைவனின் இயல்புகள்.**

'ஓங்கி உலகளந்த உத்தமனாம் அந்தக் கண்ணபிரான், ஆயர்பாடியில் ஒருவனாக அவதரித்துப் பல மாயங்கள் செய்தவன். அவன் பிள்ளை விளையாட்டு விளையாடியவன்; தாய் யசோதையின் அன்புக்கிணங்கி உரலில் கட்டுண்டவன்; வேதங்களாலும் காண முடியாத இறைவன் - 'பத்துடை அடியவர்க்கு எளியவன்' என்று நம்மாழ்வார் பாடுவது போன்று, பக்தி மிகுதியினால், அழுது விம்மும் அன்புள்ளங்களுடன் ஆடிப் பாடி விளையாடும் புண்ணியன்: கல்வி, கேள்வி, ஞானத்தில் சிறந்த பெரியோர்களும் அறிவினால் ஆராய்ந்தால் அறிய வொண்ணா வாரணம் போன்று விளங்குகின்றவன்; ஆனால் அன்னையின் அன்புக்குக் கட்டுண்டவன்' என்று கண்ணனாக அவதரித்து வந்த இறைவனின் இயல்புகளை (பா.4) அழகாக வெளிப்படுத்திக் காட்டுகிறார் இராமாநுசக் கவிராயர். மேலும், அத்தகைய இறைவன் மீது செலுத்தும் பக்தியே நாம் உய்வதற்கான சிறந்த வழியாகும் என்று ஆற்றுப்படுத்துகிறார் கவிராயர்.

'எல்லே இளங்கிளியே, இன்னம் உறங்குதியோ' என்று ஆயர்பாடியில் நோன்பு நோற்கும் பெண்கள் ஒருவரையொருவர் அழைத்து எழுப்புவது போல், கவிராயரும், 'தோழி எழுப்பல்', (பா.14429) 'தோழியைக் கூப்பிடல் (பா.21) என்னும் பாடல்களில் தோழியரை எழுப்பும் காட்சியைப் படைக்கின்றார். 'நாங்கள் எல்லோரும் பாடி வருகின்ற ஒலி கேட்டும் பாவையே நீ ஏன் இன்னமும் உறங்கிக் கொண்டிருக்கின்றாய்? பாற்கடலில் ஆதிசேடன் அமளியிடை, அறிதுயில் கொண்ட அந்த நாராயணனைப் போல் நீயும் தூங்குவது போல் வேடம் புனைகின்றாயோ? ஆடுகின்ற கடல் அலைகள் ஆடி ஆடி அருணனைத் தேடுவது போல், நீயும் நம் பிறவித் துயரைத் தீர்க்கும் இறைவனைப் போற்றிப் பாடுவாயாக- 'கணவனும் மனைவியும் தூய அன்பினால் ஒன்றி மகிழ்வது போல் இறையன்பில் - திளைத்து மகிழ்வாயாக' (பா.14, 15) என்று பாடுகிறார் கவிராயர். 'உறங்குகின்ற உயிர்களை எழுப்பும்

தோழியை, இறைவனிடம் உயிர்களை ஆற்றுப்படுத்தும் குருவாகக் கொள்ளலாம்' (ப.90) என்று உரையாசிரியர்கள் இப்பாடலுக்குத் தரும் விளக்கம் போற்றுவதற்கு உரியதாகும். குருதான் தெய்வத்தைக் காட்ட முடியும் என்பதனால் தான் 'மாதா பிதா குரு தெய்வம்' என்று கூறினர் சான்றோர். 'கந்தம் கமழ் குழலீ' (பா.21) என்ற ஆண்டாள் நாச்சியாரின் சொல்லாட்சியைப் பொன்னே போல் போற்றி அப்படியே பயன்படுத்தும் கவிராயர், 'கண்ணன் அவன் குழலோசை சிந்தை ஈர்க்கும் எமை; சிறிதும் நீ கேளாயோ, பந்தம் அறுப்பான்பால் பணிந்து ஆடாய் எம்பாவாய்' (பா.21) என்று தோழியை அழைப்பதாய் அமைந்துள்ள இப்பாடல், ஆன்மாக்களின் பந்தம் அறுப்பவன் இறைவன் என்பதை உணர்த்திநிற்கிறது.

இறைவனை அடைய என்ன செய்ய வேண்டும்? அவன் மீது பற்று வைக்க வேண்டும்; அவன் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொள்ள வேண்டும்; அவனல்லால் சரண் வேறு இல்லை எனச் சரணாகதி அடைய வேண்டும் என்பதைப் பல பாடல்களில் உணர்த்தியுள்ளார் இராமாநுசக் கவிராயர்.

'மலராத மொட்டில் தேன் போல, இவ்வுடம்பில் உறங்குகின்ற நிலையில் உள்ள பல பிறவிகள் எடுத்துள்ள உயிரை விழிப்படையச் செய்கின்றான் இறைவன்' (பா.24) என்று கூறும் கவிராயர், 'இறை நாட்டம் கொள்வது மலர் அரும்பு நிலையில் இருப்பது போன்றது என்றும், அவன் நெறி நடப்பது மலர் மலர்வது போன்றது என்றும், உயிர் தூய்மையடைவது மலர் காய் ஆவது என்றும், முக்தி அடைவது கனியாகிய நிலையினை அடைவது' என்றும் அழகான உவமை அடுக்கின் மூலம் உயிர் படிப்படியே பக்குவம் அடைவதை எடுத்துக்காட்டுகின்றார்:

*"கேடுன் புலன்வாழ்க்கைக் கெலிக்கரும ஞானம்அவை*
*நாடா இறைவன்பால் நலிமலர்க்காய் ஒத்திடுமால்*
*வாடா உயிரியலாம் வழுவில்லா அன்பு அதனால்*
*பாடி அவன்நெறியே பரம்பொருளால் உயிர்தரிக்கும்*

*ஈடில் உட்கனிவால் இன்பமுடன் தனைத்தரிக்கும்*
*ஊடல் உணர்நங்காய் உத்தமனைப் பாடியவன்*
*வேடம் பலபுனையும் வெம்அசுரர் வீவித்தான்*
*தேடும் எம்மோடும் தேரேலோ எம்பாவாய்" (பா.25)*

"சிற்றின்ப வாழ்வை மட்டுமே நாடும் உயிர்கள் நாசமடையும் என்பதனை 'நலிமலர்க்காய்' எனக் கூறுகிறார் கவிஞர். அரும்பு மலராகி, மலர் காயாகி, காய் கனியாவது இயற்கை. அவ்வாறில்லாது. சில காய்கள் நோய்வாய்ப்பட்டுப் பிஞ்சிலே பழுத்து வெம்பி உதிரும். இறையன்பை நாடாமல், சிற்றின்ப வாழ்வைப் பெரிதெனக் கருதும் உயிர்களின் அகந்தை அழிவுக்கு இட்டுச் செல்லும்" (பக்.108-109) என்பதை இப்பாடலில் உணர்த்துகின்றார் கவிராயர்.

**தீமையிலும் நன்மை புரிபவன்**

இறைவன இப்பூவுலகிற்கு வருவது தீயவர்களை அழித்து, நல்லவர்களைக் காப்பதற்கேயாகும். 'துட்ட நிக்கிரக சிட்ட பரிபாலன' என்று இதனைக் குறிப்பிடுவர் ஆன்றோர். பரம்பொருளாம் நாராயணனின் பன்னிரு திருநாமங்களை – கேசவன், மாதவன், கோவிந்தன், விட்டுணு, மதுசூதனன், நாராயணன், வாமனன், விக்கிரமன், சிரீதரன், இருடிகேசனன், பத்மநாபன், தாமோதரன் என்னும் நாமங்களை – உள்ளன்போடு நினைந்து, கசிந்து உருகி, வழுத்தி நின்றால் "செங்கண்மால் என்றென்றும் தீவாய் வினையவித்துத் தீமையிலும் நலம் புரிவான் தேவன் அவன் ஒன்று என்பதையறிந்து திகைப்பு அறுவாய் எம்பாவாய்" (பா.43) என்று எடுத்துரைக்கின்றார் கவிராயர். "போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய்' என்னும் ஆண்டாள் நாச்சியாரின் தூமொழிகளை இப்பாசுரம் நினைவூட்டுகின்றது.

'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்று மாணிக்கவாசகப் பெருமான் கூறுவது போல், ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களை நீக்கி, இறைவனைப் பற்றிக்

கொண்டால் அவன் நம்மைக் காத்தருளுவான்; அதற்கு திரௌபதியின் வரலாறே நமக்குச் சான்று ஆகும்.

கௌரவர்களுடன் சூதாடித் தோற்று, சுதந்திரத்தை இழந்து அடிமையான பஞ்ச பாண்டவர்தம் துணைவியாம் திரௌபதியின் ஆடையினைத் துச்சாதனன் களையும் பாவமாகிய பெரிய துன்பம் நேரும் வரை எம்பெருமான் அதனைத் தடுக்காது ஒன்றும் செய்யாமல் இருந்தான். திரௌபதி தன் கைகளினால் ஆடையைப் பிடித்துக் கொண்டு, நின்ற போதும் எம்பெருமான் ஒன்றும் செய்யவில்லை. கணவன்மார் உதவி வராது, ஆண்டவன் தான் உதவ முடியம் என்பதனை உணர்ந்து முழு மனத்துடன் இறைவனைச் சரணடைந்து இரு கரங்களையும் மேலே தூக்கிக் 'கோவிந்தா, கோவிந்தா' என உளம் கனிந்து அழைத்துக் கதறியபோது. நீதி நிறைந்தவன், அகந்தை இல்லாதவன், அன்பிற்குரிய பக்தர்களின் பக்திக்கு அடிமையானவன் என்பதை மெய்ப்பிக்க, துச்சாதனன் களைப்படையும் வரை அவளுக்கு ஆடையினைப் பெருக்கி திரௌபதியைக் காத்தான் பரமன். தன் பக்தர்கள்பால் உள்ள அன்பினை உணரச் செய்வதற்காக– கொடியோரின் தகாத செயல்களை, அறத்தின் வலிமையினால் தடுத்து, நீதியினை நிலைநாட்ட எந்தச் செயலையும் செய்வான் இறைவன். ஆகையினால் அந்த மேன்மை மிகுந்த உறவைத் தொழுவாய்ாக' என அறிவுறுத்துகின்றார் கவிராயர்.

*"சூதின் வழிமுன்னர்ச் சுயமிழந்த பஞ்சவர்தம்*
*மாதின் துகில்களையும் மாஇடர்க்கண் மலினம்வரை*
*ஆதும் புரியானாய் அமர்ந்தவன்தான் எம்பெருமான்*
*கோதை உளம்கதறிக் கோவிந்தா கோவிந்தா*
*பேதை குரல்அதன்வாய்ப் பேருரனுந் தான்மெலிய*
*நீதி மலிவித்தான் நிறைஅகந்தை இல்லாதவன்*
*காதல் மெய்ப்பிக்கக் கடும்உருவம் அறவலியே*
*ஏதும் புரிவானால் அவ்வேதுறவே தொழுபாவாய்"*

*(பா.48)*

இப்பாடலின் வாயிலாக இறைவனிடம் முழுமையாகச் சரணடைதலே நாம் உய்யும் வழி என்பதனை உணர்த்துகின்றார் கவிராயர்.

'பக்தர்களைக் காக்கும் எம்பெருமான், தன் அடியார்க்குத் துன்பம் கொடுக்கும் செயல் யாதாயினும், எத்தன்மைத்தாயினும், அதை அழித்துத் தன்னை அண்டியவர்களைக் காப்பவன்; தன்னைப் பழிப்பவர்கள் கூறும் பழியால் உள்ளம் துன்பமுறான்; அவர்களது அறியாமையை எண்ணி அவர்களைப் பரிகசிப்பானே ஒழிய, தன்னை அது எந்த விதத்திலும் பாதிக்காத நிலையில் நின்று, பக்தர்களுக்கு எப்படி வாழ வேண்டும் என்று வழிகாட்டுவான்; அவர்கள் மனமாசு அகற்றி, அவர்தம் மனம் குவியச் செய்து. அவர்கள் உள்ளத்தில் அன்பு பெருகச் செய்து இதமளிப்பான் எம்பெருமான் என்பதை அறிவாய் இளம்பெண்ணே' என்று தெளிவுறுத்துகிறார் கவிராயர்:

*"ஒழிப்பான் எவ்விடரும் ஊக்குவிப்பான் என்னலமும்*
*அழிப்பான் எவ்விகலும் ஆதரிப்பான் அடைக்கலத்தைப்*
*பழிப்பால் உள்படரான் பரிகசிப்பால் ஒன்றுமுறான்*
*இழிப்பார் இடர்வினையே எடுப்பான்தான் வினைசெய்ய*
*முழுப்பாங்கு உணர்வரிய முதல்வன்அவன் முழுச்சடத்தின்*
*வழிப்பல் விதம்செய்வான் வாங்கும் உயிரோ அதன்கண்*
*கழியும் ஒருபகுதி கவிந்திடும் ஓர் குறிநிலையில்*
*எழுமால் அன்புஒன்றே இதங்கொல்வான் எம்பாவாய்"*

*(பா.51)*

என்ற கவிராயரின் பாடல்,

*"குறையொன்றும் இல்லாத கோவிந்தா! உன்றன்னோடு*
*உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது*
*அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னை*
*சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே*
*இறைவா! நீ தாராய் பறையேலோர் எம்பாவாய்"*

*(திருப்பாவை, பா.28)*

என்னும் ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாவைப் பாடலை நினைவூட்டுகின்றது.

நிறைவாக, 'திருமால் வழி' என்னும் நூலின் வழி, முழுமையான வைணவத் தத்துவத்தை வெளிப்படுத்த முனைந்துள்ளார் இராமாநுசக் கவிராயர். ஆன்மாக்கள் ஈடேற்றம் பெற வேண்டும் எனில் மனமாசு அகற்றி, இறை நாமங்களை வாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்து, இறைவன் மீது முழுமையான நம்பிக்கை வைத்து, பக்தியினால் உள்ளம் குழைந்து உருகி, அவனை முழுமையாகச் சரண் அடைய வேண்டும் என்பதை இந்நூலின் வழி நன்கு வெளிப்படுத்தியுள்ளார் கவிராயர்.

*"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு*
*உற்றோமே யாவோம் உமக்கேநாம் ஆட்செய்வோம்*
*மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்" (பா.29)*

என்றும் ஆண்டாள் நாச்சியார் பாடுவது போல், ஆன்மா பிறவியாகிய தளையினின்றும் விடுபட்டு, இறைவனுடன் ஒன்று கலத்தல் ஆகிய முக்திப் பேற்றினைப் பெறுவதற்குரிய வழிகளை இராமாநுசக் கவிராயரின் 'திருமால் வழி' செவ்விதின் உணர்த்தி நிற்கின்றது எனலாம்.

# 14. மகாத்மா காந்தி காவியத்தில் தொன்மம்

முனைவர் யாழ்.சு.சந்திரா,
இணைப் பேராசிரியர்,
மீனாட்சி அரசினர் மகளிர் கல்லூரி, மதுரை -625002.

பாரில் பழுதுறா அன்பின் நயமது காட்டப் பாரதத்தில் அவதரித்த மகாத்மாவின் சரிதத்தை, மகாத்மாகாந்தி காவியம் எனப் பெயரிட்டு ஒன்பது காண்டங்களாக இராமாநுசக் கவிராயர் யாத்துள்ளார். இக்காவியத்தில் பயின்று வரும் தொன்மங்களை இனம்காண முற்படுவது ஆய்வின் செல்நெறி ஆகும்.

## காவிய அமைப்பு :

அளப்பரிய தொண்டுகளாலும் ஆன்ம சோதனையாலும் உயர்ந்த மகாத்மாவின் சரிதத்தைத் தமிழ்க் காப்பியமரபில் உரைப்பது மகாத்மா காந்தி காவியம். ஆசிரியரே கூறுவது போன்று, உலக வரலாறு காணாத தன்னிகரற்ற அவதார புருசன் மகாத்மா காந்தி எனலாம். புத்தர், கிறித்து மகான்கள் போல அன்பினர். அன்புடன் அகிம்சையால் தருமத்தை நிலைநாட்டலாம் என்று மெய்ப்பிக்க முயன்றவர். அதில் தவறு ஏற்பட்டால் அதனால் அகிம்சைத் தத்துவத்திற் குற்றமில்லை அதை மேற்கொண்டவர் குறைதான் என்று உறுதியாகச் சொன்னார். அப்படிப்படடவர் சரித்திரத்தைத் தமிழ்ப்பாக்களில் அடியேற்குத் தெரிந்தமட்டிலும் பாடியிருக்கிறேன் என்ற பான்மையில் காந்தியடிகளை அவதாரமாக உயர்த்தும் உன்னதக் காப்பியம்!

இளம் பருவக் காண்டம், நேதளக்காண்டம், சத்தியோதயக் காண்டம், பாரதத் காண்டம், யுத்தகாண்டம், மீட்சிக்காண்டம், சுயவாட்சிக் காண்டம், மங்களக்காண்டம், அபராக்கிருத காண்டம் என்ற ஒன்பது காண்டங்களால் இக்காவியத்தை ஆசிரியர் படைத்துள்ளார். முதற்காண்டமாகிய இளம்பருவக்காண்டத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து பாடுகிறார். நாரணன் நற்குடில் தொழும் ஆசிரியர், இராமர்,

கிருட்டிணர், திரிமூர்த்தி, நம்மாழ்வார், உடையவர், ஆஞ்சநேயர், சரசுவதி, திருநாமம் எனத் துதிகளை அடுக்குகிறார். இதனைத் தொடர்ந்து பைந்தமிழ்ப் பாவையைப் பணியும் தமிழ்த்தாய் துதி இடம் பெறுகிறது. ஓர் பாடலில் அமையும் தமிழ்த்தாய் துதியை அடுத்து மூன்று பாடல்களில் பாரத அன்னை துதி இடம் பெறுகிறது.

தமிழ்க் காப்பிய மரபின் அடிப்படையில் அவையடக்கம், நூற்பயன் கூறுகிறார். மேலும் ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், பொதுவியற்படலம், நகரப்படலம் ஆகியவற்றையும் ஆசிரியர் அமைத்துள்ளார். காந்தியடிகளின் குடும்ப மரபும், பிறப்பும், வளர்ப்பும், அவரது கல்வியும் பாடுபொருளாகின்றன.

இரண்டாம் காண்டம், நேதளக் காண்டம், காந்தியடிகள் தென்னாப்பிரிக்கா சென்று சத்தியாகிரகத்தில் ஈடுபட்டு சத்தியவெற்றி பெற்றமையை இவ்விரண்டாம் காண்டம் எடுத்தியம்புகிறது. தென்னாப்பிரிக்காவின் நேட்டால், இராமாநுசக் கவிராயரின் படைப்புத் தளத்தில் நேதளக் காண்டம் என்கிறது.

தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் நடத்திய போராட்டங்கள், வெற்றி முதலியவற்றின் பதிவுகளைச் செய்யுளாக இழிசினப்படலம் முதல் சாந்திப்படலம் வரை பதினான்கு பகுதிகளில் சத்தியோதயக் காண்டம் எடுத்துரைக்கிறது.

நான்காது காண்டமாகிய பாரதகாண்டம் பாரதத்தில் மகாத்மா நடத்திய போராட்ட வரலாற்றைப் பேசுகிறது.

ஐந்தாவது காண்டாகிய யுத்த காண்டம் மகாத்மாவின் சுதந்திரப் போராட்டத்தை எடுத்துரைக்கிறது. இக்காண்டத்தில் சௌரிசௌரா, பருதோலி நடவடிக்கைகள், அண்ணலின் எரவாடா சிறைவாசம் ஆகியவை பேசப்படுகின்றன.

ஆறாவது காண்டமாகிய மீட்சிக் காண்டம் தண்டி யாத்திரை முதல், பாரதம் பாகிசுதான் ஆகிய நாட்டுப் பிரிவினைக்கு அடிப்படையான விடுதலைத் தருணம் வரை எடுத்துரைக்கிறது.

ஏழாம் காண்டமாகிய சுயவாட்சிக் காண்டம் இந்திய சுதந்திரம் பெற்ற சூழல், அரசியல் நிலையைப் பேசுவதோடு மகாத்மாவின் இறுதியையும் பேசுகிறது.

எட்டாம் காண்டாகிய **மங்களக்காண்டம்** காந்தியடிகள் திருமால் உலகை அடைந்த முறைமையைச் சுட்டும் ஒரு படலத்துள் முடிவரைக்கிறது.

ஒன்பதாம் காண்டமாகிய **அப்ராக்கிருத பூர்வகாண்ம்** காந்தியடிகள் அவதாரம் என்பதன் நுட்பத்தை விவரிக்கும் செய்திகளை உள்ளடக்கியதாக அடைகிறது

விருத்தம் எனும் ஒண்பாவால் அமைந்து மாகாவியம் அமைகின்றது.

மகாத்மாவின் அருஞ்செயலைக் காப்பியமாக்கும் ஆசிரியர் எண்ணற்ற தொன்மங்களைத் தமது படைப்பில் கையாளுகின்றார். தொன்மங்கள் படைப்புத்தளத்தில் உவமையாக – உத்தியாகப் பல வகைகளில் ஆசிரியரால் கையாளப்படுகின்றது.

## இலக்கியப் படைப்பும் தொன்மமும் :

தொன்மம் என்பது இலக்கியப் படைப்பாகவும், இலக்கியத் திறனாய்வாகவும் உள்ளது என்ற கருத்து தொன்மத்திற்கும் இலக்கியப் படைப்பிற்கும் இடையேயான தொடர்பினைச் சுட்டுகிறது.

தொன்மங்கள் பொய்மையின் புகலிடம் அன்று; அவை வாழ்க்கை அனுபவங்களின் குறியீடுகளாகும். இத்தகு குறியீடுகள் இலக்கியப் படைப்பின் நோக்கத்தையும் செறிவையும் மிகுவிக்கின்றன. "பழமரபுக் கதையும் தொன்மையும் வனதேவதைக் கதையும் இலக்கியம் ஆகாது. ஆனால், இலக்கியப் படைப்பிற்கு மூலப்பொருளாக அமையும்" என்ற சூசன்லாங்கரின் கருத்து இங்கே அரண் செய்கிறது.

மேலும், இலக்கிய வடிவங்களின் தோற்றங்களுடன் தொன்மங்களை இணைத்துப் பேசும் நார்த்ராப்பிரை, தொன்மங்களை இலக்கியங்களின் அடிப்படை பொருளாகக் கூறுகின்றார். இலக்கியப் படைப்பிற்கும், தொன்மத்திற்கும் இடையேயான தொடர்பினை மகாத்மா காந்தி காவியம் வழியே காணலாம்.

## தொன்மம் உவமையாதல் :

உலகோர் உணர்ந்த தொன்மங்களைப் படைப்பாளிகள் தாங்கள் உணர்த்த இருக்கும் பொருளைப் புலப்படுத்த தமது கவிதைகளில் உவமையாக்குவார்.

முதற்காண்டமாகிய இளம்பருவக் காண்டத்தின் ஆற்றப்படலத்தில் நீரோட்டத்தில் ஏற்படும் நுரைகளைச் சுட்டுமிடத்து, அன்புசெய் ஈசன்போல் (1:1:59:4) என்பகிறார் கவிராயர்.

போர்பந்தர் எனும் சுதமை நகரைப் பற்றிய நகரப்படலத்தில்,

முத்துறை முகங்கள் மூதலி நகரும்
பத்தினு மேலாம் பலபதி நகரும்
அத்தின புரியும் அயோத்தியு மென்ன
மத்திய வரசின் மகிழ்தலை நகரும் (1:5:2)

என உவமை சுட்டப்படுகிறது. மேலும் நாமகள், பூமகள், பார்மகள் (1:5:3) என இந்துப் புராணத்தின் முப்பெரும் தேவியரும் சூழ அந்நகர் வளமிக்கதாக விளங்குகிறது என்பார். அதே படலத்தின் பிறிதொரு பாடலில் உம்பரின் உலகம் (1:5:68:2) என உவமிப்பார்.

நகரச் சிறப்பினை எடுத்துரைக்கும் படலத்தில் உயர்குடிப் பெண்டிர் இயல்பைக் கடவுள்தன்மை மற்றும் இயற்கையிறந்த நிகழ்வின் கூறுகளுடன் உவமித்து அடக்குவார். (1:6:58-47) இவ்வாறு மாகாவியம் முழுமையிலும் தொன்மங்களும் தொன்மக் கூறுகளும் பின்னிப் பிணைந்து உவமைகளாகப் பயின்று வருகின்றன.

### மகாத்மாவின் பிறப்பும் தெய்வீகமும் :

இராசகோட்டு உள்ளிட்ட சமசுதானங்களின் திவானாக இருந்த கரம்சந்து காந்திக்கும் புத்லிபாய்க்கும் இளையமகனாகத் தோன்றியவர் மோகன்காந்தி! அப்பிறப்பினை, இராமாநுசக் கவிராயர், தெய்வீகத் தன்மைகளையும் தொன்மக் கூறுகளையும் பிணைத்துப் பேசுவார்.

அரும்பிரசாதத்தைக் கோவிலில் பெற்ற கரம்சந்திரர் அதனைத் தன்மனையாளாகிய புத்லிபாய்க்கு அளித்தார். அதன் விளைவாகக் கருவுயிர்த்தாள். அதனை,

திரிபுரம் எரித்தான் திகழ்சிறு நகையால்
எரிமத வலனும் எண்ணியல் வழியாற்
பெருமிதம் அடையும் பீரங்கி பிறவும்
கருமுதற் கலங்குங் கருவுயிர்க் கனிநாள் (1:7:68)

எனச்சுட்டும் ஆசிரியர், காந்தியடிகள் பிறந்தபோது, பகல் பொழுது

மிளிர்ந்தது, குழைமலர்கள் மணந்தன எனப்பல நிகழ்வுகளின் சிறப்புக்களைப் பட்டியலிடுகிறார். மகாத்மாவின் பிறப்பின் சிறப்பினை உற்பவப் படலத்தில் பதினைந்து பாடல்களால் ஆசிரியர் சிறப்பித்துப் பாடுவார்.

### சிரவண சரிதம் :

தன்னைப் பெற்ற பெரியோரைக் கடவுளாய் வணங்கும் கட்டுப்பாடு உடையவர் காந்தியடிகள்! அவரது சத்தியமும் நேர்மையும் நெஞ்சுறுதியும் இளம்பருவத்தில் அவர்கேட்ட இந்திய ஆன்மிகக் கதைகளின் அடிப்படையில் எழுந்தவை ஆகும். தமது சுயசரிதையில் காந்தியடிகள் இதனை விளக்கி எழுதுவார். இவ்வுண்மை நிகழ்வை இராமாநுசக் கவிராயர்.

சிரவணன் முன்னாட் சிந்தையிற் கனிந்து
அரியநற் பெற்றோர்க்கு அரும்பணி அதனில்
உரியநல் உயிரும் உகுத்த நற்சரிதம்
பருகினன் கனிந்து பார்முனர் அறியா (1:7:139)

எனப் பாடுவார். சிரவணன் பெற்றோர் பக்தி நாடகமே காந்தியடிகளைப் பெற்றோரிடத்து உண்மையான புதல்வனாய்ப் பொலியச் செய்தது. அவரது தொண்டுணர்வு சிரவணன் என்ற தொன்மம் பாத்திரத்தின் வார்ப்பு எனில் மிகையன்று.

### இராமரும் சீதையும் :

இந்தியாவின் இருபெரும் இதிகாசங்கள் இராமாயணமும் மகாபாரதமும்! விவ்விரண்டவனுள் கவிராயர் இராமர் சரித்திரத்தை அதிகமாகவே தமது மகாத்மா காந்தி காவியத்தில் கையாளுகிறார். வாய்ப்புக் கிடைக்கும் இடங்களில் இராமனோடு ஒருங்கு வைத்து காந்தியடிகளை உயர்த்துவார்.

காந்தியடிகளுக்கும் கசுதூரிபாய் அம்மையாருக்கும் நடக்க இருக்கும் திருமணம் பற்றிப்பேசும் திருமணப் படலத்தில், இராமாயணச் செய்தியை, இணைத்துப் பேசுகிறார்.

தென்றலும் இன்மலர்த் தெரிவை தேடிடும்
நான்றுயர் நாயகன் நளினம் போல்வதை

இன்கணை மாரனும் ஈர்த்து வையகம்

முன்வலன் அரக்கியால் முகந்து வந்ததே (1:9:44)

தென்றல் காந்தியடிகளின் திருமேனியில் வீசித் தழுவ முயன்ற நிகழ்வு சீதைக்கு உரிய இராமபிரானது மார்பைச் சூர்ப்பநகை கவர முயன்றமை போன்று இருந்தது என்கிறார்.

சிற்றினத்தாருடன் சேர்ந்து தீயொழுக்கங்களைக் கைக்கொண்ட காந்தி, தமது தந்தையாரிடத்துத் தமது குற்றங்களைக் கடித வழியாக ஒப்புக் கொண்ட செய்திகளை உள்ளக்கிய படலம், மலினந்தீர்படலம் ஆகும். இப்படலத்துள், தந்தைசொல் மிக்க மந்திரமில்லை என்ற வாக்கிற்கு வடிவெடுத்த இராமனை மாதிரியாக்குகிறார் படைப்பாளி! அந்த வகையில், (1:10:34:1) என்ற இராமனின் செயல், காந்தியடிகளுக்கு உள்ளத்தில் உறுதியை அளிக்கிறது. பிறிதோரிடத்திலும் கானகஞ்சென்ற மைந்தன் (1:10:71:1)என இராமன் முன் நிறுத்தப்படுகிறான்.

கீதையும் கிளரிராமன் கீர்த்திநற்சரிதம் கேட்டு (1:10:73:1) என்று கீதையும் இராமனது சரிதமும் ஒருங்கே சுட்டப்படுகின்றன.

காந்தியடிகள் பனிநாடாகிய இலண்டன் மாநகருக்குப் பயணம் கொள்ளும் பான்மையைப் பனிநாட்டுப் பயணப் படலத்தில் கவிராயர் காட்டுவார். கடல்கடந்து செல்லுதலை எதிர்க்கும் உறவினர்களைச் சுட்டும்போது அனுமன் கடல்கடந்து இலங்கை செல்ல முற்பட்டபோது மைநாகமலை எதிர்த்தன்மையை உவமையாக்குவார்.

முன்னை நாள் இலங்கை சென்றான் முனர்த்திரைக் கடலின்மீது

இன்னமை நாகம் போல எதிர்த்தனர் இயைபிற் சுற்றம் (1:11:29:1-2)

தென்னாப்பிரிக்கப் போராட்டத்தைச் சுட்டுமிடத்து, இளையவன் போலவன் இடரறாக் காலபன் (2:12:107:1) என இலக்குவனை உவமையாக்குவார்.

கொடும்போர்ப்படலம் என்ற ஆங்கிலேய - ஆதிக்கத்து எதிரான காந்தியடிகளின் போராட்டச் செய்தியை உள்ளடக்கிய படலத்துள் கொடுமனக் கூனியை நினைவுறுத்திப் பேசுவார்.

கூனியின் சொற்கேட்டுப் கொடுமைசெய் சிற்றன்னை

தான்இனி மனையாகத் தரிக்கிலன் எனும் தாதை

வானிட மிருந்தான் வாய்வாங்கின வரம்காணில்

மானிட வழியாக மணம்புணர்த் திலனேராம் (2:13:88)

வரம்பெற்ற கைகேயி வாழ்விழந்தமை சுட்டப்பட்டு ஆதிக்கவர்க்கம் கொடுத்த உறுதிமொழிகளின் உண்மை வினாவிற்கு உட்படுகிறது.

அவுரித் தொழிலாளர் சிக்கலைக் கூறும் சம்பரப்படலத்தில் (4:3) அதன் பழம்பெருமையைச் சுட்டுமிடத்து, சனகன்முன் ஆண்டநாடு (4:3:2:1) என்பார்.

பாரதநாட்டிற்குத் திரும்ப வந்த காந்தியடிகள், நம் நாட்டின் விடுதலை வேள்வியில் தீவிரமாயிருந்தார்; மேலும் அந்நிய ஆட்சியின் பேச்சு வார்த்தை நடத்துதல் முதலிய செயல்களில் இடையறாது ஈடுபட்டு அருஞ்செயலாற்றினார். அவரது தன்னலமற்ற தொண்டுள்ளம் கண்டு நமது நாட்டின் கவிஞராகிய தாகூர் அவருக்கு மகாத்மா என்ற பட்டம் அளித்துள்ளார். இச்செய்திகளை உள்ளடங்கிய முதற்படலத்தில் இராவணனது பத்துத்தலைகளை உவமையாக்கிப் பேசுவார் (5:17:320)

மீட்சிக் காண்டம் என்ற பகுதியில் திருப்பப் படலத்தில் காங்கிரசு நிலையைக் கூட முற்படும்போது அசோகவனத்தில் சீதையின் நிலையினை ஒத்தல் எனத் தலைப்பிட்டு,

சீதையின் சிறையில் மேதைய ளேனும்
பாதையொன் றுணராத் தீதுயிர் விடுப்ப
பால்மதி தருக்கீழ் மாலவ னாமம்
சால்புடன் உரைக்கும் வாலவன் கோலம்
கண்டபோற் காங்கிரசு கொண்ட பற்றலைவர்
மண்டிடச் சிறையில் துண்டுசெய் சின்னகன் (6:8:1-3)

எனச் சுட்டுவார். அசோகவனத்தில் சிறையிருந்த சீதையின் நிலை இரங்கத்தக்கதாக இருந்தது. தான் அமர்ந்திருந்த மரத்தின்கீழ் தூக்கிலிட்டுத் தற்கொலைக்கு முயலும்போது, சீதையைத் தேடியலைந்த அனுமன் வருகையும் அவனது இராமநாமமும் சீதையை உயிர்ப்பித்தன. அது போன்று, காங்கிரசுத் தலைவர்கள் பலர் சிறையிருந்தபோது சின்னா (சின்னகன்) பிரிவினை வாதம் பேசியவிடத்துக் காபர்கான் (காபர்) பிரிவினையை மறுத்துப் பேசிய செயல் இருந்தது என்ற உவமை வாசித்து இன்புற வேண்டிய பகுதியாகும்.

### மகாபாரதச் செய்திகள் உவமையாதல் :

தென்னாப்பிரிக்காவின் இனவெறிக்கு எதிரான போராட்டத்தில், நிகழ்ந்தவற்றை உரைக்கும் மறுபோர்ப்படலம் என்ற பகுதியில் குருமன்னவர் திகழ் பஞ்சவர் வலம்போல் (3:8:55:4) என உவமை கூறுவார்.

சத்தியாகிரக விளக்கம் கூறும் பகுதியில், பிரகலாதன் பற்றிய செய்தி ஆசிரியரால் எடுத்தாளப்படுகிறது.

இனியநற் பிரகலதனை விடர்ப்பிதுர்த் துயரிற் காத்த எனவரும் பகுதி, சத்தியாகிரகம் தொடங்கிய காலத்தைச் சுட்டுகிறது.

சாந்திப்படலத்தில் குருமரபின் பெருஞ்சமரிற் குந்தி முன்னோன் குலைநடுங்கு மரவுயர்த்தோன் வெற்றிகாண தருஞ்சமரிற் சல்லியன் தனி ரதமாற்றில் தாடாளன் எனச் சுட்டுவார்.

இவ்வாறு காப்பியம் முழுமையிலும் உவமையாகவும் உத்தியாகவும் மகாபாரதம் பின்னிப் பிணைந்து வருகிறது.

### பிறசமயத் தொன்மங்கள் :

காப்பியத் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தினை அமைத்து வைணவக் கடவுளரைப் போற்றிப் பாடும் கவிராயர், சைவத் தொன்மங்களையும் கையாளுகின்றார்; இந்தியாவில் நிலவிய கிறித்தவச் சமயத் தொன்மங்களையும் கையாளுகின்றார்.

சத்தியோதயக் காண்டம் எனும் மூன்றாங்காண்டத்தில், முதற்போர்ப்படலம் எனும் பகுதியில் ஆயுதமின்றி சாந்தப்படையினர் வெற்றிபெறும் செயலைச் சுட்டுமிடத்து,

முடிமணி யன்றியோர் முள்ளின் மருடமாய்
வடிவுறுஞ் சிலுவையில் வாங்கும் வான்புகழ்
படியினிற் கருத்தரின் பரந்த சீடரே
படியதில் மீளவும் பதிமை செயும்போல் (3:6:56)

என இறைமகன் இயேசுவின் தியாகத்தை மகாத்மாவின் அமைதிப் போர்முறைக்கு உவமையாக்குகின்றார்.

மகாத்மா வணங்கிய கடவுள் இராமர்! ஆயினும் இயேசுவின் தியாகமும் தூய நெஞ்சமும் மகாத்மாவின் மனம் கவர்ந்தவை. அவற்றைக் கவிராயர் தமது காப்பியத்தில் உவமையாக்கல் சிறப்பினும் சிறப்பாகும்!

**காந்தியும் இராமரும் :**

மகாத்மா காந்தி காவியம் தொடங்கும்போது, நூலின் முகப்பில் சமர்ப்பணம் எனக் கவிதை ஒன்றை எழுதுகிறார் கவிரயார்,

நாமம் ரகுநாமம் பரந்தாமன் திருநாமம்
காமங்கழி காந்தி மகாத்மா தனிநாமம்
தாமோதரம் தர்மாற்புதம்
தகுஞானியர்க் கீதம்
சாமானியர் சர்வாற்புதர் சந்தோசித பூர்ணம்

என்ற பாடலில், இராமநாமம் போன்று காந்தி நாமம் தனி நாமம் என்று பேசுமிடத்து, காந்தியைக் கடவுளாக உயர்த்தும் பான்மையைக் காணமுடிகிறது.

இறுதிக் காண்டமாகிய அப்ராக்கிருத பூர்வகாண்டம் (9) காந்தியடிகளின் பேறுகளைச் சுட்டுகிறது. முன்வினை, முற்பிறவி தொடர்பாகப் பேசும் இக்காண்டத்தில் காந்தியடிகளுடன் சிதம்பரம்பிள்ளை, இராச கோபாலச்சாரியார் முதலாய விடுதலைப் போராட்டத்தலைவர்களின் பிறப்பினையும் சுட்டுகிறார்.

மேலும், தேவர்களில் சிலர் பரங்கியராகவும் பிறத்தல் என்ற தலைப்பிலும் சுட்டுவார். காந்தியார் பிறக்க இருக்கும் நாடுநகர் வருணனையும் அமைகிறது. இக்காப்பியத்தின் மையப்பொருள் காந்தி எனும் மனிதரை மனிதத் தெய்வமாக – பாரதத்தின் தொன்மக் கடவுளராகக் கருதும் படைப்பாளியின் மன உணர்வே ஆகும்.

அவ்வுணர்வு படைப்பாளியான இராமாநுசக் கவிராயரின் ஆழ்மனத்தின் வாயிலாகக் காப்பியம் முழுமையிலும் தொன்மை உத்தியாக, உவமையாக, மட்டுமல்லாது மையப்பொருளாகவும் அமைந்து படைப்பினை உயர்த்துகிறது.

# 15. கவிராயரின் கட்டபொம்மன் காதை

முனைவர் ஞா.ஸ்டீபன்
இணைப் பேராசிரியர்,
பல்கலைக் கழகத் தமிழியல் துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,

தமிழகத்தில் கதைப்பாடல்களுக்கு வளமான பகுதி தென்மாவட்டங்கள்தாம். குறிப்பாக, கன்னியாகுமரி, திருநெல்வேலி, தூத்துக்குடி, இராமநாதபுரம், மதுரை ஆகிய பகுதிகளிலிருந்து தோன்றிய கதைப்பாடல்கள் பல. அவற்றுள் சில கதைப்பாடல்கள் மக்கள் வழக்கில் நிலைபெற்றவை. அத்தகைய கதைப்பாடல்களுள் ஒன்றே கட்டபொம்மன் கதையாகும். இக்கதை கும்மி, சிந்து, நாடகம், வில்லுப்பாடல் ஆகிய வடிவங்களில் வழக்கில் இருந்தது. வாய்மொழி மரபில் மட்டுமல்லாமல் ஓலைச் சுவடி மரபிலும் அது வாழ்ந்தது. கட்டபொம்மன் காதை, கட்டபொம்மு கதை, வீரபாண்டியக் கட்டபொம்மு கதை எனப் பல பெயர்களில் பல வடிவங்களாக வழக்கில் இருந்தது. ஒவ்வொரு வடிவமும் வெவ்வேறு நிகழ்வுகளை முதன்மையாகக் கொண்டு அமைந்துள்ளன. நாட்டார் மரபில் செல்வாக்குச் செலுத்தி வந்த இக்காதைப்பாடல் எழுத்து மரபிலும் படைப்பாளிகளின் கவனத்தை ஈர்த்தது என்பதற்கு இராமாநுசக் கவிராயரின் கட்டபொம்மன் காதை சான்றாக அமைந்துள்ளது. எழுத்து மரபு சார்ந்த இப்படைப்பு நாட்டார் மரபை எவ்வாறு கையாண்டுள்ளது என்பதை விளக்க முயல்வோம்.

பாக்கள் மரபில் நீண்டகாலமாகச் செல்வாக்குச் செலுத்தி வரும் பழங்கதைகள், கதைக்கூறுகள், தொன்மங்கள் போன்றவற்றைப் படைப்பாளிகள் தங்களது படைப்பாக்கத்திற்குப் பயன்படுத்துவது இயல்பு. இராமாயணம், மகாபாரதம் போன்றவை இந்திய எழுத்து மரபில் எண்ணற்ற இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளன என்பதை அறிவோம். தமிழ் மரபிலும் இது புதியதன்று. சிலப்பதிகாரம் அவ்வாறு தோன்றிய ஒரு காப்பியம் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

ஒரு படைப்பை அடிப்படையாகக் கொண்டு மற்றொரு படைப்புத் தோன்றுவதை இலக்கண நூலார் தழுவல், வழி நூல் என்று அடையாளப்படுத்துவர். இவ்வகையில் மொழிபெயர்ப்பு மற்றொரு இனம் ஆகும். ஒரு பனுவல் அல்லது ஒரு படைப்பு வாசகத்தளத்தில் வளந்த பின்னர் அந்த பனுவலின் எல்லை கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதன்று. வாசகன் தனது வாசிப்புத் தளத்தில் அதை எல்லையற்ற பனுவல்களாக மாற்றிக் கொள்வான் என்பது பின்னை நவீனத்துவம் சிந்தனை. இதனைப் போன்றே வாய்மொழி மரபும் ஒரு பனுவலை எல்லையற்ற வடிவங்களாக விரித்துக் கொள்கின்றது. எழுத்துமரபு, பனுவலாக்கம் அல்லது படைப்பாக்கத்தில் வாய்மொழி மரபோடு கொள்வினை உறவு வைத்துள்ளது என்பதை மிக எளிதில் நிறுவ இயலும். இதற்கு இராமாநுசக் கவிராயரின் கட்டபொம்மன் காதை தக்க சான்று என்பதை மறுக்க இயலாது.

தி.கா.இராமாநுசக் கவிராயரால் இயற்றப்பட்ட கட்டபொம்மன் காதை திருநெல்வேலி நகர் நம்மாழ்வார் சபையின் வெளியீடாக 1981இல் வெளிவந்துள்ளது. பாமர மக்கள் இன்னும் பாஞ்சாலங்குறிச்சி நிகழ்ச்சிகளை நாடோடிப் பாடல்களாக அனுபவித்து வருவதாலும் பழைய நிகழ்ச்சிகளுடன் ஏற்ற கற்பனைகளுடன் இந்தக் காதை செய்யுளில் வெளியிடப்படுகிறது என்று நூலின் முகவுரையில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஆரண்யப் படலத்தில் 81ஆவது செய்யுளில் சிலர் போற்றுவதும் சிலர் தூற்றுவதும் உண்டு. நெல்லை வாழ் இராமாநுசர் 'நீர் சொல்லும் நல்ல மாதவன் கதை'யை என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்வதாக அமைந்துள்ளது. இவ்விரு குறிப்புகளும் கட்டபொம்மன் காதை எதற்காக எழுதப்பட்டது என்பதை உணர்த்துகின்றன. ஏறத்தாழ 200 ஆண்டுகளாகக் கட்டபொம்மன் கதை வாய்மொழி மரபில் உயிர்த் துடிப்புடன் வழங்கப்படுகிறதே என்ற வியப்பும் அந்த மாவீரனைத் தூற்றுவாரும் உளரே என்ற ஏக்கமுமே கவிராயரை இந்தப்படைப்பை உருவாக்கத் தூண்டியுள்ளன என்பதை உணரமுடிகின்றது. மகாத்மா காந்தியின் மீது கவிராயருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு என்பதை அவரது மகாத்தமா காந்தி காவியமும் கட்டபொம்மன் காதையின் இறுதிப் படலமான சொற்போப் படலமும் உறுதி செய்கின்றன. காங்கிரசு இயக்கம்,

விடுதலைப்போர் ஆகியவை கவிஞரின் மனத்தில் பெரும் அதிர்வை ஏற்படுத்தியுள்ளன. இப்பின்னணியிலேயே விடுதலைப்போர் என்ற அடிக்கருத்தின் அடிப்படையில் கட்டபொம்மன காதையை ஒரு காப்பியமாக வழங்கும் முயற்சிகளில் இராமாநுசர் ஈடுபட்டுள்ளார். மேலும் இது வெளிவந்த காலம் (1981) இந்திராகாந்தி அம்மையார் பிரகடனப்படுத்திய நெருக்கடியின் கொடுமைகளைப் பேசத் தொடங்கிய காலம் என்பதையும் மனங்கொள்ள வேண்டும். எனவே மீண்டும் ஒரு விடுதலைப்போர் தேவை என்பதை கவிராயர் உணர்ந்திருக்கலாம் என்றும் கருத வாய்ப்புள்ளது.

கட்டபொம்மன் காதை இரண்டு காண்டங்களைக் கொண்டது. முதற்காண்டம் நான்கு படலங்களையும் இரண்டாவது காண்டம் பத்துப் படலங்களையும் கொண்டவை. மொத்தம் 1127 பாக்களால் இக்காதை அமைந்துள்ளது. தமிழ்க் காப்பிய மரபைப் பின்பற்றிக் காப்பிய வடிவமைப்பில் கதையை எடுத்துரைக்க முயன்றுள்ளார். ஆனால் காப்பிய வடிவத்தை நேர்த்தியாகக் கையாள இயலாமற்போயிற்று. முதற் காண்டத்தில் முதல் படலாமாக இடம்பெற்றுள்ள நெல்லைப் படலம் காப்பியங்களில் இடம்பெறும் நாடு வருணனை, நகர் வருணனை போல் அமைந்திப்பினும் நெல்லை நகரைக் கம்பராமாயண அயோத்தியைப் போலவோ சிலப்பதிகாரப் புகாரைப் போலவோ அமைக்க இயலவில்லை. நெல்லையை வருணிக்கும் கவிஞர் கதைக் களமான பாஞ்சாலங் குறிச்சியைத் தன் கள வருணைனைக்குள் கொண்டுவராது விட்டுவிடுகின்றார். நெல்லையின் வருணனையில் அதனை ஒரு கற்பனை நகரமாக மாற்றி விடுகின்றார்.

முதற்காண்டம், இரண்டாவது படலமான தொண்டமான் படலத்திலிருந்து கதை தொடங்குகின்றது. கதையின் தொடக்கமே பல போர்களில் வெற்றிகள் கண்ட கட்டபொம்மன் காட்டினில் ஒளிவதாக அமைகின்றது. கட்டபொம்மனுக்கு ஒரு நீண்ட பாரம்பரியமும் மக்கள் மனத்தை அவனது நற்பண்புகளினால் கொள்ளை கொண்ட பண்பும் உண்டு. அவனது பாட்டன் கட்டபொம்மு நாயக்கன் ஆர்க்காடு நவாப்பு காலத்தில் வரிகொடுக்க மறுத்தவன். அவனது கோட்டைக்கும் அவன் வாழ்ந்த மண்ணுக்கும் பல வீரக்கதைகள் உண்டு. இப்பிற்புலத்தைக்

கவிராயர் கட்டபொம்மன் என்ற மாவீரனைத் தனது காப்பியத்தில் அறிமுகம் செய்யும்போது விட்டுவிடுகின்றார். ஒரு வீரனின் கதையைப் பாதியில் தொடங்குவது போன்ற உணர்வை இக்காதை தருகின்றது. ஆங்கிலேய அரசு கட்டபொம்மனை ஒழித்துக்கட்ட இறுதியாக எடுத்த நடவடிக்கைகளிலிருந்தே கதை தொடங்குகின்றது. இதற்கு முன்பு வரி கொடுக்க மறுத்து ஒரு போர் நடந்து முடிந்தது. அப்போரில் ஆங்கிலேயப் படைவீரர்களை வெட்டி வீழ்த்தி வெற்றி பெறுகின்றான். தோற்றுப்போன ஆங்கிலேயப் படை பீரங்கிப்படைகளுடன் கோட்டையை முற்றுகை யிடுகின்றது. பீரங்கிப்படையை எதிர்கொள்ள இயலாமல் கட்டபொம்மன் தப்பித்துக் காட்டுக்குச் செல்கின்றான். அவனது தம்பி ஊமைத்துரை கைது செய்யப்பட்டு பாளையங்கோட்டைச் சிறையில் அடைக்கப்படுகின்றான். காட்டில் ஒளிந்த கட்டபொம்மன் ஆங்கிலேயப் படையை எதிர்க்க தன் படைபலத்தைப் பெருக்க வழிதேடுகின்றான். இந்த நிகழ்வுகள் சொல்லப்படாமல் கட்டபொம்மன் நகர் நீங்கிக் காட்டில் ஒளிதலிலிருந்து கதை சொல்லப்படுகின்றது.

நகர் நீங்கிக் காட்டில் ஒளிந்த கட்டபொம்மன் ஆங்கிலேயரை அடக்கச் சபதம் ஏற்று, தக்க வழிமுறைகளை ஆலோசிக்கின்றான்; தானாதிபதி அவனைத் தேற்றுகின்றான். புதுவை செல்லச் சாரணர் அறிவுறுத்த கட்டபொம்மன் மறுக்கின்றான். பின் புதுக்கோட்டை மன்னனைச் சந்தித்து ஆலோசனை பெறுகின்றான். புதுக்கோட்டை மன்னன் தனக்கு ஆதரவாக இல்லை என்பதை அறிந்து எவ்வாறாயினும் அடிபணியாமல் ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட முடிவுசெய்து காட்டுக்கு வருகிறான். காட்டில் ஆங்கிலேயப் படை சூழ்கின்றது. கடும்போர் தொடங்குகின்றது. போரில் கட்டபொம்மன் படை தோற்கடிக்கப்பட்டுக் கட்டபொம்மன் கைது செய்யப்பட்டுத் தூக்கிலிடப்படுகின்றான். கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட செய்தியறிந்து ஊமைத்துரை சிறையிலிருந்து தப்பிவந்து பாஞ்சாலங்குறிச்சியைக் காப்பாற்ற மறுபோர் நடத்துகின்றான். போரில் ஊமைத்துரை படுகாயமடைந்த போர்வீரன் ஒருவனின் தாயால் காப்பாற்றப்படுகின்றான். ஆங்கிலேயப் படை ஊமைத்துரையின் பிணத்தைத் தேடிக் காணாமையால் அவன் தப்பித்துவிட்டான் என அறிந்து வீடுகளில் சோதனையிடுகின்றனர்.

அம்மை நோயால் தன் மகன் இறந்து போனதாக ஊமைத்துரையைக் காப்பாற்றிய தாய் ஓலமிட ஆங்கிலேயப் படை அவன் வீட்டில் சோதனையிடாமல் செல்கிறது. உடல்நலம் தேறிய ஊமைத்துரை மருது சகோதரர்களோடு சேர்ந்ததை அறிந்த ஆங்கிலேயப் படை பல சூழ்ச்சிகளைக் கையாண்டு மருது சகோதரர்களையும் ஊமைத்துரை யையும் தோற்கடித்து ஊமைத்துரையைத் தூக்கிலிடுகின்றனர். இத்தோடு காதை நிறைவுறுகின்றது. ஆனால் கவிராயர் இறுதியாகச் சொற்போர் என்னும் படலத்தை அமைத்து காங்கிரசு இயக்கத்தின் தோற்ற வரலாற்றை எடுத்துரைத்துள்ளார். இந்த வீர வரலாற்றின் தொடர்ச்சியாகக் காங்கிரசு இயக்கத்தை இணைத்துக் காட்டுகின்றார்.

இக்கதையின் பிற்பகுதி அதாவது ஊமைத்துரை காப்பாற்றப்பட்டு மருது சகோதரர்களிடம் சென்றடைந்த பின்னர் நிகழ்ந்த நிகழ்வுகள் மிக வேகமாக எடுத்துரைக்கப்படுகின்றன. இப்பகுதியில் கவிராயர் கதையை விரைவில் முடித்துவிட வேண்டும் என்ற ஓர்மையுடன் இருந்திருப்பதாகத் தெரிகின்றது. கட்டபொம்மனைப் பற்றிப் பேசியதைவிட ஊமைத்துரை குறித்த நிகழ்வுகளே மிகுதியாகக் கதையில் பேசப்பட்டுள்ளன. கட்டபொம்மன், ஊமைத்துரை, மருது சகோதரர்கள் என மூன்று மாவீரர்களையும் இணைத்துப் பேசும் கதையாக அமைந்துள்ளது. ஏறத்தாழ இருபது ஆண்டுகள் நிகழ்ந்த போர் வாழ்க்கையை இக்கதை சித்திரித்துள்ளது.

வாய்மொழி மரபில் இவ்வரலாற்று நிகழ்வுகள் நான்கு தனித்தனிக் கதைப்பாடல்களாக வழங்குகின்றன. இந்தப் பரந்த எல்லையைக் கொண்ட கதைக்களம் ஒரு காப்பியத்திற்கான வாய்ப்பைப் பெற்றது. ஆனால் இக்களம் இராமாநுசரால் சுருக்கப்பட்டுவிட்டது. கதைப்பாடல்கள் எளிமையானவை. எல்லோராலும் எளிதில் புரியக்கூடியவை ; எளிதில் மனனம் செய்யத்தக்கவை. அத்தகைய பனுவலை இராமாநுசர் மிகக் கடினமான செய்யுள் நடையில் தந்துள்ளார். அவ்வாறாயின் அவரது வாசகத்தளம் ஆகிய யாருக்காக இது படைக்கப்பட்டது என்பது கவனத்திற்குரியது.

கட்டபொம்மன், ஊமைத்துரை குறித்த கதைப்பாடல்கள் அவர்கள் தூக்கிலிடப்பட்ட காலத்திலேயே வாய்மொழி மரபில் எழுந்துள்ளன.

கட்டபொம்மன் கதைப்பாடல் நூல்களை ஆங்கிலேய அரசு அழித்துள்ளது. கட்டபொம்மன் பெயரை வைக்கத் தடை விதித்தது. இருப்பினும் கதை ஏடுகளில் வாழ்ந்தது. இதைத் தொடர்ந்து கட்டபொம்மன் கதை பெரிய எழுத்துப் பதிப்புக்களாக வெளிவந்தது. பின்னர் ஏடுகளிலிருந்து கதை பதிப்பிக்கத் தொடங்கப்பட்டது. ஆனந்த விகடன் 1951இல் சித்திரக் கதைத் தொடராகக் கட்டபொம்மன் கதையை வெளியிட்டது. கட்டபொம்மன் வரலாறு என்ற நூலை சந்திரசேகரன் வெளியிட்ட பின்னர் நா.வானமாலை 1971இல் கட்டபொம்மு கதைப்பாடலையும், வீரபாண்டியக் கட்டபொம்மு கதையையும் 1983இல் வே.மாணிக்கம் கட்டபொம்மு கும்மிப்பாடலையும் பதிப்பித்தனர். இதுவரை வந்த தொகுப்புகள் அனைத்தும் ஓலைச் சுவடிகளை அடிப்படையாகக் கொண்டவை.

இராமாநுசக் கவிராயர் 1981இல் கட்டபொம்மன் கதையை வெளியிட்டுள்ளார். எனவே அவருக்கு வே.மாணிக்கத்துக்கு முந்திய பதிப்புகள் தெரிந்திருக்க வாய்ப்புள்ளது. தமிழ்த் திரைப்படம் தொடக்கக் காலத்தில் கதைப்பாடல்கள் பலவற்றைப் பயன்படுத்தின. அவற்றுள் கட்டபொம்மன் கதையும் அடங்கும். ஆனந்த விகடன் 1951இல் வெளியிட்ட கட்டபொம்மன் தொடர்கதை வெகுசன மக்களிடம் செல்வாக்குப் பெற்றது. இதனைப் போன்று நாவல்களும் திரைக்கதை ஆகியதுண்டு. அண்மையில் கலைஞர் கருணாநிதி அண்ணன்மார் சாமி கதையைப் பொன்னர் சங்கர் கதையாக வெளியிட்டது குறிப்பிடத்தக்கது. எனவே தமிழில் கதைப்பாடல்கள் காலந்தோறும் வகைமை மாற்றம் பெறுவது இயல்பாக இருந்துள்ளது. இந்த மரபோடு இணைத்துத்தான் இராமாநுசரின் படைப்பை அணுக வேண்டும்.

இராமாநுசரின் முயற்சியை வாய்மொழி மரபை எழுத்து மரபிற்குப் பெயர்க்கும் முயற்சி என அடையாளப்படுத்தலாம். அவரது கதையில் கட்டபொம்மன், ஊமைத்துரை ஆகிய வீரர்கள் முன் வைக்கப்பட்டதால் கதைத்தலைவனின் பாத்திரப்படைப்பு, வரலாற்று நிகழ்வுகளை மட்டும் கொண்டு கட்டப்பட்டது. நிகழ்வுகள் முதன்மை பெற்றதால் கதை எடுத்துரைப்பு பதநிலை வளர்ச்சிப் போக்கில் அமையாது போயிற்று. ஆங்கிலேயர் எதிர்ப்பு, சுதந்திரப்போரின் தொடக்கம் என்ற கனவுகளோடு

கவிராயர் இக்கதையை எடுத்தாண்டுள்ளார். எனவே காங்கிரசு இயக்கம், காந்தியடிகள், கட்டபொம்மன், ஊமைத்துரை, மருது சகோதரர்கள் என விரிந்த களத்தை எடுத்துக் கொண்டு அதற்கேற்றாற்போல் கதையை விரித்து எடுத்துரைக்கவில்லை. இருப்பினும் கதை எடுத்துரைப்பில் தான் முன்வைத்த வீரர்கள் அறிவியல் ஆயுதங்களைக் கொண்ட படையை நாட்டு ஆயுதங்களைக் கொண்டு வீரத்துடன் எதிர்த்தனர் என்றும் ஆயுத பலத்துக்கு எதிராக ஆள்பலம் பயன்படுத்தப்பட்டது என்றும் பதிவு செய்து காட்டியுள்ளார். காங்கிரசு இயக்கம் இதற்கு நேர்மாறாக, ஆயுத பலத்திற்கு எதிராக அகிம்சையை முன்வைத்தது என்பதையும் உணர்த்தியுள்ளார். வாய்மொழி மரபு சார்ந்த கட்டபொம்மன் கதைகளில் காணப்படும் வீரமும் சோகமும் இராமாநுசரின் எடுத்துரைப்பில் வலுவிழந்து காணப் படுகின்றன. பனுவலாக்கத்தில் வாய்மொழி மரபும் எழுத்து மரபும் வெவ்வேறானவை என்பதை இராமாநுசரின் படைப்பாக்கம் தெளிவு படுத்தியுள்ளது.



# மாநிலத் தமிழ்ச் சங்கம்

## பொறுப்பாளர் பட்டியல்

## 2012 - 2015

• • • • • • • • • • • • • • •

தலைவர் : சீர்மிகு இராமாநுசக் கள்ளப்பிரான்

பேசி : 0462 - 2334285

துணைத் தலைவர் : பாவலர் இளமுனைவர் த.மு.சா.காசா மைதீன்

பேசி : 9442892710

செயலாளர் : வழக்கறிஞர் மு.ப.அழகியநம்பி

பேசி : 0462 - 2579855

இணைச் செயலாளர் : முனைவர் பா.வளன் அரசு

பேசி : 7598399967

பொருளாளர் : சீர்மிகு நெ.சுப்பிரமணியன்

பேசி : 0462-2321719

செயற்குழு உறுப்பினர் :

சீர்மிகு ப.வெள்ளைச்சாமிபேசி : 0462-2552614

முனைவர் ச.கண்ணபிரான், பேசி : 0462-2330213

முனைவர் செ.பிரமசக்தி, பேசி : 9941420073

முனைவர் அ.நமசிவாயம், பேசி : 0462-2530303

இளமுனைவர் தி.முகுந்தன், பேசி : 0462-2351037

இளமுனைவர் கி.சவுந்தரராசன், பேசி : 0462-2572074

நல்லாசிரியர் க.ஞா.சாண்பீற்றர், பேசி : 0462-2582902

நல்லாசிரியர் வை.இராமசாமி, பேசி : 9442085939

புலவர் வீ.செந்தில்நாயகம், பேசி : 9442716041

திருமிகு உ.சிதம்பரப் பாண்டியன், பேசி : 9443065849

இளமுனைவர் கி.பிரபா, பேசி : 0462-2520029

திருமிகு மு.கனகராசு, பேசி : 0462-2500983

# பெரும்புலவர் இராமாநுசக் கவிராயரின் எழுத்தோவியங்கள்

1. M.K.Gandhi (English Drama) **1969**
2. மகாத்மாகாந்தி காவியம் முதல் புத்தகம், பாகம் 1 & 2 **(1975)**
3. மகாத்மாகாந்தி காவியம் இரண்டாம் புத்தகம், பாகம் 3 & 4 **(1977)**
4. மகாத்மாகாந்தி காவியம் மூன்றாம் புத்தகம், பாகம் 5 & 6 **(1978)**
5. மகாத்மாகாந்தி காவியம் நான்காம் புத்தகம், பாகம் 7, 8 & 9 **(1979)**
6. துளவன் துதித் தொகுப்பு (திருமால்மொழி, திருமால் ஒளி, திருமால் வழி, திருமால் எழில், திருமால் பொழில்) **(1979)**
7. **Lyrics of Life (1979)**
8. **Mudin (1979)**
9. **Bharath Reborn (1980)**
10. கோவிந்தபசனை **(1980)**
11. பூகந்த வெண்பா **(1980)**
12. கட்டபொம்மன் காதை **(1981)**
13. தனிப்பாடல் **(1981)**
14. **Mathematics and Man (1981)**
15. அராவகனதளம் **(1981)**
16. திருப்பாவை வியாக்கியானம் **(1982)**
17. **A Treatise on Hinduism (1983)**
18. திருவாய்மொழி வியாக்கியானம் **(2008)**
19. **Condensed Kamba Ramayanam in English Verse**
20. தத்துவ தரிசனம்

விமல் அச்சகம், பாளை. 9486190814